போகமென்றாலுள்ளமிகப்பூரிக்குமன்றிசிவ
யோகமென்றாலென்னுடையவுண்ணடுங்குஞ் - சோகமுடன் (௩௩உ)

துள்ளலொழிந்தென்னெஞ்சஞ்சோர்ந்தழியுங்காலத்திற்
கள்ளமென்றாலுள்ளேகளித்தெழும்பு - மள்ளனெறி (௩௩௩)

செல்லென்றாலன்றிச்சிவசிவாவென்றொருகாற்
சொல்லென்றாலென்றனக்குத்துக்கம்வரு - நல்லநெறி (௩௩௪)

வாம்பலன்கொண்டோர்கள்மறந்தும்பெறுக்கொடிய
சோம்பலென்பதென்னுடையசொந்தங்கா - ணேம்பலுடன் (௩௩௫)

எற்றேவிரக்கமென்பதென்றனைக்கண்டஞ்சியெனை
யுற்றேரையுமுடன்விட்டோடுங்காண் - சற்றேனும் (௩௩௬)

ஆக்கமேசேராதறத்துரத்துகின்றவெறுந்
தூக்கமேயென்றனக்குச்சோபனங்கா - ணூக்கமிகும் (௩௩௭)

ஏறுடையாய்நீறணியாவீனர்மனையாயினும்வெண்
சோறுகிடைத்தாலதுவேசொர்க்கங்காண் - வீறுகின்ற (௩௩௮)

வாழ்வுனைக்குநல்லமனத்தர்தமையென்ஞான்றுந்
தாழ்வுரைத்தலென்னுடையசாதகங்காண் - வேள்விசெயுந் (௩௩௯)

தொண்டர்தமைத்துதியாத்துட்டனைப்போலெப்பொழுதுஞ்
சண்டையென்பதென்றனுக்குத்தாய்தந்தை - கொண்டவெழு (௩௪0)

தாதாடவோங்கித்தலையாடவஞ்சரொடு
வாதாடவென்றாலென்வாய்துடிக்குங் - கோதாடச் (௩௪௧)

சிந்தைதிரிந்துழலுந்தீயனைப்போனற்றரும
நிந்தையென்பதென்பழையநேசங்காண் - முந்தநினை (௩௪உ)

எண்ணென்றாலன்றியிடர்செய்திடுங்கொடிய
பெண்ணென்றாற்றூக்கம்பிடியாது - பெண்களுடன் (௩௪௩)

புல்லென்றாற்றேகம்புளகிக்குமன்றிவிட்டு
நில்லென்றாலென்கண்ணினீரரும்பும் - புல்லவொன்ற (௩௪௪)

பேர்க்கும்விருப்பெய்தாதபெண்பேய்கள்வெய்யசிறு
நீர்க்குழியேயான்குளிக்குநீர்ப்பொய்கை - சீர்க்கனையின் (௩௪௫)

ஏறுப்பெண்மாதரிடைக்குளளிந்தென்று
மாறுப்புண்ணுக்கேயடிமைநான் - றேறுத (௩௪௬)

வெஞ்சலஞ்செய்மாயாவிகாரத்தினுல்வரும்வீண்
சஞ்சலமெல்லாமெனதுசம்பந்த - மஞ்செழுத்தை (௩௪௭)

நேர்ந்தார்க்கருள்புரியுநின்னடியர்தாமேயுஞ்
சார்ந்தாலதுபெரியசங்கட்ட - மார்ந்திமோன் (௩௪௮)

காந்தும்விழிப்புலியைக்கண்டதுபோனல்லருண
சாந்தமெனைக்கண்டாற்றலைசாய்க்கு - மாந்தகையோர் (ருசக)

சேரமனத்திற்செறிவித்திடும்புருட
தீரமெனைக்கண்டாற்சிரிக்குங்காண் - கோரமதைக் (ருருා)

காணிலுலகிற்கருத்துடையோர்கொள்ளுகின்ற
நாணமெனைக்கண்டுநோணுங்கா - ணேணுலகில் (ருருச)

ஞானங்கொளாவெனதுநாமமுனைத்தாலுமபி
மானம்பயங்கொண்டுமாய்ந்துவிடு - மான்வுன்றன் (ருருஉ)

கேண்மைக்குலத்தொண்டர்கீர்த்திபெறக்கொண்ட
வாண்மைக்குநானென்றுலாகாது - வாண்மைபெறும் (ருருரு)

ஐயநின்றுட்பூசிக்குமன்பருள்ளத்தன்பிற்கும்
பொய்யனெனக்கும்பொருத்தமில - வையகத்தோர் (ருருச)

இல்லெனினுஞ்சும்மாநீயீகின்றேனென்றெருசொற்
சொல்லெனினுஞ்சொல்லத்துணிவுகொளே - னல்லையெமக் (ருருரு)

கீயன்பாரன்றியன்னையென்பயத்தானின்சோற்றி
லீயென்பதற்குமிசையாள்கா - ணீயென்பார்க் (ருருசா)

கெண்ணுஞ்சிலர்மண்ணிடுவாரெனக்கந்த
மண்ணுங்கொடுக்கமனம்வாராது - அண்ணுறுமென் (ருருஎ)

இல்லையடைந்தேயிரப்பவருக்கெப்போது
மில்லையென்பதென்வாய்க்கியல்புகாண் - டொல்லுலகை (ருருஅ)

ஆண்டாலுமன்றியயலார்புன்கீரைமணிப்
பூண்டாலுமென்கண்பொறுக்காது - நீண்டவெழு (ருருகூ)

தீபமுறுவோர்திசையோர்மற்றியாவர்க்குங்
கோபமதுநான்கொடுக்கிலுண்டு - ஆபத்தில் (ருசா0)

வீசங்கொடுத்தெட்டுவீசமெனப்பிறரை
மோசஞ்செயநான்முதற்பாதம் - பாசமுளோர் (ருசாக)

கைக்குடையவேயெழுதிக்கட்டிவைத்தவிவ்வுலகப்
பொய்க்கதையேயான்படிக்கும்புத்தகங்கண் - மெய்ப்படுநின் (ருசாஉ)

மந்திரத்தையுச்சரியாவாயுடையேனென்போலத்
தந்திரத்திற்கைதேர்ந்தவரில்லை - யெந்தையினி (ருசாரு)

ஏதென்றுரைப்பேனிருங்கடல்சூழ்வையகத்திற்
சூதென்பதெல்லாமென்சுற்றங்கா - ணேதுகின்ற (ருசாச)

நஞ்சமெலாங்கூட்டிநவின்றிடினுமொவ்வாத
வஞ்சமெலாமென்கைவசங்கண்டா - யஞ்சவரும் (ருசாரு)

வீணவமாம்வஞ்சவினைக்குமுதலாகினின்ற
வாணவமேயென்காணியாட்சியதாம் - மாணிறைந்த (௩௬௬)

நல்லறிவேயென்னைநெடுநாட்பகைத்ததன்றிமற்றைப்
புல்லறிவேயென்னுட்பொருள்கண்டாய் - சொல்லவொணா (௩௬௭)

வேடருக்குங்கிட்டாதவெங்குணத்தாலிங்குழலு
மூடருக்குள்யானேமுதல்வன்காண் - வீடடுத்த (௩௬௮)

மேதையர்கள்வேண்டாவிலங்காய்த்திரிகின்ற
பேதையென்பதென்னுரிமைப்பேர்கண்டாய் - பேதமுற (௩௬௯)

ஓதுவதென்பற்பலவாயுற்றதவத்தோர்நீத்த
தீதுகளெல்லாமெனதுசெல்வங்கா - ணாதலினால் (௩௭௦)

பேயினையொத்திவ்வுலகிற்பித்தாகினின்றவிந்த
நாயினைநீயாண்டிடுதனன்கன்றே - யாயினுமுன் (௩௭௧)

மண்ணாருயிர்களுக்கும்வானவர்க்குந்தானிரங்கி
யுண்ணாக்கொடுவிடமுமுண்டனையே - யெண்ணாமல் (௩௭௨)

வேய்த்தவளவெற்பெடுத்தவெய்யவரக்கன்றனக்கும்
வாய்த்தவரமெல்லாம்வழங்கினையே - சாய்த்தமன (௩௭௩)

வீம்புடையவன்முனிவர்வேள்விசெய்துவிட்டகொடும்
பாம்பையெல்லாந்தோளிற்பரித்தனையே - நாம்பெரியர் (௩௭௪)

எஞ்சேமென்றாணவத்தாலேற்றவிருவனையு
மஞ்சேலென்றாட்கொண்டருளினையே - துஞ்சுபன்றித் (௩௭௫)

தோயாக்குருளைகளின்றுன்பம்பொறாதன்று
தாயாய்முலைப்பாலுந்தந்தனையே - வாயிசைக்குப் (௩௭௬)

பாண்டியன்முன்சொல்லிவந்தபாணன்பொருட்டடிமை
வேண்டிவிறகெடுத்துவிற்றனையே - யாண்டொருநாள் (௩௭௭)

வாய்முடியாத்துன்புகொண்டவந்திக்கோராளாகித்
தூய்முடிமேன்மண்ணுஞ்சுமந்தனையே - யாய்துயர (௩௭௮)

மாகவஞ்சேர்மாணிக்கவாசகருக்காய்க்குதிரைச்
சேவகன்போல்வீதிதனிற்சென்றனையே - மாவிசயன் (௩௭௯)

வில்லடிக்குநெஞ்சம்விரும்பியதல்லாலெறிந்த
கல்லடிக்குமுள்ளங்களித்தனையே - மல்லலுறும் (௩௮௦)

வில்வக்கிளையுதிர்த்தவெய்யமுசுக்கலையைச்
செல்வத்துணைமகனாய்ச்செய்தனையே - சொல்லகலின் (௩௮௧)

நீளுகின்றமெய்யருந்தநேயொலியைமூவுலகு
மாளுகின்றமன்னவனாயாக்கினையே - கோளகல (௩௮௨)

வாய்ச்சங்குநூலிழைத்தவாய்ச்சிலம்பிதன்னையுயர்
கோச்செங்கட்சோழனெனக்கூட்டினையே - யேச்சறுநல் (கூஅங)

* ஆறடுத்தவாகீசர்க்காம்பசியைக்கண்டுகேட்டுச்
சோறெடுத்துப்பின்னேசுமந்தனையே - கூறுகின்ற (கூஅச)

தொன்மைபெறுஞ்சுந்தரர்க்குத்தோழனென்று பெண்பரவை
நன்மனைக்குத்தூதுநடந்தனையே - நன்மைபெற (கூஅரு)

இற்றென்றவிற்றென்னுவெத்தனையோபேர்கள்செய்த
குற்றங்குணமாகக்கொண்டனையே - பற்றுலகில் (கூஅசு)

அன்புடையதாயர்களோராயிரம்பேரானுலு
மன்புடையாய்நின்னைப்போலாவாரோ - வின்பமுடன் (கூஅஎ)

ஈண்டவருந்தந்தையர்களெண்ணிலரோயாயினுமென்
னுண்டவனேநின்னைப்போலாவாரோ - பூண்டகைகொள் (கூஅஅ)

ஏனுடையநின்னையன்றியெந்தைபிரானேயுன்
னுணையெனக்குற்றதுணையாருமில்லை - நாணமுளன் (கூஅகூ)

ஆனேன்பிழைகளனைத்தினையுமையாநீ
தானேபொறுக்கத்தகுங்கண்டாய் - மேனோற்ற (கூகூ0)

மாற்றனுக்குமெட்டாமலர்க்கழலோய்நீயென்னைக்
கூற்றனுக்குக்காட்டிக்கொடுக்கற்க - பாற்றவள (கூகூக)

நந்தக்கடற்புவியினுனின்னும்வன்பிறவிப்
பந்தக்கடலழுந்தப்பண்ணற்க - முந்தைநெறி (கூகூஉ)

நின்றேயுன்பொற்றுணிணையாதார்பாழ்மனையிற்
சென்றேயுடலோம்பச்செய்யற்க - நன்றேநின் (கூகூங)

றூங்குநெறியோருளத்தமர்ந்தோயென்றன்னைத்
தீங்குநெறியிற்செலுத்தற்க - வீங்கடங்கி (கூகூச)

வாழியெனத்தான்வழுத்தினுமென்சொற்கடங்கா
வேழைமனத்தாலிளைக்கின்றேன் - வாழுமரக் (கூகூரு)

கோடேறும்பொல்லாக்குரங்கெனவேபொய்யுலகக்
காடேறுநெஞ்சாற்கலங்குகின்றேன் - பாடேறும் (கூகூசு)

உள்ளறியாமாயையெனுமுட்பகையார்க்காமமெனுங்
கள்ளறியாதுண்டுகேவல்கின்றேன் - றெள்ளுறுமென் (கூகூஎ)

கண்ணனையாய்நின்றாட்கமலங்களைவழுத்தா
மண்ணனையாற்பாற்போய்மயங்குகின்றேன் - றிண்ணமிலாக் (கூகூஅ)

காதரவாந்துன்பக்கவலைக்கடல்வீழ்ந்தே
யாதரவொன்றின்றியலைகின்றே - னேதுமறை (கூகூகூ)

யாத்தரெனுமுன்றனடியார்தமைக்கண்டு
நாத்திகஞ்சொல்வார்க்குநடுங்குகின்றேன் - பாத்துண்டே (ச00)

* ஆறு - எ-து, வழி.

உய்வதறியாவுளத்தினேனுய்யும்வகைச்
செய்வதறியேன்றிகைக்கின்றேன் - சைவநெறி (௪0௧)

யுண்ணிரம்புநின்கருணையுண்டோவிலையோவென்
றெண்ணியெண்ணியுள்ளமிளைக்கின்றேன் - மண்ணினிடைக் (௪0௨)

கொன்செய்கைகொண்டகொடுங்கூற்றன்குறுகிலதற்
கென்செய்வோமென்றெண்ணியேய்க்கின்றேன் - முன்செய்வினை (௪0௩)

யாமறையாநோயாலகமெலிவுற்றையோநான்
ஞமனையினீர்போற்றயங்குகின்றேன் - ஞமமுடி (௪0௪)

வள்ளலருள்கொடுக்கவந்திலனேயின்னுமென
வுள்ளமதுநீராயுருகுகின்றே - னெள்ளலுறு (௪0௫)

மாலைபாய்ந்தின்னுமெனவந்திடுமோவென்றுநெஞ்ச
மாலைபாய்ந்துள்ளமழிகின்றேன் - ஞாலமிசைக் (௪0௬)

கோட்பாரவாழ்க்கைக்கொடுஞ்சிறையினின்றென்னை
மீட்பாரிலாதுவிழிக்கின்றேன் - மீட்பாகும் (௪0௭)

ஆற்றிலொருகாலுமடங்காச்சமுசாரச்
சேற்றிலொருகாலும்வைத்துத்தேய்கின்றேன் - ஞேற்றுமயற் (௪0௮)

பாகமுறுவாழ்க்கையெனும்பாலைவனத்துன்னருணீர்த்
தாகமதுகொண்டேதவிக்கின்றேன் - மோகமதிற் (௪0௯)

போய்ப்படுமோர்பஞ்சப்பொறிகளால்வெம்பாம்பின்
வாய்ப்படுமோர்தேரையைப்போல்வாடுகின்றேன் - மாய்ப்பவரு (௪௧0)

மீன்போலுமாதர்விழியால்வலைப்பட்ட
மான்போலுஞ்சோர்ந்துமடங்குகின்றேன் - கான்போல (௪௧௧)

வீற்றுமுலகவிகாரப்பிரளயத்திற்
ஞேற்றுஞ்சுழியுட்சுழல்கின்றே - ஞற்றவுநான் (௪௧௨)

இப்பாரிலுன்மேலன்பில்லெனினுமன்பனென
வொப்பாரியேனுமுடையேன்காண் - டப்பாய்ந்த (௪௧௩)

மட்டுவிடேனுன்ஞண்மறக்கினும்வெண்ணீற்றுநெறி
விட்டுவிடேனென்றனைக்கைவிட்டுவிடே - னுட்டனென (௪௧௪)

மாலுந்திசைமுகனும்வானவரும்வந்துதடுத்
தாலுஞ்சிறியேனைத்தள்ளிவிடேல் - சாலுலக (௪௧௫)

வாதனைகொண்டோனென்றுமற்றெவராலுனும்வந்து
போதனைசெய்தாலுமெனைப்போக்கிவிடே - னீதயவு (௪௧௬)

சூழ்ந்திடுகவென்னையுநின்ஞெண்டருடன்சேர்த்தருள்க
வாழ்ந்திடுகநின்ஞண்மலர். (௪௧௭)

**திருச்சிற்றம்பலம்.**

## விண்ணப்பக்கலிவெண்பா.

முற்றிற்று.

உ

சிவமயம்.

சிவகணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# நெஞ்சறிவுறுத்தல்.



## காப்பு.

திருச்சிற்றம்பலம்.

### குறள்வெண்பா.

சீர்சான்ற முக்கட் சிவகளிற்றைச் சேர்ந்திடிலாம்
பேர்சான்ற வின்பம் பெரிது. (௧)

ஆறு முகத்தா னருளடையி னாமெல்லாப்
பேறு மிகத்தான் பெரிது. (௨)

திருச்சிற்றம்பலம்.

### கலிவெண்பா.

பொன்னார் மலைபோற் பொலிவுற் றசையாம
லெந்நாளும் வாழியநீ யென்னெஞ்சே - பின்னான (௧)

இப்பிறப்பி னோடிங் கெழுபிறப்பு மன்றியெனை
யெப்பிறப்பும் விட்டகலா வென்னெஞ்சே - செப்பமுடன் (௨)

செவ்வொருசார் நின்று சிறியேன் கிளக்கின்ற
விவ்வொருசொற் கேட்டிடுக வென்னெஞ்சே - யெவ்வெவ் (௩)

உலகும் பரவு மொருமுதலா யெங்கு
மிலகுஞ் சிவமா யிறையாய் - விலகும் (௪)

உருவா யுருவி லுருவா யுருவு
ளருவா யருவி லருவா - யுருவருவாய் (௫)

நித்தியமாய் நிர்க்குணமாய் நிற்சலமாய் நின்மலமாய்ச்
சத்தியமாய்ச் சத்துவமாய்த் தத்துவமாய் - முத்தியருள் (௬)

ஒன்றாய்ப் பலவா யுயிரா யுயிர்க்குயிராய்
நன்றாய் நவமாய் நடுநிலையாய் - நின்றோங்கும் (௭)

வேதமாய் வேதாந்த வித்தாய் விளங்குபர
நாதமாய் நாதாந்த நாயகமா - யோதுஞ் (அ)

செறிவாய்த் திரமாய்ச் சிதாகாச மாய்ச்சொல்
லறிவா யறிவு ளறிவாய் - நெறிமேவு (௯)

காலமாய்க் காலங் கடந்த கருத்தாய்நற்
சீலமாய்ச் சிற்பரமாய்ச் சின்மயமாய் - ஞாலம் (௧௦)

பொருந்தாப் பொருளாய்ப் பொருந்தும் பொருளாய்ப்
பெருந்தா ரகஞ்சூழ்ந்த பேறாய்த் - திருந்தாத (௧௧)

போக்கும் வரத்துமிலாப் பூரணமாய்ப் புண்ணியர்க
ளோக்குந் திறத்தெழுந்த நுண்ணுணர்வாய் - நீக்கமிலா (௧௨)

ஆதியா யாதிநடு வந்தமா யாங்ககன்ற
சோதியாய்ச் சோதியாச் சொற்பயனாய் - நீதியாய் (௧௩)

ஆங்கார நீக்கு மகார வுகாரமதா
யோங்கார மாயவற்றி னுட்பொருளாய்ப் - பாங்கான (௧௪)

சித்தமாய்ச் சித்தாந்த தேசாய்த் திகம்பரமாய்ச்
சத்தமாய்ச் சுத்த சதாநிலையாய் - வித்தமாய் (௧௫)

அண்டமா யண்டத் தணுவா யருளகண்டா
கண்டமா யானந்தா காரமதா - யண்டத்தின் (௧௬)

அப்பாலா யிப்பாலா யண்மையாய்ச் சேய்மையதா
யெப்பாலா யெப்பாலு மில்லதுமாய்ச் - செப்பாலும் (௧௭)

நெஞ்சாலுங் காய நிலையாலு மந்நிலைக்கு
ளஞ்சாலுங் காண்டற் கரும்பதமா - யெஞ்சாப் (௧௮)

பரமாய்ப் பராப்பொருளாய்ப் பாலாய்ச் சுவையின்
றரமாய்ப் பரப்பிரமந் தானாய் - வரமாய (௧௯)

ஒன்பான் வடிவா யொளியெண் குணக்கடலா
யன்பா யகநிலையா யற்புதமா - யின்பாய் (௨௦)

அகமாய்ப் புறமா யகம்புறமாய் நீங்குஞ்
சகமாய்ச் சகமாயை தானாய்ச் - சகமாயை (௨௧)

இல்லாதா யென்று மிருப்பதா யாதொன்றுங்
கொல்லாதார்க் கின்பங் கொடுப்பதா - யெல்லார்க்கும் (௨௨)

நண்ணுவதாய் நண்ணாதாய் நல்வினையா யல்வினையா
யெண்ணுவதா யெண்ணி னியலாதா - யெண்ணுகின்ற (௨௩)

வானாய் நிலனாய் வளியா யனலாய்நீர்
தானாய் வழிபடுநோன் றூன்றானாய் - வானதி (௨௪)

ஒன்றிடத்து மொன்ருதா யொன்றுவதா யானந்த
மன்றிடத்தி லென்றும் வதிவதா - யொன்றியதோர் (௨௫)

ஐந்நிறமா யந்நிறத்தி ஞெளியா யவ்வொளிக்கு
ளெந்நிறமும் வேண்டா வியனிறமாய் - முந்நிறத்திற் (௨௬)

பூப்பதுவாய்க் காப்பதுவாய்ப் போக்குவதாய்த் தேக்குவதாய்
நீப்பதுவாய்த் தன்னு ணிறுத்துவதாய்ப் - பூப்பதின்றி (௨௭)

வாளா திருப்பதுவாய் வாதனை தீதமதாய்
நீளாது நீண்ட நிலையினதாய் - மீளாப் (௨௮)

பெரிதாய்ச் சிறிதாய்ப் பெரிதுஞ் சிறிது
மரிதா யரிதி லரிதாய்த் - துரிய (௨௯)

வெளியாய்ப் பரவெளியாய் மேவுபர விந்தி
ஞெளியாய்ச் சிவானந்த வூற்ருய்த் - தெளியாதி (௩௦)

கற்பமாய்க் காணுஞ்சங் கற்ப விகற்பமாய்
நிற்பதா கார நிருவிகற்பாய்ப் - பொற்புடைய (௩௧)

முச்சுடராய் முச்சுடர்க்கு முன்னொளியாய்ப் பின்னொளியா
யெச்சுடரும் போதா வியற்சுடரா - யச்சில் (௩௨)

நிறைவாய்க் குறைவாய் நிறைகுறை வில்லாதாய்
மறைவாய் வெளியாய் மனுவாய் - மறையாத (௩௩)

சச்சிதா னந்தமதாய்த் தன்னிகரொன் றில்லாதாய்
விச்சையா லெல்லாம் விரிப்பதுவாய் - மெச்சுகின்ற (௩௪)

யோகமா யோகியா யோகத் தெழுந்தசிவ
போகமாய்ப் போகியாய்ப் போகமரு - ளேகமாய்க் (௩௫)

கேவலமாய்ச் சுத்த சகலமாய்க் கீழ்ச்சகல
கேவலங்கள் சற்றுங் கிடையாதாய் - மாவலத்தில் (௩௬)

காட்சியாய்க் காண்பானாய்க் காணப் படுபொருளாய்
சூட்சியாய்ச் சூட்சியாற் ருேய்வரிதாய் - மாட்சிபெறச் (௩௭)

செய்பவனாய்ச் செய்தொழிலாய்ச் செய்பொருளாய்ச் செய்தொழிலா
லுய்பவனா யுய்விக்கு முத்தமனாய் - மொய்கொள் (௩௮)

அதுவா யவளா யவனா யவையுங்
கதுவாது நின்ற கணிப்பாய்க் - கதுவாமல் (௩௯)

ஐயந் திரிபோ டறியாமை விட்டகற்றிப்
பொய்யென்ப தொன்றும் பொருந்தாராய்ச் - செய்யென்ற (௪௦)

ஓர்வினையி லின்பமுமற் றோர்வினையிற் றுன்பமுமாஞ்
சார்வினைவிட் டோங்குந் தகையினராய்ப் - பார்வினையில் (௪௧)

ஓர்பால் வெறுப்பு மற்றை யோர்பால் விருப்புமுறுஞ்
சார்பான் மயங்காத் தகையினராய்ச் - சார்பாய (௪௨)

ஓரிடத்திற் றண்மையுமற் றோரிடத்தில் வெஞ்சினமும்
பாரிடத்திற் கொள்ளாப் பரிசினராய் - நீரிடத்தில் (௪௩)

தண்மைநிக ராதென்றுஞ் சாந்தம் பழுத்துயர்ந்த
வொண்மையுட னென்றை யுணர்ந்தவராய் - வெண்மையிலா (௪௪)

ஒன்று மறிவி னுதயாதி யீறளவு
மென்று மிரண்டென்ப தில்லவராய் - மின்றவொளிர் (௪௫)

அம்மூன்றி னுள்ளே யடக்கிவரு மொன்றகன்ற
மும்மூன்றின் மூன்று முனிந்தவராய்த் - தம்மூன்றி (௪௬)

வீடாது நின்றும் விரிந்தும் விகற்பநடை
நாடாது நான்கு நசித்தவரா - யூடாக (௪௭)

எஞ்சாம லஞ்சி னிடமாய் நடமாடு
மஞ்சாதி யஞ்சு மறுத்தவரா - யெஞ்சாமல் (௪௮)

ஈண்டாண் டருளு மிறையோர் தமையாறி
லாண்டாண்டு கண்டா றகன்றவரா - யீண்டாது (௪௯)

வாழியுற்ற வானோரும் வந்து தமக்கிரண்டோ
டேழியற்ற யேழு மிகந்தவரா - யூழியற்றக் (௫௦)

கட்டிநின்றுட் சோதியொன்று காணத்தொடங்குகின்றோ
ரொட்டுகின்ற வெட்டின்மே லெய்தினராய்க் - கட்டுகின்ற (௫௧)

தேன்றோய் கருணைச் சிவங்கலந்து தேக்குகின்ற
சான்றோர்த முள்ளந் தணவாதாய் - * மான்றமலத் (௫௨)

தாக்கொழிந்து தத்துவத்தின் சார்பாந் தனுவொழிந்து
வாக்கொழிந்து மாணு மனமொழிந்து - எக்கமுற (௫௩)

வாய்க்குஞ் சுகமொழிந்து மண்ணொழிந்து விண்ணொழிந்து
சாய்க்கு மிராப்பகலுந் தானொழிந்து — நீக்கொழிந்து (௫௪)

நானுமொழி யாதொழிந்து ஞானமொழி யாதொழிந்து
தானு மொழி யாமற் றானொழிந்து - மோனநிலை (௫௫)

நிற்கும் பிரம நிரதிசயா னந்தமதாய்
நிற்கும் பரம நிருத்தனெவன் - றற்பரமாய் (௫௬)

நின்றானெவனன்பர் நேயமனத் தேவிரைந்து
சென்றா னெவன்சர்வ தீர்த்தனெவன் - வன்றீமை (௫௭)

* மான்ற மலத்தாக்கு - எ-து, மயக்குதலைச் செய்கின்ற மலத்தி னெதிரீடு எனக்கொள்க.

இல்லா னெவன்யார்க்கு மீச னெவன்யாவும்
வல்லா னெவனந்தி வண்ணனெவன் - கல்லாலில் (௫௮)

சுட்டகன்ற ஞான சுகாதீதங் காட்டிமுற்றும்
விட்டகன்ற யோக விநோதனெவன் - மட்டகன்ற (௫௯)

அண்டங்க ளெல்லா மணுவி லடைத்தருளித்
திண்டங்கு மாறிருத்துஞ் சித்தனெவன் - பண்டங்கு (௬0)

வீயாச் சிறுபெண் விளையாட்டு ளண்டமெலாந்
தேயாது கூட்டுவிக்குஞ் சித்தனெவன் - யாயாதும் (௬௧)

வேண்டாமை வேண்டுவது மேவாத சித்தர்தமைத்
தீண்டாது தீண்டுகின்ற சித்தனெவ - னீண்டோது (௬௨)

பற்றுருவாய்ப் பற்றுப் பரவணுவி னுள்விளங்குஞ்
சிற்றுருவா யுள்ளொளிக்குஞ் சித்தனெவன் - மற்றுருவின் (௬௩)

வையாது வைத்துலகை மாவிந் திரசாலஞ்
செய்யாது செய்விக்குஞ் சித்தனெவ - னையாமல் (௬௪)

அப்பிடைவைப் பாமுலகி லாருயிரை மாயையெனுஞ்
செப்பிடைவைத் தாட்டுகின்ற சித்தனெவ - னெப்புறவே (௬௫)

நில்லாத காற்றை நிலையாக் கடத்தடைத்துச்
செல்லாது வைக்கின்ற சித்தனெவன் - பொல்லாத (௬௬)

வெம்பாம்பை மேலணிந்தோர் வெம்புற்றி னுள்ளிருந்தே
செம்பாம்பை யாட்டுகின்ற சித்தனெவன் - நம்பாங்கர் (௬௭)

ஒண்கையிற்று னொன்றின்றி யுண்ணின் றுயிர்களையூழ்த்
திண்கயிற்று னாட்டுகின்ற சித்தனெவன் - வண்கையுடைத் (௬௮)

தானசைந்தான் மற்றைச் சகமசையு மென்றுமறை
தேனசையச் சொல்கின்ற சித்தனெவ - னூனமின்றிப் (௬௯)

பேர்த்துயிர்க ளெல்லாமோர் பெண்பிள்ளை யின்வசமாய்ச்
சேர்த்து வருவிக்குஞ் சித்தனெவன் - போர்த்துமிக (௭0)

அல்லிரவுங் காலை யகிலமெலாந் தன்பதத்தோர்
சில்விரலிற் சேர்க்கின்ற சித்தனெவன் - பல்வகையாய்க் (௭௧)

கைகலந்த வன்மைக் கருப்பா சயப்பையுட்
செய்கருவுக் கூட்டுவிக்குஞ் சித்தனெவ - னுய்கருவை (௭௨)

மெய்வைத்த வேர்வையினும் வீழ்நிலத்து மண்டத்துஞ்
செய்வித்தங் கூட்டுவிக்குஞ் சித்தனெவ - னுய்விக்கும் (௭௩)

வித்தொன்று மின்றி விளைவித் தருளளிக்குஞ்
சித்தென்றும் வல்லவொரு சித்தனெவன் - சத்துடனே (௭௪)

உற்பத்தி யாயுலகி லொன்பதுவாய்ப் பாவைகள்செய்
சிற்பத் தொழில்வல்ல சித்தனெவன் - பற்பலவாங் (௭௫)

காரா ழிகளைக் கரையின்றி யெல்லையிலாச்
சேருழி நிற்கவைத்த சித்தனெவன் - பேராத (௭௬)

நீர்மே னெருப்பை நிலையுறவைத் தெவ்வுலகுஞ்
சீர்மே வுறச்செய்யுஞ் சித்தனெவன் - பாராதி (௭௭)

ஐந்திலைந்து நான்கொருமூன் றாமிரண்டொன் றாய்முறையே
சிந்தையுற நின்றருளுஞ் சித்தனெவன் - பந்தமுற (௭௮)

ஆண்பெண்ணாய்ப் பெண்ணாணா யண்மை தனைவானிற்
சேண்பண்ண வல்லவொரு சித்தனெவன் - மாண்பண்ணாப் (௭௯)

பேடாணாய்ப் பெண்ணாயப் பெண்ணாண் பெரும்பேடாய்ச்
சேடாகச் செய்யவல்ல சித்தனெவன் - சேடாய (௮௦)

வெண்மை கிழமாய் விருத்தமந்த வெண்மையதாய்த்
திண்மை பெறச்செய்யுஞ் சித்தனெவ - னெண்மையிலா (௮௧)

ஓட்டினைச்செம் பொன்னா யுயர்செம்பொன் னோடாகச்
சேட்டையறச் செய்கின்ற சித்தனெவன் - காட்டிலுறு (௮௨)

காஞ்சிரத்தைக் கற்பகமாய்க் கற்பகத்தைக் காஞ்சிரமாய்த்
தேஞ்சிவணச் செய்கின்ற சித்தனெவன் - வாஞ்சையுற (௮௩)

நாரணன்சேய் நான்முகனாய் நான்முகன்சேய் நாரணனாய்ச்
சீரணவச் செய்யவல்ல சித்தனெவன் - பேரணவக் (௮௪)

கொம்மை பெறுங்கோடா கோடியண்ட மெல்லாமோர்
செம்மயிர்க்கா லுட்புகுத்துஞ் சித்தனெவன் - செம்மையிலா (௮௫)

வெம்புலியை வெண்பால் விளைபசுவா யப்பசுவைச்
செம்புலியாய்ச் செய்யவல்ல சித்தனெவ - னம்புலியை (௮௬)

அங்கதிரொண் செங்கதிரா யம்புலியாய்ப் பம்புகின்ற
செங்கதிரைச் செய்யவல்ல சித்தனெவன் - றுங்கமுறு (௮௭)

ஓரணுவோர் மாமலையா யோர்மா மலையதுவோர்
சீரணுவாய்ச் செய்யவல்ல சித்தனெவன் - வீரமுடன் (௮௮)

முன்னகையா நின்றதொரு முப்புரத்தை யன்றொருகாற்
சின்னகையாற் றீமடுத்த சித்தனெவன் - முன்னயன்மால் (௮௯)

மற்றிருந்த வானவரும் வாய்ந்தசைக்கா வண்ணமொரு
¶ சிற்றுரும்பை நாட்டிநின்ற சித்தனெவன் - மற்றவர்போல் (௯௦)

---

¶ சில் - துரும்பெனப்பிரித்து - அற்பமாகிய துரும்பெனப் பொருள் கொள்க.

அல்லா வயனு மரியு முருத்திரனும்
செல்லா நெறிநின்ற சித்தனெவ - னெல்லாத (௯௧)

கல்லிற் சுவையாய்க் கனியிற் சுவையிலதாய்ச்
செல்லப் பணிக்கவல்ல சித்தனெவ - னல்லலறப் (௯௨)

பார்க்கின்ற யாவர்கட்கும் பாவனு தீதனெனச்
சீர்க்கின்ற மெய்ஞ்ஞானச் சித்தனெவன் - மார்க்கங்கள் (௯௩)

ஒன்றென்ற மேலவனை யொன்றென் றுரைத்தவர்பாற்
சென்றொன்றி நிற்கின்ற சித்தனெவ - னன்றொருநாள் (௯௪)

கல்லானை தின்னக் கரும்பளித்துப் பாண்டியன்வீண்
செல்லா தளித்தமகா சித்தனெவன் - சொல்லாத (௯௫)

ஒன்றே யிரண்டேமே லொன்றிரண்டே யென்பவற்றுட்
சென்றே நடுநின்ற சித்தனெவன் - சென்றேறும் (௯௬)

அத்திரத்தை மென்மலரா யம்மலரை யத்திரமாய்ச்
சித்திரத்தைப் பேசுவிக்குஞ் சித்தனெவ - னெத்தலுத்துஞ் (௯௭)

* சங்கமதே தாபரமாய்த் தாபரமே சங்கமதாய்ச்
செங்கையிடா தாற்றவல்ல சித்தனெவன் - றங்குகின்ற (௯௮)

சத்தெல்லா மாகிச் சயம்புவா யானந்தச்
சித்தெல்லாம் வல்ல சிவ சித்தனெவன் - றத்தெல்லாம் (௯௯)

நீட்டாது நெஞ்ச நிலத்தவர்க்குந் தன்னுண்மை
காட்டாது காட்டிநிற்குங் கள்வனெவன் - பாட்டோடு (௧00)

வண்டாலுங் கொன்றை மலரோ யெனமறைகள்
கண்டாலுங் காணாத கள்வனெவன் - றெண்டாக (௧0௧)

அள்ளஞ் செறியார்க்கே யன்றி யறிவார்க்குக்
கள்ளஞ் செறியாத கள்வனெவ - னெள்ளலறக் (௧0௨)

கொண்டவெலாந் தன்பாற் கொடுக்குமவர் தம்மிடத்திற்
கண்டவெலாங் கொள்ளைகொளுங் கள்வனெவன் - கொண்டுளத்தில் (௧0௩)

தன்னையொளிக் கின்றோர்க டம்முளொளித் துள்ளவெலாங்
கன்னமிடக் கைவந்த கள்வனெவன் - மன்னுலகைச் (௧0௪)

சற்பனைசெய் கின்றதிரோ தானமெனுஞ் சத்தியினாற்
கற்பனைசெய் தேமயக்குங் கள்வனெவன் - முற்படமித் (௧0௫)

தொண்டலகி லுள்ளவுயிர் தோறுமொளித் தாற்றலெலாங்
கண்டுலவு கின்றதொரு கள்வனெவன் - விண்டகலா (௧0௬)

* சங்கமம் - எ-து சங்கமென விகாரமாயிற்று.

மண்மயக்கும் பொன்மயக்கு மாதர் மயக்குமெனுங்
கண்மயக்கங் காட்டிநிற்குங் கள்வனெவ - னுண்மயக்கு (க0எ)

மாசு பறிக்கு மதியுடையோர் தம்முடைய
காசு பறிக்கின்ற கள்வனெவ - ஞசகன்ற (க0அ)

பெண்ணு லெவையும் பிறப்பித்து மற்றைநுதற்
கண்ணு லழிக்கின்ற கள்வனெவ - னெண்ணுது (க0கூ)

நானென்று நிற்கி னடுவேயங் நாணுணத்
தானென்று நிற்குஞ் சதுரனெவன் - மானென்ற (கக0)

மாயைதனைக் காட்டி மறைப்பித்தம் மாய்யயிற்றன்
சாயைதனைக் காட்டுஞ் சதுரனெவ - னேயமுடன் (ககக)

நான்மறையு நான்முகனு நாரணனு நாடுதொறுந்
தான்மறையு மேன்மைச் சதுரனெவன் - வான்மறையா (ககஉ)

முன்னை மறைக்கு முடிப்பொருளென் ருய்பவர்க்குந்
தன்னை மறைக்குஞ் சதுரனெவ - னுன்னுகின்ருேர் (ககங)

சித்தத்திற் சுத்த சிதாகாச மென்ருெருசிற்
சத்தத்திற் காட்டுஞ் சதுரனெவன் - முத்தனொன (ககச)

யாவ ரிருந்தா ரவர்காண வீற்றிருக்குந்
தேவர் புகழ்தலைமைத் தேவனெவன் - யாவர்களும் (ககரு)

இவ்வணத்த னிவ்விடத்த னிவ்வியல னென்றறியாச்
செவ்வணத்த ஞந்தலைமைத் தேவனெவன் - மெய்வணத்தோர் (ககசு)

தாம்வாழ வண்ட சராசரங்க டாம்வாழ
நாம்வாழத் தன்னுளாயா நான்மறைக - டாம்வாழச் (ககஎ)

சாருருவி னல்லருளே சத்தியாய் மெய்யறிவின்
சீருருவே யோருருவாந் தேவுனெவ - னீருருவு (ககஅ)

மொன்றென் றுணர வுணர்த்தி யடியருளஞ்
சென்றங் கமர்ந்தருளுந் தேவனெவ - னென்றென் றுந் (ககக)

தற்சகச மென்றே சமயஞ் சமரசமாஞ்
சிற்சபையில் வாழ்கின்ற தேவனெவன் - பிற்படுமோர் (கஉ0)

பொய்விட்டு மெய்ந்நெறியைப் போற்றித்தற் போதத்தைக்
கைவிட் டுணர்வே கடைப்பிடித்து - நெய்விட்ட (கஉக)

தீப்போற் கனலுஞ் செருக்கறவே செங்கமலப்
பூப்போலுந் தன்ருட் புணைபற்றிக் - காப்பாய (கஉஉ)

வெண்ணீ றணிந்து விதிர்விதிர்த்து மெய்பொடிப்பக்
கண்ணீ ரருவி கலந்தாடி - யுண்ணீர்மை (கஉங)

என்புருகி யுள்ளுருகி யின்பா ருயிருருகி
யன்புருகி யன்புருவ மாகிப்பின் - வன்பகன்று (கஉ௪)

புண்ணியா திங்கட் புரிசடையாய் பொன்னிதழிக்
கண்ணியா வெங்கள் களைகண்ணே - யெண்ணியாங் (கஉ௫)

கன்பர்க் கருளு மரசே யமுதேயே
ரின்பக் கடலே யெமதுறவே - மன்பெற்று (கஉ௬)

மாற்றுயாப் பொன்னே மணியேயெங் கண்மணியே
யேற்றுவந்த மெய்ப்பொருளே யென்றுநிதம் - போற்றிநின்றால் (கஉ௭)

உள்ளூறி யுள்ளத் துணர்வூறி யவ்வுணர்வி
னள்ளூறி யண்ணித் தமுதூறித் - தெள்ளூறும் (கஉ௮)

வான்போற் பரவி மதிபோற் குளிர்ந்துயர்கோற்
றேன்போன் மதுரிக்குந் தேவனெவன் - வான்போனூர் (கஉ௯)

மாண்கொடுக்குந் தெய்வ மடந்தையர்க்கு மங்கலப்பொன்
ஞண்கொடுக்க நஞ்சுவந்த நாதனெவ - ஞண்மலர்ப்பெய் (க௩௦)

தார்த்தியாய்த் தேவ ரரகரவென் றேத்தவட்ட
மூர்த்தியாய் நின்ற முதல்வனெவன் - சீர்த்திபெற (க௩க)

ஈண்டற் புதவடிவா யெத்தேவ ரோனுநின்று
காண்டற் கரிதாங் கணேசனெவன் - வேண்டுற்றுப் (க௩உ)

பூமியெங்கும் வாழ்த்திப் புகழ்வார் விரும்புமிட்ட
காமியங்க ளீயுங் கணேசனெவ - ஞமியங்க (க௩௩)

ஏண வருமிடையூ றெல்லா மகற்றியருள்
காண வெமக்கீயுங் கணேசனெவன் - மாணவரு (க௩௪)

மூந்த மறையின் முழுப்பொருளை நான்முகற்குத்
தந்த வருட்கடலாஞ் சாமியெவன் - றந்தமக்காம் (க௩௫)

வாதகற்றி யுண்மை மரபளித்து வஞ்சமலக்
கோதகற்று நெஞ்சக் குகேசனெவன் - றீதகற்றித் (க௩௬)

தங்குமுல கங்கள் சாயாமற் செஞ்சடைமேற்
கங்கைதனைச் சேர்த்த கடவுளெவ - னெங்குநினுங் (க௩௭)

கூம்பா நிலைமைக் குணத்தோர் தொழுகின்ற
பாம்பா பரணப் பரமனெவன் - கூம்பாது (க௩௮)

போற்றுதைத்து நிற்கும் புனிதன்மேல் வந்தகொடுங்
கூற்றுதைத்த செந்தாட் குழகனெவ - ஞற்றலுறு (க௩௯)

வையந் துதிக்கு மகாலிங்க மூர்த்திமுத
லையைந்து மூர்த்தியெனு மையனெவ - னையந்தீர் (க௪௦)

வல்லார்சொல் வண்ணமெந்த வண்ணமந்த வண்ணங்க
ளெல்லா முடைய விதத்தனெவ - னெல்லார்க்குந் (கசுக)

தாந்தலைவ ராகத்தந் தாடொழுமெத் தேவர்க்கு
மாந்தலைமை யீந்தபர மார்த்தனெவன் - போந்துயிர்கள் (கசுஉ)

எங்கெங் கிருந்துமனத் தியாது விழைந்தாலு
மங்கங் கிருந்தளிக்கு மண்ணலெவன் - புங்கமிகும் (கசுரு)

அண்ணற் றிருமலர்க்கை யாழிபெறக் கண்ணிடந்த
கண்ணற் கருளியமுக் கண்ணனெவன் - மண்ணிடத்தில் (கசுச)

ஓயா துசூன்முதிர்ந்த வோர்பெண்ட னக்காகத்
தாயாகி வந்த தயாளனெவன் - சேயாக (கசுரு)

வேற்பிடித்த கண்ணப்பன் மேவுமெச்சில் வேண்டுமிதத்
தாற்பொசித்து நேர்ந்த தயாளனெவன் - பாற்குடத்தைத் (கசுசு)

தான்றந்தை யென்றெறிந்தோன் றுளெறிந்த தண்டிக்குத்
தான்றந்தை யான தயாளனெவன் - றூன்கொண்டு (கசுஎ)

சம்பு நறுங்கனியின் றன்விதையைத் தாள்பணிந்த
சம்பு முனிக்கீயுந் தயாளனெவ - னம்புவியில் (கசுஅ)

ஆண்டவனென் றேத்தப்பொன் னம்பலத்தி லானந்தத்
தாண்டவஞ்செய் கின்ற தயாளனெவன் - காண்டகைய (கசுகூ)

முத்துச் சிவிகையின்மேல் முன்காழி யோங்குமுழு
முத்தைத் தனிவைத்த முத்தனெவன் - பத்திபெறு (கரு0)

நாவொன் றரசர்க்கு நாந்தருவே நல்லூரில்
வாவென்று வாய்மலர்ந்த வள்ளலெவன் - பூவொன்று (கருக)

நன்றொண்டர் சுந்தரரை நாந்தடுக்க வந்தமையால்
வன்றொண்ட னீயென்ற வள்ளலெவ -னன்றொண்டிற் (கருஉ)

காணிக்கை யாகக் கருத்தளித்தார் தம்மொழியை
மாணிக்க மென்றுரைத்த வள்ளலெவன் - றூணிற்குந் (கருரு)

தன்னன்பர் தாம்வருந்திற் சற்றுந் தரியாது
மன்னன்ப ருளளிக்கும் வள்ளலெவன் முன்னன்பிற் (கருச)

சால்புடைய நல்லோர்க்குத் தண்ணருடந் தாட்கொளவோர்
மால்விடைமேல் வந்தருளும் வள்ளலெவன் - மான்முதலோர் (கருரு)

தாமலையா வண்ணந் தகையருளி யோங்கும்வெள்ளி
மாமலைவாழ் கின்றவருள் வள்ளலெவ - னுமவனே (கருசு)

நம்மைப் பணிகொண்டு நாரணனு நாடரிதாஞ்
செம்மைக் கதியருணந் தெய்வங்கா - ணெம்மையினும் (கருஎ)

நாடக் கிடைத்த னமக்கன்றி நான்முகற்குந்
தேடக் கிடையாநந் தெய்வங்கா - ணீடச்சீர் (க௫௮)

நல்வந் தனைசெய்யு நம்போல்வார்க் கோர்ஞானச்
செல்வந் தருநமது தெய்வங்காண் - சொல்வந்த (க௫௯)

எண்மைபெறு நாமுலகி லென்றும் பிறந்திறவாத்
திண்மை யளித்தருணந் தெய்வங்காண் - வண்மையுற (க௬0)

முப்பாழ் கடந்த முழுப்பாழுக் கப்பாலைச்
செப்பாது செப்புறுநந் தேசிகன்காண் - டப்பாது (க௬க)

தீரா விடும்பைத் திரிதென்ப தியாதொன்றுஞ்
சேரா நெறியருணந் தேசிகன்கா - ணூராது (க௬௨)

நித்தந் தெரியா நிலைமே வியநமது
சித்தந் தெளிவிக்குந் தேசிகன்காண் - பித்தனொ (க௬௩)

யாதொன்றுந் தேரா திருந்தநமக் கிவ்வுலகந்
தீதென் றறிவித்த தேசிகன்காண் - கோதின்றி (க௬௪)

ஓசைபெறு கடல்சூ ழுற்ற வுலகினம்மை
யாசை யுடனீன்ற வப்பன்காண் - மாசுறவே (க௬௫)

வன்பாய் வளர்க்கின்ற மற்றையர் போலல்லாம
லன்பாய் நமைவளர்க்கு மப்பன்கா - ணின்பாக (க௬௬)

இப்பாரிற் சேயா ரிதய மலர்ந்தம்மை
யப்பா வெனுநங்க ளப்பன்காண் - செப்பாமல் (க௬௭)

எள்ளித் திரிந்தாலு *மிந்தாவென் றின்னமுத
மள்ளிக் கொடுக்குநம தப்பன்கா - ணுள்ளிக்கொண் (க௬௮)

டின்றே யருள்வா யெனத்துதிக்கி லாங்குநமக்
கன்றே யருளுநம தப்பன்கா - ணன்றேமுன் (க௬௯)

‡ காதரவு செய்துநலங் கற்பித்துப் பின்பெரிய
வாதரவு செய்யுநங்க ளப்பன்காண் - கோதுறுமா (க௭0)

வஞ்சமலத் தால்வருந்தி வாடுகின்ற நந்தமையே
யஞ்சலஞ்ச லென்றருளு மப்பன்காண் - டுஞ்சலெனும் (க௭க)

நச்சென்ற வாதனையை நாளுமெண்ணி நாமஞ்சு
மச்சங் கெடுத்தாண்ட வப்பன்கா - * ணிச்சலுமிங் (க௭௨)

* இந்தா - எ-து, மருஉச்சொல் - அது - இதனைத் தரப்பெற்றுக்கொள்ளென்னும்பொருட்டு. அல்லதூஉம் இங்குவாவென்னும் எளிமைக்கண்ணியவேவலுமாம்.

‡ காதரவுசெய்தல் - எ-து, அச்சுறுத்தல். * நிச்சல் - எ-து, நாடோறும்.

கேயிரவு மெல்லு மெளியேம் பிழைத்தபிழை
யாயிரமுந் தான்பொறுக்கு மப்பன்காண் - சேயிரங்கா (கஎங)

முன்ன மெடுத்தணைத்து முத்தமிட்டுப் பாலருத்து
மன்னையினு மன்புடைய வப்பன்காண் - மன்னுலகில் (கஎச)

வன்மை யறப்பத்து மாதஞ் சுமந்துநமை
நன்மைதரப் பெற்ற நற்றாய்கா - ணிம்மைதனில் (கஎரு)

அன்றொருநா ணம்பசிகண் டந்தோ தரியாது
நன்றிரவிற் சோறளித்த நற்றாய்கா - ணென்றுமருட் (கஎசு)

செம்மையிலாச் சிறிய தேவர்கள்பாற் சேர்க்காது
நம்மை வளர்க்கின்ற நற்றாய்காண் - சும்மையென (கஎஎ)

மூளும் பெருங்குற்ற முன்னிமேன் மேற்செயினு
நாளும் பொறுத்தருளு நற்றாய்காண் - மூளுகின்ற (கஎஅ)

வன்னெறியிற் சென்றாலும் வாவென் றழைத்துநமை
நன்னெறியிற் சேர்க்கின்ற நற்றாய்காண் - செந்நெறியின் (கஎகூ)

நாந்தேடா முன்ன நமைத்தேடிப் பின்புதனை
நாந்தேடச் செய்கின்ற நற்றாய்கா - ணாந்தோறுந் (கஅ0)

கால மறிந்தே கனிவோடு நல்லருட்பான்
ஞால மிசையளிக்கு நற்றாய்காண் - சாலவுறு (கஅக)

வெம்பிணியும் வேதனையும் வேசறிக்கை யுந்துயரு
நம்பசியுந் தீர்த்தருளு நற்றாய்கா - ணம்புவியில் (கஅஉ)

வெந்நீரி லாட்டிடிலெம் மெய்நோகு மென்றருளா
நன்னீரி லாட்டுகின்ற நற்றாய்கா - ணெந்நீரின் (கஅங)

மேலாய் நமக்கு வியனுலகி லன்புடைய
நாலா யிரந்தாயி னற்றாய்கா - ணேலாது (கஅச)

வாடி யழுதாலெம் வருத்தந் தரியாது
நாடி யெடுத்தணைக்கு நற்றாய்கா - ணீடுலகில் (சஅரு)

தான்பாடக் கேட்டுத் தமியேன் களிக்குமுன்ன
நான்பாடக் கேட்டுவக்கு நற்றாய்காண் - வான்பாடும் (கஅசு)

ஞானமணஞ் செய்யருளா நங்கைதனைத் தந்துநமக்
கானமணஞ் செய்விக்கு மம்மான்காண் - டேனினுநெடும் (கஅஎ)

இன்பா லமுதாதி யேக்கமுற வின்னருள்கொண்
டன்பால் விருந்தளிக்கு மம்மான்காண் - வன்பாவ (கஅஅ)

வாழ்கடல்வீழ்ந் துள்ள மழுந்து நமையெடுத்துச்
சூழ்கரையி லேற்றுந் துணைவன்காண் - வீழ்குணத்தால் (கஅகூ)

இன்ப மெனைத்து மிதுவென் றறியாநந்
துன்பந் தொடைக்குந் துணைவன்காண் - வன்பவமாந் (கக௦)

தீநெறியிற் சென்று தியங்குகின்ற நந்தமக்குத்
தூநெறியைக் காட்டுந் துணைவன்காண் - மாநிலத்தில் (ககக)

இன்று தொட்டதன்றி யியற்கையாய் நந்தமக்குத்
தொன்றுதொட்டு வந்தவருட் சுற்றங்காண் - டொன்றுதொட்டே (ககஉ)

ஆயுமுடற் கன்புடைத்தா மாருயிரிற் றன்சிறந்த
நேயம்வைத்த நம்முடைய நேசன்காண் - பேயரென (ககங)

வாங்காது நாமே மறந்தாலு நம்மைவிட்டு
நீங்காத நம்முடைய நேசன்காண் - டீங்காக (ககச)

ஈட்டுகின்ற வாபத்தி லிந்தா வெனவருளை
நீட்டுகின்ற நம்முடைய நேசன்காண் - கூட்டுலகிற் (ககரு)

புல்லென்ற மாயையிடைப் போந்தோறு நம்மையிங்கு
நில்லென் றிருத்துகின்ற நேசன்காண் - சில்லென்றென் (ககசா)

உட்வேுந் தன்னைமறந் துண்டாலு மற்றதற்கு
நிட்ரேஞ் செய்யாத நேசன்கா - * ணட்டூர்ந்து (ககஎ)

வஞ்சமது நாமெண்ணி வாழ்ந்தாலுந் தான்சிறிது
நெஞ்சிலது வையாத நேசன்கா - ணெஞ்சலிலாப் (ககஅ)

பார்நின்ற நாங்கிடையாப் பண்டமெது வேண்டிடினு
நேர்நின் றளித்துவரு நேசன்கா - ணூர்வமுடன் (ககக)

ஆர்ந்தநமக் கிவ்விடத்து மவ்விடத்து மெவ்விடத்து
நேர்ந்தவுயிர் போற்கிடைத்த நேசன்காண் - சேர்ந்துமிகத் (உ௦௦)

தாபஞ்செய் குற்றந் தரினும் பொறுப்பதன்றிக்
கோபஞ் செயாநமது கோமான்காண் - பாபமற (உ௦க)

விள்ளுமிறை நாமன்பு மேவலன்றி வேற்றரசர்
கொள்ளுமிறை வாங்காநங் கோமான்கா - ணுள்ளமுற (உ௦உ)

உண்டளிக்கு மூணுடைபூ ணூரா திகடானே
கொண்டுநமக் கிங்களிக்குங் கோமான்காண் - மண்டலத்தில் (உ௦ங)

ஒன்றாலு நீங்கா துகங்கள் பல்பலவாய்ச்
சென்றாலுஞ் செல்லாநஞ் செல்வங்காண் - முன்றாவி (உ௦ச)

நாடிவைக்கு நல்லறிவோர் நாளுந் தவம்புரிந்து
தேடிவைத்த நம்முடைய செல்வங்காண் - மாடிருந்து (உ௦ரு)

* நட்டு-ஊர்ந்து-எனப்பிரித்து-நேசித்துச்சென்று-எனப்பொருள்கொள்க.

நாமெத் தனைநாளு நல்கிடினுந் தானுலவாச்
சேமித்த வைப்பின் றிரவியங்காண் - பூமிக்கண் (உ0சு)

ஈங்குறினும் வானுதி யாங்குறினும் விட்டகலா
தோங்கருளா னம்மை யுடையவன்கா - ணங்கவன்றன் (உ0எ)

கங்கைச் சடையழகுங் காதன்மிகு மச்சடைமேற்
றிங்கட் கொழுந்தின் றிருவழகுந் - திங்கடன்மேற் (உ0அ)

சார்ந்திலங்குங் கொன்றை மலர்த் தாரழகு மத்தார்மே
லார்ந்திலங்கும் வண்டி னணியழகுந் - தேர்ந்தவர்க்கும் (உ0கூ)

நோக்கரிய நோக்கழகும் நோக்கார் நுதலழகும்
போக்கரிய நன்னுதலிற் பொட்டழகுந் - தேக்குதிரி (உக0)

புண்டரத்தி னல்லழகும் பொன்னருடான் றன்னெழிலைக்
கண்டவர்பா லூற்றுகின்ற கண்ணழகுந் - தொண்டர்கடம் (உகக)

நேசித்த நெஞ்சமலர் நீடு மணமுகந்த
நாசித் திருக்குமிழி னல்லழகுந் - தேசுற்ற (உகஉ)

முல்லை முகையா முறுவலழகும் பவள
வெல்லை வளர்செவ் விதழழகு - நல்லவனாத் (உகங)

தேவென்ற தீம்பாலிற் றேன்கலந்தாற் போலினிக்க
வாவென் றருளுமலர் வாயழகும் - பூவொன்றும் (உகச)

கோன்பரவுஞ் சங்கக் குழையழகு மன்பர்மொழித்
தேன்பரவும் வள்ளைச் செவியழகு - நான்பரவி (உகரு)

வேட்டவையை நின்றாங்கு விண்ணப்பஞ் செய்யவது
கேட்டருளும் வார்செவியின் கேழழகு - நாட்டிலுயர் (உகசு)

சைவ முதலாய்த் தழைக்க வருள்சுரக்குந்
தெய்வ முகத்தின் றிருவழகுந் - தெய்வமுகத் (உகஎ)

துள்ளங் குளிர வுயிர்குளிர மெய்குளிரக்
கொள்ளுங் கருணைக் குறிப்பழகு - முள்ளறிவின் (உகஅ)

எள்ளாத மேன்மையுல கெல்லாந் தழைப்பவொளிர்
தெள்ளா ரமுதச் சிரிப்பழகு - முள்ளோங்குஞ் (உககூ)

சீல வருளின் றிறத்துக் கிலச்சினையா
நீல மணிமிடற்றி னீடழகு - மாலகற்றி (உஉ0)

வாழ்ந்தொளிரு மன்பர் மனம்போலும் வெண்ணீறு
சூழ்ந்தொளிகொண் டோங்குதிருத் தோளழகுந் - தாழ்ந்திலவாய்த் (உஉக)

தானேங்கு மண்டமெலாஞ் சத்தமுறக் கூவுமொரு
மானேங்குஞ் செங்கை மலரழகு - மூனேங்கும் (உஉஉ)

ஆணவத்தின் கூற்றை யழிக்க வொளிர்மழுவைக்
காணவைத்த செங்கமலக் கையழகு - நாணமுற்றே. (உஉரு)

எங்கும் பரிசுடைய வெம்போல்வா ரச்சமெலாம்
வாங்கு மபய மலரழகுந் — தீங்கடையாச் (உஉச)

சீர்வரவு மெல்லாச் சிறப்பும் பெறவுமருள்
சார்வரத வொண்கைத் தலத்தழகும் - பேரரவப் (உஉரு)

பூணிலங்க வெண்பொற் பொடியிலங்க வெண்பணித்தார்
மாணிலங்க மேவுதிரு மார்பழகுஞ் - சேணிலத்தர் (உஉசு)

மேலுடுத்த வாடையெலாம் வெஃக வியாக்கிரமத்
தோலுடுத்த வொண்மருங்கிற் றன்னழகும் - பாலடுத்த (உஉஎ)

கேழ்க்கோல மேவுதிருக் கீளழகு மக்கீளின்
கீழ்க்கோ வணத்தின் கிளரழகுங் - கீட்கோலம் (உஉஅ)

ஒட்டிநின்ற மெய்யன்ப ருள்ள மெலாஞ்சேர்த்துக்
கட்டிநின்ற வீரக் கழலழகு - மெட்டிரண்டுஞ் (உஉகூ)

சித்திக்கும் யோகியர்தஞ் சிந்தைதனிற் றேன்போன்று
தித்திக்குஞ் சேவடியின் சீரழகுஞ் - சத்தித்து (உங0)

மல்வைத்த மாமறையு மாலயனுங் காண்பரிய
செல்வத் திருவடியின் சீரழகுஞ் - சொல்வைத்த (உஙக)

செம்மை மணிமலையைச் சேர்ந்த மரகதம்போ
லம்மையொரு பால்வாழ்ந் தருளழகு - மம்மமிகச் (உஙஉ)

சீர்த்திநிகழ் செம்பவளச் செம்மே னியினழகும்
பார்த்திருந்தா னம்முட் பசிபோங்காண் - டீர்த்தருளங் (உஙங)

கொண்டிருந்தான் பொன்மேனிக் கோலமதை நாந்தினமுங்
கண்டிருந்தா லல்லலெலாங் கட்டறுங்காண் - டொண்டடைந்து (உஙச)

பாட்டா லவன்புகழைப் பாடுகின்றோர் பக்கநின்று
கேட்டால் வினைகள்விடை கேட்குங்கா - ணீட்டாமல் (உஙரு)

ஒன்றார் புரம்பொடித்த வுத்தமனே யென்றொருகாற்
சொன்ன லுலகத் துயரறுங்கா - ணெந்நாளும் (உஙசு)

பன்னுமுள்ளத் துள்ளாம் பரசிவமே யென்றொருகா
லுன்னுமுன்னந் தீமையெலா மோடிடுங்கா - ணன்னவன்றன் (உஙஎ)

ஆட்டியல்காற் பூமாட் டடையென்று லந்தோமுன்
னீட்டியகாற் பின்வாங்கி நிற்கின்று - யூட்டமேவன் (உஙஅ)

மாற்கடவு ளாமோர் மகவலறக் கண்டுதிருப்
பாற்கடலை யீந்தவருட் பான்மைதனை - நூற்கடலின் (உஙகூ)

மத்தியினீ கேட்டும் வணங்குகிலா யன்படையப்
புத்தியுளோர்க் கிதோன்றும் போதாதோ - முத்திநெறி (௨௪0)

மாணு வரக்கன் மலைக்கீ ழிருந்தேத்த
* வாணாள் வயங்கியதோர் வண்மைதனை - நாணாளும் (௨௪௧)

நண்ணி யுரைத்து நயந்திலைநீ யன்புகொளப்
புண்ணியருக் கிதோன்றும் போதாதோ - புண்ணியராஞ் (௨௪௨)

சுந்தரர்க்குக் கச்சூரிற் றேழமையைத் தான்றெரிக்க
வந்திரப்புச் சோறளித்த வண்மைதனை - முந்தகத்திற் (௨௪௩)

பேதமறக் கேட்டும் பிறழ்ந்தனையே யன்படையப்
போதமுளோர்க் கிதோன்றும் பேதாதோ - போதவுநெய் (௨௪௪)

அங்கோ ரொலிதா னருந்தவகற் றூண்டவதைச்
செங்கோல னுக்கியவச் சீர்த்திதனை - யிங்கோதச் (௨௪௫)

சந்ததநீ கேட்டுமெவன் றுணிதனையா யன்படையப்
புந்தியுளோர்க் கிதோன்றும் போதாதோ - முந்தவரு (௨௪௬)

நற்றுணையென் றேத்துமந்த நாவரசர்க் கன்றுகடற்
* கற்றுணையோர் தெப்பமெனக் காட்டியதை - யிற்றெனநீ (௨௪௭)

மாவுலகிற் கேட்டும் வணங்குகிலா யன்படையப்
பூவுலகர்க் கிதோன்றும் போதாதோ - தாவுநுதற் (௨௪௮)

கண்சுமந்தா னன்பன் கலங்கா வகைவைகை
மண்சுமந்தா னென்றுரைக்கும் வாய்மைதனைப் - பண்புடையோர் (௨௪௯)

மாணவுரைப் பக்கேட்டும் வாய்ந்தேத்தாய் மெய்யன்பு
பூணவென்று லிதொன்றும் போதாதோ - நீணரகத் (௨௫0)

தீங்குறுமா பாதகத்தைத் தீர்த்தோர் மறையவனைப்
பாங்கடையச் செய்தவருட் பண்பதனை - யீங்குலகர் (௨௫௧)

துங்கமுற வுரைத்துஞ் சூழ்கின் றிலையன்பு
பொங்கவென்று லிதொன்றும் போதாதோ - தங்கியவிப் (௨௫௨)

பாரறியாத் தாயாகிப் பன்றிக் குருளைகட்கு
வூரறியநன் முலைப் பாலூட்டியதைச் - சீரறிவோர் (௨௫௩)

சொல்லிநின்றார் கேட்டுந் துதிக்கின் றிலையன்பு
புல்லவென்று லிதொன்றும் போதாதோ - நல்லதிருப் (௨௫௪)

பாதமலர் வருந்தப் பாணன் றனக் காளாய்க்
கோதில்விற கேற்றுவிலை கூறியதை - நீதியுளோர் (௨௫௫)

* வாழ்நாள் - வாணாளெனமரீ இயது.

* கற்றுணை - எ-து - கற்றுணையெனக்குறுகிநின்றது.

சாற்றிநின்றார் கேட்டமெவன் றுணிணையாய் மெய்யன்பிற்
போற்றவென்று லீதொன்றும் போதாதோ - போற்றுகின்ற (உருசு)

ஆடுங் கரியு மணிலுங் குரங்குமன்பு
தேடுஞ் சிலம்பியொடு சிற்றெறும்பு - நீடுகின்ற (உருஎ)

பாம்புஞ் சிவார்ச்சனைதான் பண்ணியதென் றூற்பூசை
யோம்புவதற் கியார்தா னுவவாதார் - சோம்புறுநீ (உருஅ)

வன்பென்ப தெல்லா மறுத்தவன்றாட் பூசிக்கு
மன்பென்ப தியாதோ வறியாயே - யன்புடனே (உருகூ)

செஞ்சடைகொ ணம்பெருமான் சீர்கேட் டிரையருந்தா
தஞ்சடக்கி யோகம மர்ந்துலகின் - வஞ்சமற (உசூ0)

நாரையே முத்தியின்ப நாடியதென் றூன்மற்றை
யாரையே நாடாதா ரென்றுரைப்பே - னீரமிலாய் (உசூக)

நீயோ சிறிது நினைந்திலையவ் வின்பமென்னை
யேயோநின் றன்மை யிருந்தவித - மோயாத (உசூஉ)

அன்புடையா ரியாரினும்பே ரன்புடையா னம்பெருமா
னின்புடையா னித்த நிகழ்த்துகின்றே - னுன்புடையோர் (உசூங)

அன்பவன்மேற் கொண்ட தறியேன் புறச்சமையத்
தின்புடையா ரோனு மிணங்குவரோ - யன்புடனே (உசூச)

தாவென்று னல்லருளிந் தாவென்பா னம்பெருமா
ஞவுன்பா லோதி யலுக்கின்றே - னீவன்பால் (உசூரு)

நின்று யலதவனை நேர்ந்துநினை யாய்பித்த
ரென்றுலு மென்சொற் கிணங்குவரோ - குன்றுது (உசூசூ)

பித்தா வெனினும் பிறப்பறுப்பா னம்முடையா
* னத்தோ வுனக்கீ தறைகின்றேன் - சற்றேனுங் (உசூஎ)

கேள்வியிலார் போலதனைக் கேளாய் கெடுகின்றாய்
வேள்வியிலார் கூட்டம் விழைகின்றாய் - வேள்வியென்ற (உசூஅ)

வேலைவருங் காலொளித்து மேவுகின்றாய் நின்றலைக்கங்
கோலைவருங் காலிங் கொளிப்பாயே - மாலையுறும் (உசூகூ)

இப்பார் வெறும்பூ விதுநயவே லென்றுனக்குச்
செப்பா முனம்விரைந்து செல்கின்று - யப்பாழிற் (உஎ0)

செல்லாதே சைவநெறி செல்லென்று லென்னுடனுஞ்
சொல்லாது போய்மயக்கந் தோய்கின்றாய் - பொல்லாத (உஎக)

* அந்தோ - எ-து, அத்தோவென வலிக்கும் வழிவலித்தது.

* அஞ்சருந்தென் ருலமுதி ஞர்கின்ருய் விட்டிடென்ரு
னஞ்சருந்தென் ருற்போ னலிகின்ருய் - வஞ்சகத்தில் (உஎஉ)

ஓடுகின்ருய் மீளாம லுன்னிச்சை யின்வழியே
யாடுகின்ருய் மற்றங் கயர்கின்ருய் - நீடுலகைச் (உஎஙு)

சூழ்கின்ருய் வேருென்றிற் சுற்றுகின்ருய் மற்ருென்றில்
வீழ்கின்ருய் மேலொன்றின் மீள்கின்ருய் - தாழ்வொன்றே (உஎச)

ஈகின்ருய் வன்னெறியி லென்னை வலதழிக்கப்
போகின்ருய் மீட்டும் புகுகின்ரு - யோகின்றி (உஎரு)

ஒன்றைமறக் கின்ருய்மற் ருென்றைநினைக் கின்ருயென்
னன்றைமறைக் கின்ருய் நலிகின்ருய் - வென்றிபெறுஞ் (உஎசா)

சேவிற் பரமன்ருட் சேரொன்ருன் மற்ருெருசார்
மேவிப் பலவாய் விரிகின்ருய் - பாவித்துக் (உஎஎ)

குன்றுமுனக் கனந்தங் கோடிதெண்ட னிட்டாலு
மொன்று மிரங்கா யுழல்கின்ருய் - நன்ருருகாக் (உஎஅ)

கல்லென்பே னுன்னைக் கரணங் கலந்தறியாக்
கல்லென்ரு லென்சொற் கடவாதே - புல்லநினை (உஎகூ)

வல்லிரும்பென் பேனந்த வல்லிரும்பேற் கூடத்திற்
கொல்லன் குறிப்பைவிட்டுக் கோணுதே - யல்லலெலாங் (உஅ0)

கூட்டுகின்ற வன்மைக் குரங்கென்பே னக்குரங்கே
லாட்டுகின்ருேன் சொல்வழிவிட் டாடாதே - நீட்டுலகர் (உஅக)

ஏசுகின்ற பேயென்பே னெப்பேயு மஞ்செழுத்தைப்
பேசுகின்ருேர் தம்மைப் பிடியாதே - கூசுகிற்பக் (உஅஉ)

கண்டோரைக் கவ்வுங் கடுஞ்சுணங்க னென்பனது
கொண்டோரைக் கண்டாற் குலையாதே - யண்டார்க்கும் (உஅஙு)

பூவி லடங்காப் புலியென்பே னெப்புலியு
மேவில் வயப்பட்டா லெதிராதே - நோவியற்றி (உஅச)

வீறுகின்ற மும்மதமால் வெற்பென்பே னுங்கதுவு
மேறுகின்ருேன் சொல்வழிவிட் † டேருதே - சீறுகின்ற (உஅரு)

‡ வென்னடைசேர் மற்றை விலங்கென்பே னெவ்விலங்கு
மன்னவன்சேர் நாட்டில் வழங்காதே - நின்னையினி (உஅசா)

---

* ஐந்து-எ-து, அஞ்சு என மருவிற்று-அஃதீண்டாகு பெயராய்ச் - சுவை-ஒளி-ஊறு-ஓசை-நாற்றமென்னு மைந்தாசைகளைக்குறித்து நின்றது.

† ஏறுதல் - எ-து, ஈண்டொழுக்கத்தின்மே னின்றது. ‡ வெல் - நடையெனப் பிரித்துக்கொள்க. அற்றேல் - கொடுநடையெனப்பொருள் கொள்ளின் - வெந் நடையெனப் பொதுநகரமாக்கிக்கொள்க.

என்னென்பே னென்மொழியை யேற்றனேயேன் மாற்றுயர்ந்த
பொன்னென்பே னென்வழியிற் போந்திலேயே - கொன்னுறநீ (உஅஎ)

போம்வழியும் பொய்நீ புரிவதுவும் பொய்யதனு
லாம்விளைவும் பொய்நின் னறிவும்பொய் - தோம்விளைக்கும் (உஅஅ)

நின்னுடலும் பொய்யிங்கு நின்றவமும் பொய்நிலையா
நின்னிலையும் பொய்யன்றி நீயும்பொய் - யென்னிலிவண் (உஅகூ)

ஏதுமுணர்ந் திலேயே யிம்மாய வாழ்க்கையெனும்
வாதி விழுத்தென்னை மயக்கினையே - தீதுறுநீ (உகூ0)

வன்னேர் விடங்காணின் வன்பெயரின் முன்பொருகீற்
றென்னே யறியாம லிட்டழைத்தேன் - கொன்னேநீ (உகூக)

நோவதொழியா ‡ நொறிற்காம வெப்பினிடை
யாவ தறியா தழுந்தினையே - மேவுமதில் (உகூஉ)

உள்ளெரிய மேலா முணர்வுங் கருகவுட
னள்ளெரிய நட்பி னலம்வெதும்ப - விள்வதின்றி (உகூ௩)

வாடிப் பிலஞ்சென்று வான்சென் றொளித்தாலுந்
தேடிச் சுடுங்கொடிய தீகண்டா - யோடியங்கு (உகூ௪)

பேர்ந்தா லலது பெருங்காமத் தீநின்னைச்
சேர்ந்தாரை யுஞ்சுடுஞ்செந் தீகண்டாய் - சார்ந்தாங்கு (உகூ௫)

சந்தீ யெனவருவார் தம்மைச் சுடுங்காமஞ்
செந்தீ யையுஞ்சுடுமோர் தீகண்டாய் - வந்தீங்கு (உகூ௬)

மண்ணிற் றனைக்காணு வண்ண நினைத்தாலு
நண்ணித் தலைக்கேறு நஞ்சங்கா - ணெண்ணற்ற (உகூஎ)

போருறுமுட் காமப் புதுமயக்க நின்னுடைய
பேரறிவைக் கொள்ளைகொளும் பித்தங்காண் - சோரறிவிற் (உகூஅ)

கள்ளடைக்குங் காமக் கடுமயக்க மெய்ந்நெறிக்கோர்
முள்ளடைக்கும் பொல்லா முரண்கண்டா - யள்ளலுற (உகூகூ)

ஏதமெலாந் தன்னு ளிடுங்காமம் பாதகத்தின்
பேதமெலா மொன்றிப் பிறப்பிடங்கா - ணுதலினல் (௩00)

வெம்மான் மடந்தையரா மேவவொணு தாங்கவர்க
டம்மாசை யின்னுந் தவிர்ந்திலேயே - யிம்மாய (௩0க)

மன்ற வணங்கினர்செவ் வாய்மடவார் பேதையர்க
ளென்றகொடுஞ் சொற்பொருளை யெண்ணிலேயே - தொன்றுலகிற் (௩0உ)

‡ நொறில் - எ-து, விரைவு.

பெண்ணென் றுரைப்பிற் பிறப்பேழு மாந்துயர
மெண்ணென்ற நல்லோர்சொ லெண்ணிலையே - பெண்ணிங்கு (௩௦௩)

* மாமாத் திரையின் வருத்தனமென் றெண்ணினையந்
நாமார்த்த மாசையென நாடிலையே - யாமார்த்தம் (௩௦௪)

மந்திரத்தும் பூசை மரபினுமற் றெவ்விதமாந்
தந்திரத்துஞ் சாயாச் சழக்கன்றோ - மந்திரத்திற் (௩௦௫)

பேய்பிடித்தாற் றீர்ந்திடுமிப் பெண்பேய் விடாதேசெந்
நாய்பிடித்தாற் போலுமென்று நாடிலையே - யாய்விலுன்றன் (௩௦௬)

ஏழைமையென் னென்பே னிவர்மயக்கம் வன்னரகின்
றோழைமையென் றந்தோ துணிந்திலையே - யூழமைந்த (௩௦௭)

காரிருளிற் செல்லக் கலங்குகின்றாய் மாதர்குழற்
பேரிருளிற் செல்வதனைப் பேர்த்திலையே - பாரிடையோர் (௩௦௮)

எண்வா ளெனிலஞ்சி யேகுகின்றா யேந்திழையார்
கண்வா ளறுப்பக் கனிந்தனையே - மண்வாழும் (௩௦௯)

ஓரானை யைக்கண்டா லோடுகின்றாய் மாதர்முலை
யீரானை யைக்கண் டிசைந்தனையே - சீரான (௩௧௦)

வெற்பென்றா லேற விரைந்தறியாய் மாதர்முலை
வெற்பென்றா லேற விரைந்தனையே - பொற்பொன்றுஞ் (௩௧௧)

சிங்கமென்றால் வாடித் தியங்குகின்றாய் மாதரிடைச்
சிங்கமெனிற் காணத் திரும்பினையே - யிங்குசிறு (௩௧௨)

பாம்பென்றா லோடிப் பதுங்குகின்றாய் மாதரல்குற்
பாம்பென்றாற் சற்றும் பயந்திலையே - யாம்பண்டைக் (௩௧௩)

கீழ்க்கடலி லாடென்றாற் கேட்கிலைநீ மாதரல்குற்
பாழ்க்கடலிற் கேளாது பாய்ந்தனையே - கீழ்க்கதுவுங் (௩௧௪)

கல்லென்றாற் பின்னிடுவாய் காரிகையார் காற்சிலம்பு
கல்லென்றான் மேலெழும்பக் கற்றனையே - யல்லளகம் (௩௧௫)

மையோ கருமென் மணலோவென் பாய்மாறி
யையோ நரைப்ப தறிந்திலையோ - பொய்யோதி (௩௧௬)

ஒண்பிறையே யொண்ணுதலென் றுன்னுகின்றா யுள்ளொளும்பாம்
வெண்பிறையன் றேயதனை விண்டிலையே - கண்புருவம் (௩௧௭)

வில்லென்றாய் வெண்மயிராய் மேவி யுதிர்த்திடுங்காற்
சொல்லென்றாற் சொல்லத் துணியாயே - வல்லம்பிற் (௩௧௮)

* பெண்ணிங்குமா மாத்திரையின் வருத்தனமென் றெண்ணினை-என்பதற்கு-பேண்-என்று-பொருள் கொண்டனை யென்பது பொருள்.

கட்கு வளையென்றாய்க் கண்ணீ ருலர்ந்துமிக
வுட்குழியும் போதி லுளைப்பாயே - கட்குலவு (௫௧௯)

மெய்க்குமிழே நாசியென வெஃகினையால் வெண்மலத்தா
லுய்க்குமிழுஞ் சிந்த லுளதேயோ - வெய்த்தலிலா (௫௨௦)

வள்ளையென்றாய் வார்காது வள்ளை தனக் குட்புழையோ
டுள்ளுநரம் பின்புனைவு முண்டேயோ - வெள்ளைநகை (௫௨௧)

முல்லையென்றாய் முல்லை முறித்தொருகோற் கொண்டுநித
மொல்லை யழுக்கெடுப்ப துண்டேயோ - நல்லதொரு (௫௨௨)

கொவ்வையென விதழைக் கொள்கின்றாய் மேற்குழம்புஞ்
செவ்வை யிரத்தமெனத் தேர்ந்திலையே - செவ்வியகண் (௫௨௩)

ணுடி யெனக்கவுட்கே யாசைவைத்தாய் மேற்செழுந்தோல்
வாடியக்கா லென்னுரைக்க மாட்டுவையே - கூடியதோர் (௫௨௪)

அந்த மதிமுகமென் றாகின்றா யேழ்துளைக
ளைந்தமதிக் குண்டதனை யெண்ணிலையே - நந்தெனவே (௫௨௫)

கண்டமட்டுங் கூறினையக் கண்டமட்டு மன்றியுடல்
கொண்டமட்டு மற்றதன்மெய்க் கூறன்றே - விண்டவற்றைத் (௫௨௬)

தோளென் றுரைத்துத் துடிக்கின்றா யவ்வேய்க்கு
மூளொன்று வெள்ளெலும்பின் மூட்டுண்டே - நாளொன்றுஞ் (௫௨௭)

செங்காந்த ளங்கையெனச் செப்புகின்றா யம்மலர்க்குப்
பொங்காப் பலவிரலின் பூட்டுண்டே - மங்காத (௫௨௮)

செவ்விளநீர் கொங்கையெனச் செப்பினைவல் லூன்றடிப்பிங்
கெவ்விளநீர்க் குண்டதனை யெண்ணிலையே - செவ்வைபெறுஞ் (௫௨௯)

செப்பென் றனைமுலையைச் சிசி சிலந்தியது
துப்பென் றவர்க்கியாது சொல்லுதியே - * வப்பிறுகச் (௫௩௦)

சூழ்ந்தமுலை மொட்டென்றே துள்ளுகின்றாய் கீழ்த்துவண்டு
வீழ்ந்தமுலைக் கென்ன விளம்புதியே - தாழ்ந்தவவை (௫௩௧)

மண்கட்டும் பந்தெனவே வாழ்ந்தாய் முதிர்ந்துடையாப்
புண்கட்டி யென்பவர்வாய்ப் † பொத்துவையே - திண்கட்டும் (௫௩௨)

அந்நீர்க் குரும்பை யவையென்றாய் மேலெழும்புஞ்
செந்நீர்ப் புடைப்பென்பார் தேர்ந்திலையே - யந்நீரார் (௫௩௩)

கண்ணீர் தரும்பருவாய்க் கட்டுரைப்பார் சான்றாக
வெண்ணீர் வரல்கண்டும் வெட்கிலையே - தண்ணீர்மைச் (௫௩௪)

* வம்பு - வப்பென விகார மாயிற்று. † பொத்துதல் - எ-து, மூடுதல்.

சாடியென்பாய் நீயயலோர் தாதுக் கடத்திடுமேன்
மூடியென்பார் மற்றவர்வாய் மூடுதியோ - ‡மேடதனை (௯௩௫)

ஆலிலையே யென்பா யடர்குடரோ § டீருளொடுந்
தோலிலையே யாலிலைக்கென் சொல்லுதியே - நூலிடைதான் (௩௩௬)

உண்டோ விலையோவென் றுட்புகழ்வாய் கைதொட்டுக்
கண்டோர் * பூட் டுண்டென்பார் கண்டிலையே - விண்டோங்கும் (௩௩௭)

ஆழ்ங்கடலென் பாய்மடவா ரல்குலினைச் சிற்சிலர்கள்
பாழ்ங்கிணறென் பாரதனைப் பார்த்திலையே - தாழ்ங்கொடிஞ்சித் (௩௯௮)

தேராழி யென்பாயச் சீக்குழியை யன்றுசிறு
நீராழி யென்பவர்க்கென் ¶ னேருதியே -யாராப்புன் (௩௩௯)

நீர்வழியை யாசை நிலையென்றாய் வன்மலந்தான்
சோர்வழியை யென்னென்று சொல்லுதியே - சார்முடைதான் (௩௪0)

ஆறாச் சிலைநீர்கா லூறு யொழுக்கிடவும்
வீறுப்புண் ணென்று விடுத்திலையே - யூறுக்கி (௩௪௧)

மூலை யெறும்புடனீ மொய்ப்பதஞ்சி மற்றதன்மேற்
சீலையிடக் கண்டுந் தெரிந்திலையே — மேலையுறு (௩௪௨)

மேநரக மென்றால் விதிர்ப்புறுநீ மாதரல்குற்
கோநரக மென்றாற் குலைந்திலையே - யூனமிதைக் (௩௪௩)

கண்டா னமதாசைக் கைவிடுவா ரென்றதனைத்
தண்டா தொளித்திடவுஞ் சார்ந்தனையே - யண்டாது (௩௪௪)

போத விடாயாகிப் புலம்புகின்றாய் மற்றதன்பான்
மாதவிடா யுண்டான் மதித்திலையே - மாதரவர் (௩௪௫)

தங்குறங்கை மெல்லரம்பைத் தண்டென்றாய் தண்டேன்றி
வெங்குரங்கின் மேவுங்கால் விள்ளுதியே - நன்கிலவாய் (௯௪௬)

எய்ந்த முழந்தாளைவரா லென்றாய் புலாற்சிறிதே
வாய்ந்து வராற்றேற்கு மதித்திலையே - சேந்தவடி (௩௪௭)

தண்டா மரையென்றாய் தன்மை விளர்ப்படைந்தால்
வெண்டா மரையென்று மேவுதியோ - வண்டாரா (௩௪௮)

மேனாட்டுஞ் சண்பகமே மேனியென்றாய் தீயிடுங்காற்
றீநாற்றஞ் சண்பகத்திற் றேர்ந்தனையோ - வானாட்டு (௩௪௯)

---

‡ மேடு-எ-து, வயிறு § ஈருள் - எ-து, ஈரலென மரீஇ வழங்கியது. * பூட்டு, எ-து, ஈண்டுடற் பொருத்து. ¶ நேர்த லென்ப நீண்டு விடை கொடுத்த லென்னும் பொருட்டு.

மின்றேர் வடிவென்றாய் மேனீ யுரைத்தவுனீ
தொன்றே * யொருபுடையா யொத்ததுகா - ணென்றாச்சொல் (௩௫0)

வேள்வா கனமென்றாய் வெய்யநமன் விட்டிடுந்தா
தாள்வா கனமென்றா லாகாதோ - வேளானேன் (௩௫௧)

† காகளமா யின்குரலைக் கட்டுரைத்தாய் காலனென்போன்
காகளமென் பார்க்கென் கழறுதியே - நாகளவுஞ் (௩௫௨)

சாயைமயி லென்றே தருக்குகின்றாய் சார் ‡ பிரம
சாயையஃ தென்பார்க்கென் சாற்றுதியே - சேயமலர் (௩௫௩)

அன்னநடை யென்பா யஃதன் றருந்துகின்ற
வன்னநடை யென்பார்க்கென் றோற்றுதியே - யன்னவரை (௩௫௪)

ஓரோ வியமென்பா யோவியமே லாங்கெழுபத்
தீரா யிரநாடி யாண்டுடைத்தே - பாரார்ந்த (௩௫௫)

முன்னுமலர்க் கொம்பென்பாய் மூன்றரைக் கோடியெனத்
துன்னு முரோமத் துவாரமுண்டே - யின்னமுதாற் (௩௫௬)

செய்தவடி வென்பாயச் செய்கைமெய்யே னீயவர்கள்
வைதிடினு மற்றதனை வையாயே - பொய்தவிராய் (௩௫௭)

ஒள்ளிழையார் தம்முருவோ ருண்கரும்பென் றாய்சிறிது
கிள்ளியெடுத் தாலிரத்தங் கீழ்வருமே - கொள்ளுமவர் (௩௫௮)

ஈடில்பெயர் நல்லா ரெனநயந்தாய் நாய்ப்பெயர்தான்
கேடில்பெருஞ் சூரனென்பர் கேட்டிலையோ - நாடிலவர் (௩௫௯)

மெல்லியலா ரென்பாய் மிகுகருப்ப வேதனையை
வல்லியலார் யார்பொறுக்க வல்லார்காண் - வில்லியல்பூண் (௩௬0)

வேய்ந்தா லவர்மேல் விழுகின்றாய் வெந்தீயிற்
பாய்ந்தாலு மங்கோர் பலனுண்டே - வேய்ந்தாங்கு (௩௬௧)

சென்றா லவர்பின்னர்ச் செல்கின்றாய் வெம்புலிப்பின்
சென்றாலு மங்கோர் திறனுண்டே - சென்றாங்கு (௩௬௨)

நின்றா லவர்பின்னர் நிற்கின்றாய் கண்மூடி
நின்றாலு மங்கோர் நிலையுண்டே - யொன்றாது (௩௬௩)

கண்டா லவருடம்பைக் * கட்டுகின்றாய் கல்லணைத்துக்
கொண்டாலு மங்கோர் குணமுண்டே - பெண்டானார் (௩௬௪)

---

* ஈண்டொரு புடை யொத்தமை தோற்றியாங்கழியு நிலையின்மை யானென்று கொள்க. † வேளானேன்காகளம் - எ-து, குயில்

‡ பிரமசாயை - எ-து, பிரமகத்தி.

* கட்டுதல் - எ - து, ஈண்டுதழுவுதலென்னும்பொருட்டு.

வைதாலுந் தொண்டு வலித்தாய் பிணத்தொண்டு
செய்தாலு மங்கோர் சிறப்புளதே - கைதாவி (௩௬௫)

மெய்த்தாவுஞ் செந்தோன் மினுக்கான் மயங்கினைநீ
செத்தாலு மங்கோர் சிறப்புளதே - வைத்தாடும் (௩௬௬)

மஞ்சண் மினுக்கான் மயங்கினைநீ மற்றொழிந்து
துஞ்சுகினு மங்கோர் சுகமுளதே - வஞ்சியனைப் (௩௬௭)

பார்த்தாடி யோடிப் படர்கின்றாய் வெந்நரகைப்
பார்த்தாலு மங்கோர் பலனுண்டே - சேர்த்தார்கைத் (௩௬௮)

தொட்டாற் களித்துச் சுகிக்கின்றாய் வன்பூதந்
தொட்டாலு மங்கோர் துணையுண்டே - நட்டாலுந் (௩௬௯)

தெவ்வின் மடவாரைத் திளைக்கின்றாய் தீவிடத்தை
வவ்வுகினு மங்கோர் மதியுண்டே - செவ்விதழ்நீர் (௩௭௦)

உண்டான் மகிழ்வாய்நீ யொண்சிறுவர் தஞ்சிறுநீ
ருண்டாலு மங்கோ ருரனுண்டே - கண்டாகக் (௩௭௧)

கவ்வுகின்றா யவ்விதழைக் கார்மதுகம் வேம்பிவற்றைக்
கவ்வுகினு மங்கோர் கதியுண்டே - யவ்விளையர் (௩௭௨)

மென்றீயு மிச்சில் விழைகின்றாய் நீவெறும்வாய்
மென்றாலு மங்கோர் விளைவுண்டே - முன்றானைப் (௩௭௩)

பட்டான் மகிழ்வு பதிந்தாய் பதைக்கவம்பு
பட்டாலு மங்கோர் பலனுண்டே - கிட்டாமெய்த் (௩௭௪)

தீண்டிடிலுள் ளோங்கிச் சிரிக்கின்றாய் செந்தேண்முன்
றீண்டிடினு மங்கோர் திறனுண்டே - வேண்டியவர் (௩௭௫)

வாய்க்கிடயா தானுமொன்று வாங்குகின்றாய் மற்றதையோர்
நாய்க்கிடினு மங்கோர் நலனுண்டே - தாக்கவர்க்காய்த் (௩௭௬)

தேட்டாண்மை செய்வாயத் தேட்டாண்மை யைத்தெருவிற்
போட்டாலு மங்கோர் புகழுண்டே - வாட்டாரைக் (௩௭௭)

கொண்டா ருடனுணவு கொள்கின்றாய் குக்கனுட
னுண்டாலு மங்கோ ருறவுண்டே - மிண்டாகும் (௩௭௮)

இங்கிவர்வாய்ப் பாகிலையை யேற்கின்றாய் புன்மலத்தை
நுங்கினுமங் கோர்நன் * னொறிலுண்டே - மங்கையர்தம் (௩௭௯)

எத்தா மனைகாத் திருக்கின்றா யீமமது
காத்தாலு மங்கோர் கனமுண்டே - பூத்தாழ்வோர் (௩௮௦)

* நொறில்-எ-து, அடக்கம்.

காட்டாக் குரல்கேட்பாய் கர்த்தபத்தின் பாழ்ங்குரலைக்
கேட்டாலு மங்கோர் கிளருண்டே - கோட்டாவி (ங அக)

ஆழ்ந்தாரு டன்வாழ வாதரித்தா யாழ்ங்கடலில்
வீழ்ந்தாலு மங்கோர் விரகுண்டே - வீழ்ந்தாருள் (ங அஉ)

வீட்டான் முலையுமெதிர் வீட்டான் முகமுமுறக்
காட்டாநின் றார்கண்டெங் காய்ந்திலையே - கூட்டாட்குச் (ங அங)

செய்கை யிடும்படிதன் சீமான் றனதுபணப்
பைகை யிடல்கண்டும் பயந்திலையே - சைகையது (ங அச)

கையா லொருசிலர்க்குங் கண்ணா லொருசிலர்க்குஞ்
செய்யா மயக்குகின்றார் தேர்ந்திலையே - யெய்யாமல் (ங அரு)

ஈறிகந்த விவ்வகையா யிம்மடவார் செய்கையெலாங்
கூறுவனே லம்ம குடர்குழம்புங் - கூறுமிவர் (ங அசு)

வாயொருபாற் பேச மனமொருபாற் செல்லவுட
லாயொருபாற் செய்ய வழிவார்கா - ணுயவிவர் (ங அஎ)

நன்றறியார் தீதே நயப்பார் சிவதலத்திற்
சென்றறியார் பேய்க்கே சிறப்பெடுப்பா - ரின்றிவணை (ங அஅ)

வஞ்சமென்கோ வெவ்வினையாம் வல்லியமென் கோபவத்தின்
புஞ்சமென்கோ மாநரக பூமியென்கோ - வஞ்சுறுமீர் (ங அகூ)

வாளென்கோ வாய்க்கடங்கா மாயமென்கோ மண்முடிவு
நாளென்கோ வெய்ய நமனென்கோ - கோளென்கோ (ஙகூ0)

சாலமென்கோ வானிந்திர சாலமென்கோ வீறால
காலமென்கோ நின்பொல்லாக் காலமென்கோ - ஞாலமதிற் (ங கூக)

பெண்ணென்றால் யோகப் பெரியோர் நடுங்குவரோன்
யண்ணின்றார் யார்நடுங்க மாட்டார்காண் - பெண்ணென்றாற் (ங கூஉ)

பேயு மிரங்குமென்பாய் பேயொன்றோ தாம்பயந்த
சேயு மிரங்குமவர் தீமைக்கே - யாயுஞ்செம் (ங கூங)

பொன்னாற் றுகிலார் புனையா விடிலவர்மெய்
யென்னாகு மற்றிதைநீ யெண்ணிலையே - யின்னுமைக் (ங கூச)

கொத்தென்ற வம்மடவார் கூட்ட மெழுமைக்கும்
வித்தென் றறிந்துமதை விட்டிலையே - தொத்தென்று (ங கூரு)

பாச வினைக்குட் படுத்துறுமப் பாவையர்மே
லாசையுனக் கெவ்வா றடைந்ததுவே - நேசமிலாய் (ங கூசு)

நின்னாசை யென்னென்பே னெய்வீழ் நெருப்பெனவே
பொன்னாசை மேன்மேலும் பொங்கினையே - பொன்னாசை (ங கூஎ)

வைத்திழந்து வீணே வயிறெரிந்து மண்ணுலகி
லெத்தனைபேர் நின்கண் ணெதிர்நின்றார் - தத்துகின்ற (௩௯அ)

பொன்னுடையார் துன்பப் புணரியொன்றே யல்லதுமற்
றென்னுடையார் கண்டிங் கிருந்தனையே - பொன்னிருந்தால் (௩௯௯)

ஆற்றன்மிகு தாயுமறி யாவகையால் வைத்திடவோ
ரேற்றவிடம் வேண்டுமெதற் கென்செய்வா - யேற்றவிடம் (௪௦௦)

வாய்த்தாலு மங்கதுணை வைத்தவிடங் காட்டாம
லேய்த்தாற் சிவசிவமற் றென்செய்வா - யேய்க்காது (௪௦௧)

நின்றாலும் பின்னதுதா னீடுங் கரியான
தென்றா லரகரமற் றென்செய்வாய் - நன்றாக (௪௦௨)

ஒன்றொருசார் நில்லென்று லோடுகின்ற நீயதனை
யென்றும் புரப்பதனுக் கென்செய்வாய் - வென்றியொடு (௪௦௩)

பேர்த்துப் புரட்டிப் பெருஞ்சினத்தான் மாற்றலர்க
ளீர்த்துப் பறிக்கிலதற் கென்செய்வாய் - பேர்த்தெடுக்கக் (௪௦௪)

கைபுகுத்துங் காலுட் கருங்குளவி செங்குளவி
யெய்புகுத்தக் கொட்டிடின்மற் றென்செய்வாய் - பொய்புகுத்தும் (௪௦௫)

பொன்காவற் பூதமது போயெடுக்கும் போதுமறித்
தென்காவ லென்றான்மற் றென்செய்வாய் - பொன்காவல் (௪௦௬)

வீறுங்கா லாணவமாம் வெங்கூளி நின்றலைமே
லேறுங்கான் மற்றதனுக் கென்செய்வாய் - மாறுஞ்சீர் (௪௦௭)

உன்னேயம் வேண்டி யுலோப மெனுங்குறும்ப
னின்னே வருவனதற் கென்செய்வாய் - முன்னேதும் (௪௦அ)

இல்லா நமக்குண்டோ வில்லையோ வென்னுநல
மெல்லா மழியுமதற் கென்செய்வாய் - நில்லாமல் (௪௦௯)

ஆய்ந்தோர் சிலநாளி லாயிரம்பேர் பக்கலது
பாய்ந்தோடிப் போவதுநீ பார்த்திலையே - யாய்ந்தோர்சொல் (௪௧௦)

கூத்தாட் டவைசேர் குழாம்விளிந்தாற் போலுமென்ற
சீர்த்தாட் குறண்மொழியுந் தேர்ந்திலையே - பேர்த்தோடும் (௪௧௧)

நாட்கொல்லி யென்று னடுங்குகின்றாய் நாளறியா
வாட்கொல்லி யென்பரிதை யாய்ந்திலையே - கீழ்க்கொல்லைப் (௪௧௨)

பச்சிலையாற் பொன்னைப் படைப்பாரோன் மற்றதன்மே
லிச்சையுனக் கெவ்வா றிருந்ததுவே - யிச்சையிலார் (௪௧௩)

இட்டமலம் பட்டவிட மெல்லாம்பொன் னாமென்று
விட்டமதை * விட்டற் கிசைந்திலையே - முட்டகற்றப் (௪௧௪)

* விடற்கு-எ-து, விட்டற்கென விகாரமாயிற்று.

பொன்னடப்ப தன்றியது போனகமே யாதியவா
யென்னடுத்த தொன்றுமிலை தெண்ணிலையே - யிந்நிலத்தில் (சகரு)

நீண்மயக்கம் பொன்மூன் னிலையா யுலகியலாம்
வீண்மயக்க மென்றதனை விட்டிலையே - நீண்வலயத் (சகசு)

திச்செல்வ மின்றி யியலாதேற் சிற்றுயிர்க
ளெச்செல்வங் கொண்டிங் கிருந்தனவே - வெச்சென்ற (சகஎ)

மண்ணாசை கொண்டனைநீ மண்ணாளு மன்னரெலா
மண்ணா லழிதன் மதித்திலையே - யெண்ணாது (சகஅ)

மண்கொண்டார் மாண்டார்தம் மாய்ந்தவுடல் வைக்கவயன்
மண்கொண்டார் தம்மிருப்பில் வைத்திலரோ - திண்கொண்ட (சகசு)

விண்ணேகுங் காலங்கு வேண்டுமென வீண்டுபிடி
மண்ணேனுங் கொண்டேக வல்லாரோ - மண்ணேயம் (சஉ0)

என்னதென்றான் முன்னொருவ னென்னதென்றான் பின்னொருவ
னின்னதுநீ கேட்டிங் கிருந்திலையோ - மன்னுலகிற் (சஉக)

கண்காணி யாய்நீயே காணியல்லாய் நீயிருந்த
மண்காணி யென்று மதித்தனையே - கண்காண (சஉஉ)

மண்காணி வேண்டி வருந்துகின்றாய் நீமேலை
விண்காணி வேண்டல் வியப்பன்றே - யெண்காண (சஉந)

அந்தரத்தி னின்றாய்நீ யந்தோ நினைவிடமண்
ணந்தரத்தி னின்ற தறிந்திலையே - தந்திரத்தின் (சஉச)

மண்கொடுப்பே னென்றுரைக்கில் வைவார் சிறுவர்களு
மண்கொடுக்கி னீதான் மகிழ்ந்தனையே - வண்கொடுக்கும் (சஉரு)

வீடென்றேன் மற்றதைமண் வீடென்றே நீநினைந்தாய்
வீடென்ற சொற்பொருளை விண்டிலையே - நாடொன்றும் (சஉசு)

மண்ணான் மரத்தால் வனைகின்ற வீடனைத்துங்
கண்ணாரக் கட்டழிதல் கண்டிலையோ - மண்ணான (சஉஎ)

மேல்வீடு மங்குடைய வேந்தர்களு மேல்வீட்டப்
பால்வீடும் பாழாதல் பார்த்திலையோ - மேல்வீட்டில் (சஉஅ)

ஏறுவனே யென்பா யியமன் கடாமிசைவந்
தேறுவனே லுன்னாசை யென்னாமோ - கூறிடுமிம் (சஉகூ)

மண்ணளித்த வேதியனு மண்விருப்பங் கொள்ளானே
லெண்ணமுனக் கெவ்வா றிருந்ததுவே - மண்ணிடத்தில் (சந0)

ஆகாத் துரும்பிடத்து மாசைவைத்தா யென்னிலுன்ற
னேகாப் பெருங்காம மென்சொல்கேன் - போகாத (சநக)

பாபக் கடற்கோர் படுகடலாம் பாழ்வெகுளிக்
கோபக் கடலிற் குளித்தனையே - தாபமுறச் (௪௩௨)

செல்லாவிடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீயதென் றதெண்ணிலையே - மல்லல்பெறத் (௪௩௩)

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க வென்றதனைப்
பொன்னைப்போற் போற்றிப் புகழ்ந்திலையே - துன்னி (௪௩௪)

அகழ்வாரைத் தாங்கு நிலம்போல வென்னுந்
திகழ்வாய் மையுநீ தெளியா - யிகழ்வாரை (௪௩௫)

எவ்வண்ண நம்மை யிகழ்வா ரறிவோமென்
றிவ்வண்ண மென்னவெளி யிட்டனையே - தெவ்வென்ன (௪௩௬)

ஓரா வெகுளி யுடையான் றவமடையான்
றீராயென் பாரதுவுந் தேர்ந்திலையே - பேராநின் (௪௩௭)

வெவ்வினைக்கீ டாகவரன் வெம்மைபுரி வானென்று
லிவ்வெகுளி யார்மாட் டிருத்துவதே - செவ்வையிலாய் (௪௩௮)

எய்ந்தனையன் போரிடத்தி லின்னாமை செய்தவனைக்
காய்ந்தனைமற் றென்னபலன் கண்டனையே - வாய்ந்தறிவோர் (௪௩௯)

எல்லா நலமு மிஃதேயென் றேத்துகின்ற
கொல்லா நலஞ்சிறிதுங் கொண்டிலையே - பொல்லாத (௪௪0)

வன்போ டிருக்கு மதியிலிநீ மன்னுயிர்க்க
ணன்போ டிரக்க மடைந்திலையே - யின்போங்கு (௪௪௧)

தூய்மையென்ப தெல்லாந் துணையா யணைவதுதான்
வாய்மையென்ப தொன்றே மதித்திலையே - தூய்மையிலாய் (௪௪௨)

மானொருகை யேந்திநின்ற வள்ளலன்பர் தங்களுளே
நானொருவ னென்று நடித்தனையே - யானமற்றைப் (௪௪௩)

பாதகங்க ளெல்லாம் பழகிப் பழகியதிற்
சாதகஞ்செய் வோரிற் றலைநின்றாய் - பாதகத்தில் (௪௪௪)

ஓயா விகார வுணர்ச்சியினா லிவ்வுலக
மாயா விகார மகிழ்ந்தனையே - சாயாது (௪௪௫)

நீயிளமை மெய்யாய் நினைந்தாய் நினைப்பெற்ற
தாயிளமை யெத்தனைநாட் டங்கியதே - யாயிளமை (௪௪௬)

மெய்கொடுத்த தென்பாய் விருத்தர்கட்கு நின்போல்வார்
கைகொடுத்துப் போவதனைக் கண்டிலையே - மெய்கொடுத்த (௪௪௭)

கூனொடுங்கைக் கோலூன்றிக் குந்தி நடைதளர்ந்து
கானடுங்க நிற்பவரைக் கண்டிலையோ - வூனொடுங்க (௪௪௮)

ஐயநட வென்றே யரும்புதல்வர் முன்செலப்பின்
மைய நடப்பவரைப் பார்த்திலையோ - வெய்யநமன் (௪௪௯)

நாடழைக்கச் சேனநரி நாயழைக்க நாறுசுடு
காடழைக்க மூத்துநின்றோர் கண்டிலையோ - பீடடைந்த (௪௫0)

மெய்யுலர்ந்து நீரின் விழியுலர்ந்து வாயுலர்ந்து
கையுலர்ந்து நிற்பவரைக் கண்டிலையோ - மெய்யுலர்ந்துஞ் (௪௫௧)

சாகான் கிழவன் றளர்கின்றா னென்றிவணீ
யோகாளஞ் செய்தவனை யோர்ந்திலையோ - வாகாத (௪௫௨)

கண்டமிது பொல்லாக் கடுநோ யெனுங்குமர
கண்டமிஃ தென்பவரைக் கண்டிலையோ - கொண்டவுடல் (௪௫௩)

குட்டமுறக் கைகால் குறுக்குமிது பொல்லாத
குட்டமென நோவார் குறித்திலையோ - துட்டவினை (௪௫௪)

மாலையினுங் காலையினு மத்தியினுங் குத்துமிது
சூலையென நோவாரைச் சூழ்ந்திலையோ - சாலவுமித் (௪௫௫)

தேக மதுநலியச் செய்யுங்கா ணுய்வரிதா
மேகமிஃ தென்பாரை மேவிலையோ - தாகமுறச் (௪௫௬)

சித்தநோய் செய்கின்ற சீதநோய் வாதமொடு
பித்தநோய் கொண்டவர்பாற் பேர்ந்திலையோ - மெத்தரிய (௪௫௭)

கைப்பிணியுங் காற்பிணியுங் கட்பிணியோ டெண்ணரிய
மெய்ப்பிணியுங் கொண்டவரை விண்டிலையோ - வெய்ப்புடைய (௪௫௮)

முட்டேறுங் கைகான் முடங்கூன் முதலாய
வெட்டேறுங் கொண்டவரை யெண்ணிலையோ - தட்டேறிங் (௪௫௯)

கெண்ணற்ற துண்டே லிளமை யொருபொருளா
யெண்ணப் படுமோவென் றெண்ணிலையே - யெண்ணத்திற் (௪௬0)

பொய்யென் றறவோர் புலம்புறவு மிவ்வுடம்பை
மெய்யென்று பொய்ம்மயக்க மேவினையே - கைநின்று (௪௬௧)

கூகா வெனமடவார் கூடி யழல்கண்டு
நீகாதல் வைத்து நிகழ்ந்தனையே - மாகாதல் (௪௬௨)

பெண்டிருந்து மாழ்கப் பிணங்கொண்டு செல்வாரைக்
கண்டிருந்து மந்தோ கலங்கிலையே - பண்டிருந்த (௪௬௩)

ஊரார் பிணத்தி னுடன்சென்று நாமீண்டு
நீராடல் சற்று நினைந்திலையே - சீராக (௪௬௪)

இன்றிருந்தார் நாளைக் கிருப்பதுபொய் யென்றறவோர்
நன்றிருந்த வார்த்தையுநீ நாடிலையே - யொன்றி (௪௬௫)

உறங்குவது போலுமென் ற வொண்குறளின் வாய்மை
மறங்கருதி யந்தோ மறந்தாய் - கறங்கின் (சசுசு)

நெருன லுளனொருவ னென்னு நெடுஞ்சொன்
மருவுங் குறட்பா மறந்தாய் - தெருவில் (சசுஎ)

இறந்தார் பிறந்தா ரிறந்தா ரெனுஞ்சொன்
மறந்தாய் மறந்தாய் மறந்தா - யிறந்தார் (சசுஅ)

பறையோசை யண்டம் படியொன் ருெலிக்க
மறையோசை யன்றே மறந்தா - யிறையோன் (சசுகூ)

புல்லினந்து மென்றருளும் பொன்மொழியை மாயா
மலமொன்றி யந்தோ மறந்தாய் - நிலனென்றி (சஎo)

விக்கு ளெழநீர் விடுமினென வயலோர்
செக்குருக லந்தோ நினைந்திலையே - மிக்கனலில் (சஎக)

நெய்விடல்போ லுற்றவர்கண் ணீர்விட் டழவுயிர்பன்
மெய்விடலுங் கண்டனைநீ விண்டிலையே - செய்வினையின் (சஎஉ)

வாள்கழியச் செங்கதிரோன் வான்கழிய நம்முடைய
நாள்கழிதற் கந்தோ நடுங்கிலையே - கோள்கழியும் (சஎங)

நாழிகையோர் நாளாக நாடினையே நாளையொரு
நாழிகையா யெண்ணி நலிந்திலையே - நாழிகைமுன் (சஎச)

நின்று ரிருந்தார் நிலைகுலைய வீழ்ந்துயிர்தான்
சென்று ரெனக்கேட்டுந் தேர்ந்திலையே - பின்றுது (சஎரு)

தொட்டா ருணவுடனே தும்மினு ரம்மவுயிர்
விட்டா ரெனக்கேட்டும் வெட்கிலையே - தட்டாமல் (சஎசு)

உண்டார் படுத்தா ருறங்கினுர் பேருறக்கங்
கொண்டா ரெனக்கேட்டுங் கூசிலையே - வண்டாரார் (சஎஎ)

நேற்று மணம்புரிந்தார் நீறுனு ரின்றென்று
சாற்றுவது கேட்டுந் தணந்திலையே - வீற்றுறுசேர் (சஎஅ)

ஊர்ந்தார் தெருவி லுலாப்போந்தார் வானுலகஞ்
சேர்ந்தா ரெனக்கேட்டுந் தேர்ந்திலையே - சேர்ந்தாங்கு (சஎகூ)

என்னே யிருந்தா ரிருமினு ரீண்டிறந்தா
ரன்னே யெனக்கேட்டு மாய்ந்திலையே - கொன்னே (சஅo)

மருவுங் கருப்பைக்குள் வாய்ந்தே முதிராக்
கருவும் பிதிர்ந்துதிரக் கண்டாய் - கருவொன் (சஅக)

ருேதிங்க * ளையைந்தி லொவ்வொன்றி லந்தோ
கெடுகின்ற தென்றதுவுங் கேட்டாய் - படுமிந் (சஅஉ)

* ஐயைந்து என்பதனை ஐந்து மைந்து மென உம்மைத்தொகை யாகக்கொள்க.

நிலைமுற்ற யோனி நெருக்கி லுயிர்போய்ப்
பலனற்று வீழ்ந்ததுவும் பார்த்தாய் - பலனுற்றே (சஅங)

காவென்று வீழ்ந்தக் கணமே பிணமாகக்
கோவென் றழுவார் குறித்திலையோ - நோவின்றிப் (சஅச)

பாலனென்றே யன்னைமுலைப் பாலருந்துங் காலையிலே
கால னுயிர்குடிக்கக் கண்டிலையோ - மேலுவந்து (சஅரு)

பெற்றார் மகிழ்வெய்தப் பேசி விளையாடுங்கா
லற்றுவி போவ தறிந்திலையோ - கற்றுயப் (சஅசு)

பள்ளியிடுங் காலவனைப் பார நமன்வாயி
லள்ளியிடுந் தீமை யறிந்திலையோ - பள்ளிவிடுங் (சஅஎ)

காளைப் பருவமதிற் கண்டா ரிரங்கிடவவ்
வாளைச் சமன்கொள்வ தாய்ந்திலையோ - வேளைமண (சஅஅ)

மாப்பிள்ளை யாகி மணமுடிக்கு மன்றவனே
சாப்பிள்ளை யாதலெண்ணிச் சார்ந்திலையே - மேற்பிள்ளை (சஅகூ)

மாடையேர்ப் பெண்டுடனில் வாழுங்காற் பற்பலர்தாம்
பாடைமேற் சேர்தலினைப் பார்த்திலையோ - வீடலிஃ (சகூ0)

திக்கணமோ மேல்வந் திடுங்கணமோ வன்றிமற்றை
யெக்கணமோ வென்றுர்நீ யெண்ணிலையே - தொக்குறுதோற் (சகூக)

கூடென்கோ விவ்வுடம்பைக் கோள்வினைநீ ரோட்டில்விட்ட
வேடென்கோ நீர்மே லெழுத்தென்கோ - காடென்கோ (சகூஉ)

பாழென்கோ வொன்பதுவாய்ப் பாவையென்கோ வன்பிறவி
யேழென்கோ கன்மமதற் கீடென்கோ - தாழ்மண்ணிற் (சகூங)

பாண்டமென்கோ வெஞ்சரக்குப் பையென்கோ பாழ்ங்கரும
காண்டமென்கோ வாணவத்தின் கட்டென்கோ - கோண்டகையார் (சகூச)

மெய்யென்கோ மாய விளைவென்கோ மின்னென்கோ
பொய்யென்கோ மாயப் பொடியென்கோ — மெய்யென்ற (சகூரு)

மங்கலத்தை மங்கலத்தால் வாஞ்சித் தனருலக
ரங்கவற்றை யெண்ணு தலைந்தனையே - தங்குலகின் (சகூசு)

மற்றிதனை யோம்பி வளர்க்க வுழன்றனைநீ
கற்றதனை யெங்கே கவிழ்த்தனையே - யற்றவனா (சகூஎ)

இக்கட் டவிழ்த்திங் கெரிமூட் டெனக்கேட்டும்
முக்கட்டுந் தேட முயன்றனையே - யிக்கட்டு (சகூஅ)

மண்பட்டு வெந்தீ மரம்பட் டிடக்கண்டும்
வெண்பட் டுடுக்க விரைந்தனையே - பண்பட்ட (சகூகூ)

ஐயா வரைநா ணவிழுமெனக் கேட்டுநின்று
மெய்யா பரணத்தின் மேவினையே - யெய்யாமல் (ருOO)

காதிற் கடுக்கன் கழற்றுமெனக் கேட்டுநின்று
மேதிற் பணியினிடத் தெய்தினையே - தாதிற்குத் (ருOக)

துற்கந்த மாகச் சுடுங்கான் முகர்ந்திருந்தும்
நற்கந்தத் தின்பா நடந்தனையே - புற்கென்ற (ருOஉ)

வன்சுவைத்தீ நாற்ற மலமாய் வரல்கண்டு
மின்சுவைப்பா லெய்தி யிருந்தனையே - முன்சுவைத்துப் (ருOஙா)

பாறுண்ட காட்டிற் பலர்வெந் திடக்கண்டுஞ்
சோறுண் டிருக்கத் துணிந்தனையே - மாறுண்டு (ருOச)

கூம்புலகம் பொய்யெனநான் கூவுகின்றேன் கேட்டுமிகு
சோம்பலுடன் றூக்கந் தொடர்ந்தனையே - யாம்பலனோர் (ருOரு)

நல்வாழ்வை யெண்ணி நயந்தோர் நயவாத
வில்வாழ்வை மெய்யென் றிருந்தனையே - சொல்லாவி (ருOசா)

ஈன்றோன் றனைநாளு மெண்ணும விவ்வுடம்பை
யீன்றோனா யீன்றோனொன் றெண்ணினையே - யீன்றோர்கள் (ருOஎ)

நொந்தா லுடனின்று நோவார் வினைப்பகைதான்
வந்தா லதுநீக்க வல்லாரோ - வந்தாடல் (ருOஅ)

உற்றசிறார் நம்மடையா தோட்டுகிற்பார் தென்றிசைவாழ்
மற்றவன்வந் தாற்றடுக்க வல்லாரோ - சிற்றுணவை (ருOகூ)

ஈங்கென்றால் வாங்கி யிடுவா ரருளமுதம்
வாங்கென்றால் வாங்கியிட வல்லாரோ - தீங்ககற்றத் (ருகO)

தூண்டா மனையாதிச் சுற்றமெலாஞ் சுற்றியிட
நீண்டா யவர்நன் னெறித்துணையோ - மாண்டாற்பின் (ருகக)

கூடி யழத்துணையாய்க் கூடுவார் வன்னரகில்
வாடியழும் போது வருவாரோ - நீடியநீ (ருகஉ)

இச்சீவர் தன்றுணையோ வீங்கிவர்க ணின்றுணையோ
சிச்சீ யிதென்ன திறங்கண்டா - யிச்சீவர் (ருகங)

நின்னைவைத்து முன்சென்றா னீசெய்வ தென்னவர்முன்
னிந்நிலத்தி னீசென்றா லென்செய்வர் - நின்னியல்பின் (ருகச)

எத்தனைதா யெத்தனைபே ரொத்தனையூ ரொத்தனைவாழ்
வெத்தனையோ தேக மெடுத்தனையே - யத்தனைக்கும் (ருகரு)

அவ்வவ் விடங்கடொறு மவ்வவனா யாண்டாண்டிங்
கெவ்வெவ் விதத்தா லிழந்தனையோ - வவ்விதத்தில் (ருகசா)

ஒன்றேனு நன்று யுணர்ந்திருத்தி யேலிவனா
யின்றே துறத்தற் கிசையாயோ - நின்றேரில் (ருகஎ)

தாயார் மனையார் தனயரார் தம்மவரார்
நீயா ரிதனை நினைந்திலையே - சேயேகில் (ருகஅ)

எங்குவரோ வென்று யிபமன்வரி னின்னுயிரை
வாங்கிமுடி யிட்டகத்தில் வைப்பாரோ - நீங்கியிவண் (ருகசு)

உன்றந்தை தன்றனக்கிங் கோர்தந்தை நாடவனீ
யென்றந்தை யென்றுரைப்ப தெவ்வாறே - சென்றுபின்னின் (ருஉ0)

தன்மனையாண் மற்றொருவன் றன்மனையா ளாவளெனி
லென்மனையா ளென்பதுநீ யெவ்வணமே - நன்மைபெறு (ருஉக)

நட்பமைந்த நன்னெறிநீ நாடா வகைதடுக்கு
முட்பகைவ ரொன்றிவரை யோர்ந்திலையே -நட்புடையாய் (ருஉஉ)

எம்மான் படைத்தவுயி ரித்தனைக்குட் சில்லுயிர்பா
லிம்மா லடைந்ததுநீ யென்னினைந்தோ - வம்மாறில் (ருஉந)

எம்பந்த மேநினைக்கிங் கில்லையென்றான் மற்றையவர்
தம்பந்த மெவ்வாறு தங்கியதே - சம்பந்தர் (ருஉச)

அற்றவருக் கற்றசிவ ஞமெனுமப் பொன்மொழியை
மற்றைமொழி போன்று மறந்தனையே - சிற்றுயிர்க்குக் (ருஉரு)

கற்பனையிற் காய்ப்புளதாய்க் காட்டும் பிரபஞ்சக்
கற்பனையை மெய்யென்று கண்டனையே - பற்பலவாந் (ருஉசா)

* தூரியத்திற் றேன்றெலிபோற் றேன்றிக் கெடுமோயா
காரியத்தை மெய்யெனநீ கண்டனையே - சீறியற்றும் (ருஉஎ)

ஆடகத்திற் பித்தளையை யாலித் திடுங்கபட
நாடகத்தை மெய்யென்று நம்பினையே - நீடகத்திற் (ருஉஅ)

காயவித்தை யாலக் கடவு ளியற்றுமிந்த
மாயவித்தை மெய்யெனநீ வாழ்ந்தனையே - வாயவித்தை (ருஉகூ)

இப்படக மாயை யிருட்டம்மே யென்னுமொரு
முப்படகத் துள்ளே முயங்கினையே - யொப்பிறைவன் (ருந0)

ஆனவொளி யிற்பரையா மாதபத்தி ஞற்றேன்றுங்
கானலினை நீராய்க் களித்தனையே - யானகிரி (ருநக)

* தூரியம்-எ-து, பறை.

யாசத்தி யென்றிடுமோர் ரம்மைவிளை யாட்டெனுமிப்
பாசத்தி னுள்ளே படர்ந்தனையே - நேசத்திற் (ருஙஉ)

பொய்யொன்றுண் மெய்யிற் புகும்பால் லீலைதனை
மெய்யென்று வீணில் விரிந்தனையே - பொய்யென்று (ருஙங)

மீட்டுநின்ற லீலா விநோத மெனுங்கதையைக்
கேட்டுநின்று மந்தோ கிளர்ந்தனையே - யீட்டிநின்ற (ருஙச)

காலத்தை வீணிற் கழிக்கும் படிமேக
சாலத்தை மெய்யாய்த் தருக்கினையே - சாலத்திற் (ருஙரு)

கண்மையகன் றேங்குமந்த காரத்திற் செம்மாப்புற்
றுண்மையொன்றுங் காணு துழன்றனையே - வண்மையிலாய் (ருஙசு)

இங்குநினைப் பெரியோ ரென்னினைப்பா - ரோமாப்பிற்
கங்குலினைப் பகலாய்க் கண்டனையே - தங்குறுமித் (ருஙஎ)

தேகாதி பொய்யெனவே தேர்ந்தா ருரைக்கவுநீ
மோகாதிக் குள்ளே முயல்கின்று - யோகோறுங் (ருஙஅ)

கோமுடிக்கட் டைப்பற்றிக் கொண்டதென்றுன் மற்றதற்குப்
பூமுடிக்கத் தேடுகின்றோர் போன்றனையே - மாமுடிக்கும் (ருஙகூ)

வாழ்வுநிலை யன்றிமைப்பின் மாறுகின்ற தென்றுரைத்தும்
* வீழ்வுகொடு வாளா விழுகின்றாய் - தாழ்வுறநும் (ருசo)

விண்டுறங்கை வீடனலால் வேகின்ற தென்னவுட்போ
யுண்டுறங்கு கின்றோரை யொத்தனையே - தொண்டுலகங் (ருசக)

கானமுயற் கொம்பாய்க் கழிகின்ற தென்கின்றே
னீநயமுற் றந்தோ நிகழ்கின்று - யானநும்மூர் (ருசஉ)

வெள்ளத்தி னுன்முழுகி விட்டதென்றுற் சென்றுகடை
கொள்ளத் திரிபவர்போற் கூடினையே - கொள்ளவிங்கு (ருசங)

கண்டனவெல் லாநிலையாக் கைதவமென் கின்றேனீ
கொண்டவைமுற் சேரக் குறிக்கின்று - யுண்டழிக்க (ருசச)

ஊழிவெள்ளம் வந்ததென்று வுண்பதற்கு மாடுதற்கு
† மூழிநன்னீ ரோவென்பா ரொத்தனையே - யேழியற்றுங் (ருசரு)

தற்புவனம் போகந் தனுகரண மென்கின்ற
சொற்பனத்தி லந்தோ துவன்றினையே - பற்பகலும் (ருசசு)

உண்டனவே யுண்கின்று யோர்ந்தனவே யோர்கின்றாய்
கண்டனவே கண்டு களிக்கின்றாய் - கொண்டனவே (ருசஎ)

* வீழ்வு-எ-து, விருப்பம். † ஊழி - எ - து, கடல்.

உண்டனவே யுண்கின்ற யோர்ந்தனவே யோர்கின்றாய்
கண்டனவே கண்டு களிக்கின்றாய் - கொண்டனவே (௫௪எ)

கொண்டியங்கு கின்றாய் குறித்தனவே பிற்குறித்துப்
பண்டறியார் போலப் படர்கின்றாய் - பண்டறிந்து (௫௪அ)

சொல்லாடி நின்றனவே சொல்கின்றாய் மற்றிதனை
நல்லோர்கள் கண்டா னகையாரோ - செல்லான (௫௪௯)

காலம்போ லீங்குநிகழ் காலமுங்காண் கின்றியெதிர்
காலமற்று மத்திரமேற் காண்குவையேற் - சாலவுமுன் (௫௫௦)

போதுசெலா முன்னமனு பூதியைநீ நாடாமல்
யாதுபய னெண்ணி யினைகின்றாய் - தீதுசெயும் (௫௫௧)

வீணவத்தை யெல்லாம் விளைக்குந் திறன்மூல
வாணவத்தி னாலே யழிந்தனையே - யாணவத்தில் (௫௫௨)

நீயா ரெனவறியாய் நின்னெதிரி னின்றவனை
நீயா ரெனவினவி நீண்டனையே - யோயாமல் (௫௫௩)

ஊனின்ற வொன்றி னுளவறியா யந்தோநீ
நானென்று சொல்லி நலிந்தனையே - நானென்று (௫௫௪)

சொல்லுதியோ சொல்லாயோ துவ்வாமை பெற்றொருநீ
யல்லலுறுங் காலத் தறைகண்டா - யல்லலெலாம் (௫௫௫)

நீயிங்கே நானங்கே நிற்கநடு வேகுதித்தா
னீயெங்கே நானெங்கே நின்றறிகா - ணீயிங்கு (௫௫௬)

ஒன்றெடுக்கச் சென்றுமற்றை யொன்றெடுக்கக் காண்கின்றே
னின்றடுத்த நீயெங் கிருந்தனையே - மன்றடுத்த (௫௫எ)

தாளா தரித்தேநின் றன்னைமறந் துய்யாது
வாளா மதத்தின் மலிகின்றாய் - கேளாயிச் (௫௫அ)

சார்பிலொன்று விட்டொழிந்தாற் சாலமகிழ் கிற்பேனுன்
சோர்புகொண்டு நீதான் றுயர்கின்றாய் - சார்புபெருந் (௫௫௯)

தூவென்று நானிவணஞ் சும்மா விருந்தாலும்
வாவென் றெனையும் வலிக்கின்றாய் - யோவுன்றன் (௫௬௦)

சூழ்ச்சியறி யேனீ சுழல்கின்ற போதெல்லாஞ்
சூழ்ச்சியிலே நானுஞ் சுழல்கின்றே - னீட்சியினீ (௫௬௧)

காலசைத்தால் யானுங் கடிதிற் றலையசைப்பேன்
மாலசைத்த நின்புணர்ப்பின் வாறெதுவோ - வாலுமண்டக் (௫௬௨)

கூவத்தில் யானோர் குடநீ கயிற்றோடு
மேவற் கொளுமேழை யென்கேனோ - பாவத்திற் (௫௬௩)

சுற்றுண்ட நீகடலிற் றேன்றுசுழி யாகவதி
லெற்றுண்ட நான்றிரண மென்கேனே - பற்றிடுநீ (ருகூச)

சங்கற்ப மாஞ்சுறை தானாக நானுடு
மங்கட்சருசென் றறைகேனே - பொங்குற்ற (ருகூரு)

சேலைவிரா யோர்தறியிற் செல்குழைநீ பின்றெடரு
நூலிழைநா னென்று நுவல்கேனே - மாலிடுநீ (ருகூகூ)

துள்ளுறுப்பின் மட்பகைஞன் சுற்றுழி யாகவதி
னுள்ளுறுப்பே நானென் றுரைக்கேனே - வெள்ளுறுநீ (ருகூஎ)

பாழலைவா னேகும் பருந்தாக வப்பருந்தி
னீழலைநா னென்று நினைகேனே - நீழலுரு (ருகூஅ)

நின்வசநா னென்றுலகு நிந்தைமொழி கின்றதலா
லென்வசநீ யென்ப திலைகண்டா - யென்வசநீ (ருகூகூ)

ஆனு லெளியேனுக் காகாப் பொருளுளவோ
வானாடர் வந்து வணங்காரோ - § வானுமல் (ருஎ0)

எண்ணுதற்கும் பேசுதற்கு மெட்டாப்பரஞ்சோதிக்
கண்ணுதலு மங்கைக் கனியன்றே - வெண்ணுமிடத் (ருஎக)

தென்செய்வே னேர்கணமு மென்சொல்வழி நில்லாமற்
கொன்செய்வே னென்று குதிக்கின்றாய் - வன்செய்யுஞ் (ருஎஉ)

* சிந்தோடு மோர்வடவைத் தீயுங் கரத்தடைப்ப
ரந்தோ வுனையா ரடக்குவரே - வந்தோடுங் (ருஎங)

¶ கச்சோத மென்னக் கதிரோன் றனையெடுப்ப
ரச்சோ வுனையா ரடக்குவரே - வைச்சோங்கு (ருஎச)

மூவுலகுஞ் சேர்த்தொருதம் முன்றானை யின்முடிவ
ராவுனையு மிங்கா ரடக்குவரே - மேவுபல (ருஎரு)

தேசமென்றுங் காலமென்றுந் திக்கென்றும் பற்பலவாம்
வாசமென்று மவ்வவ் வழக்கென்று - மாசுடைய (ருஎகூ)

போகமென்று மற்றைப் புலனென்றும் பொய்யகலா
யோகமென்றும் பற்பலவாம் யூகமென்று - மேகமென்றும் (ருஎஎ)

வானென்று முந்நீர் மலையென்று மண்ணென்று
மூனென்று மற்றை யுறவென்று - மேனின்ற (ருஎஅ)

சாதியென்றும் வாழ்வென்றுந் தாழ்வென்று மிவ்வுலக
நீதியென்றுங் கன்ம நெறியென்று - மோதரிய (ருஎகூ)

§ ஆனுமை - எ-து, விட்டு நீங்காமை. * சிந்து-எ-து, கடல்.
¶ கச்சோதம்-எ-து, மின்மினிப்பூச்சி.

அண்டமென்று மண்டத் தசைவு மசைவுமலாப்
பண்டமென்றுஞ் சொல்பவெலாம் பன்முகங்கள் - கொண்டிருந்த (௫௮௦)

உன்னினைவி னுள்ளே யுதித்திட் டெவிநிற்ப
வென்றினைவு கொண்டோமற் றிவ்வுலக - ரெங்ஙனவையுந் (௫௮௧)

தந்தோ னெவனோ சதுமுகனுண் டென்பார்க
ளங்தோநின் செய்கை யறியாரே - யந்தோநான் (௫௮௨)

ஆமென்றுன் மற்றதனை யல்லவென்பா யல்லவென்று
லாமென்பா யென்னை யலேக்கின்றாய் - நாமன்பாய் (௫௮௩)

என்றும் பிறந்திறவா வின்ப மடைதுமென்று
னன்றென் றொருப்படுவாய் நண்ணுங்கா - † றொன்றெனவே (௫௮௪)

செல்கிற்பாய் செல்லாச் சிறுநடையிற் றீமையெலா
நல்கிற்பா யென்னேநின் னட்புடைமை - சொல்கிற்பில் (௫௮௫)

ஆவதுவு நின்னா லழிவதுநின் னாலெனயா
னேவதுவுங் கண்டயலி னேக்கினையே - தாவுமெனக் (௫௮௬)

காணவலம் பெண்ணவல மாகும் பொருளவல
மூணவல முற்றாரோ ரேவலம் - பூணவலம் (௫௮௭)

ஊனவல மன்றியுமென் னுற்றதுணை யாநீயுந்
தானவல மென்றாலென் சாற்றுவதே - நானிவணம் (௫௮௮)

இன்பமெது கண்டேமா விச்சையெலாந் துன்பமதிற்
றுன்பம் பிறப்பென்றே சோர்கின்றேன் - வன்புடைய (௫௮௯)

இப்பிறவித் துன்பத்தி னுந்திதியிற் றுன்பமது
செப்பரிதா மென்றே திகைக்கின்றேன் - செப்பிறப்பின் (௫௯௦)

ஓயாத துன்ப முனாக்க வுடம்பெல்லாம்
வாயாகி னும்போத மாட்டாதே - வேயேநாம் (௫௯௧)

செய்வதென்னோ வென்று தியங்குகின்றே னிவ்வணநா
னைவதெல்லாங் கண்டு நடந்தனையே - கைவருமிவ் (௫௯௨)

வில்லிக் குடமுடைந்தால் யாதாமென் றுன்னுடன்யான்
சொல்லித் திரிந்துமெனைச் சூழ்ந்திலையே - வல்லியமன் (௫௯௩)

நாளையோ வின்றோ நடக்கின்ற நாட்களிலெவ்
வேளையோ தூது விடிலவர்கள் - கேளையோ (௫௯௪)

நல்லோ மெனினு நடவார் நடவார்நாஞ்
செல்லோ மெனினுமது செல்லாதே - வல்லீர்யாம் (௫௯௫)

† தொன்று-எ-து, பழமை.

இன்சொலினே மின்றிங் கிருந்துவரு வோமெனயா
மென்சொலினு மச்சொலெலா மேலாதே - மன்சொலுடைத் (ருகசூ)

தாமரையோன் மான்முதலோர் தாமறையா ராயிலன்று
நாமறைவோ மென்ற னடவாதே - நாமிவணம் (ருகூஎ)

அந்நாள் வருமுன்ன ராதி யருளடையு
நன்னா ளடைதற்கு நாடுதுங்கா - ணென்னநின் (ருகூஅ)

றோதுகின்றேன் கேட்டு முறூர்போன் றுலகியலிற்
போதுகின்ற யாது புரிகிற்பேன் - றீதுநன்றோ (ருகூகூ)

டேற்றவடி நாளுறவா மென்னைவிட்டுத் தாமதமா
நேற்றையுற வோடுறவு நேர்ந்தனையே - சாற்றுமந்த (சூ00)

தாமதமே யோரவித்தைத் தாமதமே யாவரணந்
தாமதமே மோக சமுத்திரங்காண் - டாமதமென் (சூ0க)

றையோ வொருநீ யதனோடு கூடினையாற்
பொய்யோநா மென்று புகன்றதுவே - கையாமல் (சூ0உ)

ஒன்னலர்போற் கூடுவா ரோடொருநீ கூடுங்கா
லென்னைநினை யாயென்சொ லெண்ணுதியே - பன்னுறுநின் (சூ0ங)

றீதெல்லா நானுதி சேடர்பல ராய்ப்பிரமன்
போதெல்லாஞ் சொல்லிடினும் போதாதே - யாதலினல் (சூ0ச)

வைகின்றேன் வாழ்த்தாய் மதித்தொருநீ செய்வதெல்லாஞ்
செய்கின்ற யீதோர் திறமன்றே - யுய்கிற்பான் (சூ0ரு)

வாடுகின்றே னின்னை மதித்தொருநா னீமலத்தை
நாடுகின்ற யீதோர் நலமன்றே - கூடுகின்ற (சூ0சூ)

ஈண்டோ ரணுவா யிருந்தநீ யெண்டிசைபோ
னீண்டா யிஃதோர் நெறியன்றே - வேண்டாநீ (சூ0எ)

மற்றவர்போ லன்றே மனனேநின் வன்புகழை
முற்றுமிவ ணூர்தான் மொழிவாரே - சுற்றிமனந் (சூ0அ)

தானடங்கி னெல்லாச் சகமு மடங்குமொரு
மானடங்கொள் பாத மலர்வாய்க்கும் - வானடங்க (சூ0கூ)

எல்லா நலமு மிதனு லெனமறைக
ளெல்லாநின் சீரே யெடுத்தியம்பு - மெல்லார்க்கும் (சூக0)

மாகமங்கொண் டுற்ற மனேலயமே வான்கதியென்
றுகமங்க ணின்சீ ரறைந்திடுங்கா - ணுகுமிந்த (சூகக)

நன்மை பெறுமேன்மை நண்ணியநீ நின்னுடைய
தன்மைவிட லந்தோ சதுரலவிப் - புன்மையெலாம் (சூகஉ)

விட்டொழித்து நான்மொழியு மெய்ச்சுகத்தை நண்ணுதிநீ
யிட்டிழைத்த வச்சுகந்தான் யாதென்னிற் - கட்டழித்த (சுகங)

வேட்டுஞ் சுகமென்றும் மெய்யுணர்வை யின்றிநின்ற
மூடஞ் சுகமென்று முன்பலவாங் - தோடஞ்செய் (சுகச)

போகஞ் சுகமென்றும் போகந் தருங்கரும
யோகஞ் சுகமென்று முண்டிலையென் - ருகஞ்செய் (சுகரு)

போதஞ் சுகமென்றும் பொன்றல்சுக மென்றும் விந்து
நாதஞ் சுகமென்று நாம்பொருளென் - ரேதலஃ (சுகசு)

தொன்றே சுகமென்று முட்கண் டிருக்குமந்த
நன்றே சுகமென்று நாம்புறத்திற் - சென்றேகண் (சுகஎ)

டாற்றல் சுகமென்று மன்பறியாச் சூனியமே
யேற்ற சுகமென்று மிவ்வண்ண - மேற்றபடி (சுகஅ)

வெல்லுகின்றோர் போன்று விரிநீ ருலகிடையே
சொல்லுகின்றோர் சொல்லுஞ் சுகமன்று - சொல்லுகின்ற (சுகக)

வானுதி தத்துவங்கண் மாய்த்தாண் டுறுகின்ற
நானுதி மூன்றிலொன்று நாடாம - லானுமை (சு௨0)

எள்ளும் பகலு மிரவுமிலா வோரிடத்தி
லுள்ளும் புறம்பு மொருபடித்தாய் - வள்ளலென (சு௨க)

வாழும் பரசிவத்தின் வன்னிவெப்பம் போலமுற்றுஞ்
சூழுஞ் சுகமே சுகங்கண்டாய் - சூழ்வதனுக் (சு௨௨)

கெவ்வா றிருந்தா லியலு மெனிலம்ம
விவ்வா றிருந்தா லியலாதாற் - செவ்வாற்றிற் (சு௨ங)

பற்றற்றான் பற்றினையே பற்றியிடல் வேண்டுமெது
பற்றற்று லன்றிப் பலியாதாற் - பற்றற்றல் (சு௨ச)

வேதனையா லீங்கு விரியுஞ் சகப்பழக்க
வாதனைபோய் நீங்கிலன்றி வாராதால் - வாதனையும் (சு௨ரு)

ஈனமந்தோ விவ்வுலக மென்றருளை நாடுகின்ற
ஞானம்வந்தா லன்றி நலியாதான் - ஞானமது (சு௨சு)

போகமுற்றும் பொய்யெனவே போது மனித்தியவி
வேகமுற்று லன்றி விளங்காதா - லாகவஃ (சு௨எ)

துண்ணவந்தாற் போலுமிவ னுற்றுவிசா ரித்திடுமோ
ரெண்ணம்வந்தா லன்றி யிசையாதா - லெண்ணமது (சு௨அ)

பங்கமடைந் தாரவையைப் பாராது சாதுக்கள்
சங்கமடைந் தாலன்றிச் சாராதா - லிங்கதனுல் (சு௨க)

வீழ்முகத்த ராகிநிதம் வெண்ணீ றணிந்தறியாப்
பாழ்முகத்தோர் தம்பாற் படர்ந்துறையேல் - பாழ்முகத்திற் (சுரு0)

பேயாட வுள்ளறியாப் பித்தாட நின்னுடனே
வாயாடு வோர்பான் மருவிநில்லே - னீயாடிப் (சுருக)

பேதித் திடவும் பிறழ்ந்திடவு நின்னுடனே
வாதித் திடுவோர்பால் வாய்ந்துறையேல் - சாதித்துச் (சுருஉ)

சைவமெங்கே வெண்ணீற்றின் சார்பெங்கே மெய்யான
தெய்வமெங்கே யென்பவரைச் சேர்ந்துறையே - லுய்வதெங்கே (சுருரு)

தீராச் சிவநிந்தை செய்துசிறு தேவர்களை
நேராய்ப் பிதற்றுவர்பா னேர்ந்துறையே - லோராமல் (சுருச)

எள்ளென்றுந் தெய்வமென்ப தில்லையிது தெளிந்துக்
கொள்ளென்றுந் துள்ளுகின்றோர் கூட்டமுறே - னள்ளொன்று (சுருடு)

நாமென்று நம்மையன்றி நண்ணும் பிரமமில்லை
யாமென்றுஞ் சொல்பவர்பா லார்ந்துறையே - ருமொன்ற (சுருசா)

எல்லா வறிவு மெமதறிவே யென்றுரைக்கும்
பொல்லா வலக்காரர் பொய்யுகவேல் - புல்லாக (சுருஎ)

அற்பமே மற்றவெலா * மாயிலழி யாக்காய
கற்பமே வத்துவென்பார் கண்ணடையேல் - சிற்சிலவாஞ் (சுருஅ)

சித்திகளே வத்துவென்பார் சேர்ந்துறையேல் பன்மாயா
சத்திகளே வத்துவென்போர் சார்படையேல் - பொத்தியவிச் (சுருகூ)

சன்மமே தோற்றுந் தரமாந் திரமனித்த
கன்மமே வத்துவென்போர் கண்ணுறையேல் கன்மமிகு (சுச0)

மாகங் கதியென்பார் மாட்டுறையேல் பல்போக
யோகம் பொருளென்பா ரூடுறையே - லேகங்கொள் (சுசக)

மண்ணென்பார் வானென்பார் வாய்முச் சுடரென்பார்
பெண்ணென்பார் மற்றவர்தம் பேருரையேன் - மண்ணின்பால் (சுசஉ)

மன்னுமாயாச் சில்லோர் மரந்தெய்வ மென்பார்மற்
றென்னுமாயா ரீண்டவர்பா லெய்தியிடேன் - மன்னலங்கள் (சுசரு)

பூத்தாற் சிறுவர்களும் பூசா பலமென்பர்
தேற்றார் சிவபூசை செய்யாராய்ப் - பூத்தாவி (சுசச)

வீறுகின்ற பூசையிலென் வீணென்று வீண்பாழ்வாய்க்
கூறுகின்ற பேயர்கள்பாற் கூடியுறேன் - மாறுகின்ற (சுசடு)

---

* ஆயில் - எ-து, ஆராயுங்கால் எனக்கொள்க.

நீட்கோல வாழ்க்கையெலா நீத்திடுவோன் பொன்னறைக்குத்
தாட்கோ லிடுவோரைச் சார்ந்துறையே - நீட்கோல (௬௪௬)

மெய்யொழுக்கத் தார்போல் வெளிநின் றகத்தொழியாப்
பொய்யொழுக்கத் தார்பாற் பொருந்தியுறேல் - பொய்யொழுக்கிற் (௬௪௭)

பொய்ந்நூல் பதறிப் புலம்புகின்ற பித்தர்கள்பா
லந்நூல் விரும்பி யடைந்தலையேல் - கைந்நேர்ந்து (௬௪௮)

கோடாது கோடி கொடுத்தாலுஞ் சைவநெறி
நாடா தவரவையை நண்ணியிடேல் - கோடாது (௬௪௯)

கொல்லா விரதமது கொள்ளாரைக் காணிலொரு
புல்லாக வெண்ணிப் புறம்பொழிக - வெல்லாமும் (௬௫௦)

ஆகநவில் கின்றதென்னம் மையனுக்கன் பில்லாரை
நீகனவி லேனு நினையற்க - வேகனடிக் (௬௫௧)

கன்பே வடிவா யருளே வுயிராய்ப்பே
ரின்பே வுணவா யிசைந்தாரு - மன்பாகிக் (௬௫௨)

கண்டிகையே பூணிற் கலவையே வெண்ணீறாய்க்
கொண்டிகவாச்சார்பு குறித்தாருந் - தொண்டுடனே (௬௫௩)

வாய்மலரான் மாலை வகுத்தலொடு நம்மிறைக்குத்
தூய்மலரான் மாலை தொடுப்பாருஞ் - சார்மலரோன் (௬௫௪)

வர்நந்த னப்பணிகண் டிச்சையுற நம்மிறைக்குச்
சீர்நந்த னப்பணிகள் செய்வோரு - நார்நந்தாத் (௬௫௫)

தீயின்மெழு காச்சிந்தை சேர்ந்துருகி நம்மிறைவாழ்
கோயின்மெழு காநின்ற கொள்கையரு - மேயினைத் (௬௫௬)

தாயில் வளர்க்குந் தயவுடைய நம்பெருமான்
கோயில் விளக்குங் குணத்தோருந் - தூயவருள் (௬௫௭)

இன்புடனே தீபமுத லெல்லாச் சரியைகளு
மன்புடனே செய்தங் கமர்வாரு - மன்புடனே (௬௫௮)

அண்ணியமே லன்பர்க் கமுதீத லாதிசிவ
புண்ணியமே நாளும் புரிவோரும் - புண்ணியமாத் (௬௫௯)

தேனே யமுதே சிவமே சிவமேயெம்
மானேயென் றேத்தி மகிழ்வாரும் - வானுன (௬௬௦)

மன்னே யருட்கடலே மாணிக்க மேயெங்க
ளன்னேயென் றுன்னி யமர்வோரு - நன்னேயப் (௬௬௧)

பண்ணீர் மொழியாற் பரிந்தேத்தி யானந்தக்
கண்ணீர்கொண் டுள்ளங் களிப்போரு - முண்ணீரிற் (௬௬௨)

பண்டெண்டுங் காணுப் பரிசினராய்ப் பொன்மேனி
கண்டுகண்டு நாளுங் களிப்போருந் - தொண்டடையும் (சுசுங)

பொற்பதிக மென்றெண்ணிப் போற்றியொரு மூவர்களின்
சொற்பதிகங் கொண்டு துதிப்போருஞ் - சொற்பனத்தும் (சுசுச)

மாசகத்திற் சேர்க்காத மாணிக்க மென்றதிரு
வாசகத்தை வாயான் மலர்வோரும் - வாசகத்தின் (சுசுரு)

மன்னிசைப்பான் மேலோர் வகுத்தேத்தி நின்றதிரு
வின்னிசைப்பா வாதி யிசைப்போரு - மன்னிசைப்பின் (சுசுசு)

நல்வாழ் வருளுகின்ற நம்பெருமான் மான்மியங்கள்
சொல்வோருங் கேட்டுத் தொழுவோருஞ் - சொல்வாய்ந்த (சுசுஎ)

தாதாவென் றன்புடனே சாமகீ தங்கண்முதல்
வேதாக மங்கள் விரிப்போரும் - வேதாந்தஞ் (சுசுஅ)

சேர்ந்தோர்க் கருளுஞ் சிவமே பொருளென்று
தேர்ந்தே சிவபூசை செய்வோரு - மார்ந்தேத்தி (சுசுகூ)

நன்னெஞ்சே கோயிலென நம்பெருமான் றன்னைவைத்து
மன்னுஞ் சிவநேயம் வாய்ந்தோரு - முன்னயன்றன் (சுஎ0)

அஞ்செழுத்தெல் லாங்கேட்கி லஞ்செழுத்தா மெம்பெருமா
னஞ்செழுத்தா லர்ச்சித் தமர்வோரு - மஞ்செனவே (சுஎக)

விஞ்சும் பொறியின் விடயமெலா நம்பெருமான்
செஞ்சுந் தரப்பதத்திற் சேர்த்தோரும் - வஞ்சஞ்செய் (சுஎஉ)

பொய்வே தனைநீக்கும் புண்ணியன்பாற் றம்முயிரை
நைவே தனமாக்கு நல்லோருஞ் - செய்வேலை (சுஎங)

நீட நடத்தலொடு நிற்றன்முத னம்பெருமா
னூட லடித்தியான மார்ந்தோரும் - வாடலறத் (சுஎச)

தூய நனவிற் சுழுத்தியொடு நம்பெருமா
னேய நிகழ்த்து நெறியோரு - மாயமுறு (சுஎரு)

மானமதுவாய் நின்ற வயநீக்கித் தானற்றுத்
தானதுவாய் நிற்குந் தகையோரும் - வானமதில் (சுஎசு)

வானங்கண் டாடு மயில்போன்று நம்பெருமான்
ஞானங்கண் டாடுந் தவத்தோரு - மோனமொடு (சுஎஎ)

தாழ்சடையு நீறுஞ் சரிகோவ ணக்கீளும்
வாழ்சிவமுங் கொண்டு வதிவோரு - மாழ்நிலைய (சுஎஅ)

வாரியலை போன்றசுத்த மாயையினு லாம்பூத
காரியங்க ளாதியெலாங் கண்டொழித்து - ஊரியங்கத் (சுஎகூ)

தஞ்சந் தருமலரோன் றத்துவமாம் பூதங்க
ளஞ்சும் பொறியஞ்சு மஞ்சறிவு - மஞ்செனுமோர் (சூ அ0)

வாக்குமுத லஞ்சுமற்று மாலோன்றன் றத்துவமா
மூக்குங் கலைமுதலா மோரேழு - நீக்கியப்பால் (சூ அக)

மேவி விளங்குசுத்த வித்தைமுத ஞதமட்டுந்
தாவி வயங்குசுத்த தத்துவத்தின் - மேவியகன் (சூ அஉ)

றப்பா லருள்கண் டருளாற் றமைத்தாங்கண்
டப்பாற் பரவெளிகண் டப்பாலுக் - கப்பாலும் (சூ அரு)

றிராச் சுயமாய்ச் சிதானந்த மாமொளியைப்
பாரா விருந்த படியிருந்து - பேராது (சூ அச)

கண்டதுவென் றென்றுங் கலவாது தாங்கலந்து
கொண்டசிவ யோகியராங் கொற்றவரு - மண்டரிய (சூ அரு)

சத்துவத்திற் சத்துவமே தம்முருவாய்க் கொண்டுபர
தத்துவத்தி னிற்குந் தகவோரு - மத்துவத்தில் (சூ அசு)

தீதுஞ் சுகமுஞ் சிவன்செயலென் றெண்ணிவந்த
யாதுஞ் சமமா விருப்போருங் - கோதுபடக் (சூ அஎ)

கூறுங் குறியுங் குணமுங் குலமுமடி
யீறுங் கடையு மிகந்தோரும் - வீறுகின்ற (சூ அஅ)

சேந்தி னடைந்தவெலாஞ் சீரணிக்கச் சேர்சித்த
சாந்தி யுடனே சரிப்போருஞ் - சாந்திபெறத் (சூ அகூ)

தம்மையுறுஞ் சித்செவையுந் தாமுவத்தல் செய்யாமற்
செம்மையுடன் வாழுந் திறலோரு - மெம்மையினும் (சூ கூ0)

ஆராமை யோங்கு மவாக்கடனீர் மான்குளம்பி
னீராக நீந்தி நிலத்தோறுஞ் - சேராது (சூ கூக)

தம்பொருளைக் கண்டே சதானந்த வீட்டினிடைச்
செம்பொருளைச் சார்ந்த திறத்தோரு - மண்பொருள்போய்த் (சூ கூஉ)

தாய ரெனமாதர் தம்மையெண்ணிப் பாலர்பித்தர்
பேயரென நண்ணும் பெரியோரு - மீயதனின் (சூ கூரு)

எய்ப்பரிசா மோர்திரண மெவ்வுலகுஞ் செய்தளிக்க
மெய்ப்பரிசஞ் செய்யவல்ல வித்தகரு - மெய்ப்படவே (சூ கூச)

யாவு மறிந்து மறியார்போன் றெப்பொழுதுஞ்
சாவும் பிறப்புந் தவிர்ந்தோரு - மோவலின்றி (சூ கூரு)

வைதிடினும் வாழ்கவென வாழ்த்தி யுபசாரஞ்
செய்திடினுந் தன்மை திறம்பாரு - மெய்வகையில் (சூ கூசு)

தேறு வுலகஞ் சிவமயமாய்க் கண்டெங்கு
மேறு திறியா திருப்போரு - மாறுது (சுகூஎ)

மோனந்தான் கொண்டு முடிந்தவிடத் தோங்குபர
மானந்தா தீதத் தமர்ந்தோருந் - தானந்தாச் (சுகூஅ)

சாதுக்க ளாமவர்தஞ் சங்க மகத்துவத்தைச்
சாதுக்க ளன்றியெவர் தாமறிவார் - நீதுக்க (சுகூகூ)

நீங்கியென்னோர் சங்கத்தி னின்றுமகிழ்ந் தேத்திநித
மாங்கவர்தாட் குற்றேவ லாய்ந்தியற்றி - யோங்குசிவ (எ௦௦)

பஞ்சா க்ஷரத்தைப் பகரருளே நாவாக
வெஞ்சாப் பரிவுடனே யெண்ணியருட் - செஞ்சோதித் (எ௦க)

தாதொன்று தும்பைமுடித் தாணுவடி யொன்றிமற்றை
யாதொன்று நோக்கா தமைந்திடுக - தீதென்ற (எ௦உ)

பாழ்வாழ்வு நீங்கப் பதிவாழ்வி லெஞ்ஞான்றும்
வாழ்வாயென் னோடு மகிழ்ந்து. (எ௦௩)

திருச்சிற்றம்பலம்.

---

## நெஞ்சறிவுறுத்தல்.

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

சிவகணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சிவநேசவெண்பா.



## காப்பு.

நேரிசைவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

முன்னவனே யானை முகத்தவனே முத்திநலஞ்
சொன்னவனே தூய்மெய்ச் சுகத்தவனே - மன்னவனே
சிற்பரனே யைங்கரனே செஞ்சடையஞ் சேகரனே
தற்பரனே நின்றாள் சரண். (க)

வீறுடையாய் வேலுடையாய் வெற்புடையாய் விண்ணுடையாய்
நீறுடையாய் நேயர்கடந் நெஞ்சுடையாய் - கூறு
முதல்வாவோ ராறு முகவாமுக் கண்ணன்
புதல்வாநின் றாளெம் புகல். (உ)

திருச்சிற்றம்பலம்.

சீர்சான்ற வேதச் செழும்பொருளே சிற்சொருபப்
பேர்சான்ற வுண்மைப் பிரமமே - நேர்சான்றோர்
நாடும் பரசிவமே நாயேனுக் கன்புநின்பா
னீடும் படிநீ நிகழ்த்து. (க)

நினைப்பித்தா நித்தா நிமலா வெனநீ
நினைப்பித்தா லேழை நினைப்பே - னினைப்பின்
மறப்பித்தா லியானு மறப்பே னெவையும்
பிறப்பித்தா யென்னலென் பேசு. (உ)

உருவா யுருவி லுருவாகி யோங்கி
யருவா யருவி லருவா - யொருவாம
னின்றாயே நின்ற நினைக்காண்ப தெவ்வாறே
வென்றாயே யென்றந்தை யே. (௩)

வெஞ்சஞ் சலமா விகார மெனும்பேய்க்கு
நெஞ்சம் பறிகொடுத்து நிற்கின்றே - னஞ்சலென
வெண்டோ ளிறையே யெனையடிமை கொள்ளமன
முண்டோ விலையோ வுரை. (ச)

அப்பாலுன் சித்த மறியே னெனக்கம்மை
யப்பாநின் ருளன்றி யார்கண்டா - யிப்பாறிற்
சாதியுரு வாக்குந் தளையவிழ்த்துத் தன்மயமாஞ்
சோதியுரு வாக்குந் துணை. (ரு)

பேரறிவாற் கண்டும் பெரியோ ரறியாரேல்
யாரறிவார் யானே வறிகிற்பேன் - சீர்கொள்
வெளியாய் வெளிக்குள் வெளியா யொளிக்கு
ளொளியாகி நின்ற வுனை. (சா)

* வந்தித்தேன் பிட்டுகந்த வள்ளலே நின்னடியான்
சிந்தித்தே னென்றல் சிரிப்பன்றோ - பந்தத்தாஞ்
சிந்துசிந்திப் பித்தெனது சிந்தையுணின் பொன்னருளே
வந்துசிந்திப் பித்தன் மறந்து. (எ)

தேனென்ற வின்சொற் றெரிந்துநினைப் பாடுகின்றே
ஞனென் றுரைத்த னகையன்றோ - வானின்ற
வொண்பொருணீ யுள்ள முவந்தருளா வின்சொல்லும்
வண்பொருளு மீதன் மறந்து. (அ)

அண்டங்க ளோவவற்றி னப்பாலோ விப்பாலோ
பண்டங்க ளோசிற் பரவெளியோ - கண்டங்க
வெம்பெருமா னீத்தவர்தம் மெய்யுளமோ தையலொடு
மெம்பெருமா னீவா ழிடம். (கூ)

பூதமெங்கே மற்றைப் புலனெங்கே பல்லுயிரின்
பேதமெங்கே யண்டமெனும் பேரெங்கே - நாதமெங்கே
மன்வடிவ மெங்கே மறையெங்கே வான்பொருணீ
பொன்வடிவங் கொள்ளாத போது. (க0)

பேருருவோசோதிப் பிழம்பாகுஞ் சின்மயத்தின்
சீருருவோ தேவர் திருவுருவம் - நேருருவிற்
சால்புறச்சே ரண்ட சராசரங்க ளெல்லாநுங்
கால்விரற்பா னின்றெடுங்குங் கால். (கக)

இன்றோ பகலோ விரவோ வருநாளி
லென்றோ வறியே னெளியேனே - மன்றோங்குந்
தாயனையாய் நின்னருளாந் தண்ணமுத முண்டுவந்து
நாயனையேன் வாழ்கின்ற நாள். (கஉ)

* வந்திதேன் - என்றபாலது - வந்தித்தே னென விரித்தல் விகாரமாயிற்று, ஈண்டு தே னென்ப தினிமை.

மண்ணாசை வெற்பே மறிகடலே பொன்னாசை
பெண்ணாசை யொன்றேயென் பேராசை - நண்ணாசை
விட்டார் புகழும் விடையாய்நான் பொய்யாசைப்
பட்டால் வருமே பதம். (கங)

தந்தையா யென்னுடைய தாயாய்த் தகைசான்ற
சிந்தையா யென்னருமைத் தேசிகனாய் - முந்தையாய்
நீடு மறைமுதலாய் நின்றாயென் னேநெஞ்சம்
வாடுமெனை யாட்கொள்ளா வாறு. (கச)

ஊட்டுகின்ற வல்வினையா முட்கயிற்றா லுள்ளிருந்தே
யாட்டுகின்ற நீதா னறிந்திலையோ - வாட்டுகின்ற
வஞ்சுபல வேடர்க் கறிவைப் பறிகொடுத்தென்
னெஞ்சுபுலர்ந் தேங்கு நிலை. (கரு)

ஆமோ வலவோ வறியேன் சிறியேனா
னாமோ தரனுஞ் சதுமுகனுந் - தாமே
யடியா தரிக்கு மரசேநின் னேவ
லடியார்குற் றேவலடி யன். (கசு)

உன்னா லெனக்காவ துண்டதுநீ கண்டதுவே
யென்னா லுனக்காவ தேதுளது - சொன்னால்யான்
றந்தார்வத் தோடுந்த லைமேற்கொண் டுய்கிற்பே
னெந்தாயிங் கொன்றுமறி யேன். (கஎ)

சென்றுரைப்பார் சொல்லிற் சிறியான் பயமறியா
னென்றுரைப்பா ராங்கதுமற் றென்னளவே - மன்றகத்தோ
யஞ்சேல் விழியாரை யந்தகனென் பார்மொழியை
யஞ்சேன் சிறிது மறிந்து. (கஅ)

எந்தாய்நின் னன்பர்தமக் கின்னமுத மிட்டேத்திச்
சிந்தா நலமொன்றுஞ் செய்தறியே - னந்தாச்
சுவருண்ட மண்போலுஞ் சோறுண்டேன் மண்ணி
லெவருண் டெனைப்போ லியம்பு. (கக)

உப்பிருந்த வோடோ வொதியோ வுலாப்பிணமோ
வெப்பிருந்த காடோ வினைச்சுமையோ - செப்பறியேன்
கண்ணப்ப ருக்குக் கனியனையாய் நிற்பணியா
துண்ணப் பருக்கு முடம்பு. (உ0)

ஏலார் மனைதோறும்போ யேற்றெலும்புந் தேயநெடுங்
காலாய்த் திரிந்துழலுங் கால்கண்டாய் - மாலாகித்
தொண்டே வலஞ்செய்கழற் றேன்றலே நின்கோயிற்
கண்டே வலஞ்செய்யாக் கால். (உக)

ஏசும் பிறர்மனேயி லேங்கவவ ரீயுமரைக்
காசும் பெறவிரிக்குங் கைகண்டாய் - மாசுந்த
விண்டுஞ் சிரங்குனிக்கும் வித்தகனே நின்றலத்தைக்
கண்டுஞ் சிரங்குவியாக் கை. (உஉ)

வெங்கோடை யாதபத்தின் வீழ்நீர் வறந்துலர்ந்து
மங்கோடை யாதல் வழக்கன்றே - வெங்கோநின்
சீர்சிந்தாச் சேவடியின் சீர்கேட்டு மானந்த
நீர்சிந்தா வன்கண் ணிலே. (உங)

வாயன்றேல் வெம்மலஞ்செல் வாயன்றேன் மாநரக
வாயன்றேல் வல்வெறிநாய் வாயென்பாங் - தாயென்றே
வூழ்த்தாதா வேத்து முடையாய் சிவவென்றே
வாழ்த்தாதார் நாற்றப்பாழ் வாய். (உச)

வீட்டா ரிறைநீ விடைமேல் வரும்பவனி
காட்டா தடைத்த கதவன்றே - நாட்டாதி
நல்லத் துளையா நதிச்சடையா யென்னுஞ்சீர்ச்
செல்லத் துளையாச் செவி. (உரு)

புல்லங் கணநீர்ப் புழையென்கோ புற்றென்கோ
சொல்லும் பசுமட் டுளையென்கோ - சொல்லுஞ்சீர்
வீயாத பிஞ்ஞகப்பேர் மெல்லினத்தி னல்லிசைதான்
றேயாத நாசித் துளை. (உசு)

தோற்றமிலாக் கண்ணுஞ் சுவையுணரா நாவுநிகழ்
நாற்ற மறியாத நாசியுமோர் - மாற்றமுந்தான்
கேளாச் செவியுங்கொள் கீழ்முகமே நீற்றணிதான்
மூளாது பாழ்த்த முகம். (உஎ)

மான்று மூலக வழக்கின் படிமதித்து
மூன்று வகிர்ந்தே முடைநாற - வூன்று
மலக்கூடை யேற்றுகினு மாணுதே தென்பாற்
றலக்கூடற் றுழாத் தலை. (உஅ)

கல்லென்கோ நீரடைக்குங் கல்லென்கோ கான்கொல்கருங்
கல்லென்கோ காழ்வயிரக் கல்லென்கோ - சொல்லென்கோ
வின்று லெனிலோ வெடுத்தாளெம் மீன்றுணோர்
நின்று ணினையாத நெஞ்சு. (உகூ)

சொல்லுகின்ற வுள்ளுயிரைச் சோர்வுற் றிடக்குளிர்ந்து
கொல்லுகின்ற நஞ்சிற் கொடிதன்றே - வொல்லுமன்றத்
தெம்மானின் றாட்கமல மெண்ணுது பாழ்வயிற்றிற்
சும்மா வடைக்கின்ற சோறு. (௩0)

சோர்படைத்துச் சோறென்றுற் றெண்டைவிக்கிக் கொண்டுநெடு
மார்படைத்துச் சாவுகினு மாநன்றே - சீர்படைக்க
வெண்ணுவா ரெண்ணு மிறைவானின் றாளேத்தா
துண்ணுவா ருண்ணு மிடத்து. (௩க)

ஒகோ கொடிதே யுறும்புலைய ரில்லினிடத்
தேகோ வதைத்துண் செயலன்றோ - வாகோர்தம்
வாழ்மனையிற் செல்லாது வள்ளனினை யேத்தாதார்
பாழ்மனையிற் சென்றுண் பது. (௩உ)

வீயுமிடு காட்டகத்துள் வேம்பிணத்தின் வெந்தசையைப்
பேயுமுட னுண்ணவுண்ணும் பேறன்றோ - தோயுமய
னீங்கவருள் செய்வோய்வெண் ணீறணியார் தீமனையி
லாங்கவரோ டுண்ணு மது. (௩௩)

கண்குழைந்து வாடுங் கநோகின் பேருரைக்கி
லொண்குழந்தை யேனுமுலை யுண்ணுதா - தண்குழைய
பூண்டாதார்க் கொன்றைப் புரிசடையோய் நின்புகழை
வேண்டாதார் வீழ்ந்து விரைந்து. (௩ச)

கண்ணுதலே நின்றாட் கருதாரை நேசிக்க
வெண்ணுதலே செய்யேன்மற் றெண்ணுவனேன் - மண்ணுலகி
லாமிடத்து நின்னடியார்க் காசையுரைத் தில்லையென்பார்
போமிடத்திற் போவேன் புலர்ந்து. (௩ரு)

அங்கணனே நின்னடிக்கோ ரன்பிலரைச் சார்ந்தோர்தம்
* வங்கணமே வைப்பதினுன் வைத்தேனே - லங்கணத்தி
னீர்போ லெனது நிலைகெடுக நிற்பழிசொற்
றார்போ லழிக தளர்ந்து. (௩சு)

பூவைவிட்டுப் புல்லெடுப்பார் போலுன் றிருப்பாதத்
தேவைவிட்டு வெம்பிறவித் தேவர்களைக் - கோவையிட்டுக்
கூவுவார் மற்றவரைக் கூடியிடேன் கூடுவனே
லோவுவா † ராவ லுனே. (௩எ)

யாதோ கனற்கண் யமதூதர் காய்ச்சுகருந்
தாதோ தழற்பிழம்போ தானறியேன் - மீதோங்கு
நாட்டாதார்க் கொன்றை நதிச்சடையோ யஞ்செழுத்தை
நாட்டாதார் வாய்க்கு நலம். (௩அ)

என்னெஞ்சோர் கோயி லெனக்கொண்டோய் நின்னினையார்
தன்னெஞ்சோ கல்லாமச் சாம்பிணத்தார் - வன்னெஞ்சிற்
சார்ந்தவர்க்கு மற்றவரைத் தானேக்கி வார்த்தைசொல
நேர்ந்தவர்க்குங் கல்லாகு நெஞ்சு. (௩கூ)

* வங்கணம்-எ-து, நட்பு.

† ஆவலென்பதனை எதிர்காலத் தன்மையொருமைவினைமுற்றாகக்கொள்க.

வெள்ளமுதுந் தேனும் வியன்கரும்பு முக்கனியி
னுள்ளமுதுந் தெள்ளமுது மொவ்வாதாற் - கள்ளமிலா
நின்னன்பர் தம்புகழி னீண்மதுரந் தன்னையினி
யென்னென்ப தையா வியம்பு. (சo)

பண்ணுலுன் சீரினைச்சம் பந்தர்சொல வெள்ளெலும்பு
பெண்ணான தென்பார் பெரிதன்றே - யண்ணவச்
சைவவடி வானான சம்பந்தர் சீருரைக்கிற்
றெய்வவடி வாஞ்சாம்பர் சேர்ந்து. (சக)

எங்கோவே யான்புகலி யெம்பெருமான் றன்மணத்தி
லங்கோர் பொருட்சுமையா ளானேனே - லிங்கேநின்
றுள்வருந்த வேண்டேன் றடைபட்டே னுதலினிந்
நாள்வருந்த வேண்டுகின்றே னுன். (சஉ)

பூவுக் கரையரும்வான் புங்கவரும் போற்றுதிரு
நாவுக் கரையரெனு நன்னும - மேவுற்ற
தொண்டர்க்கு நீகட்டுச் சோறெடுத்தா யென்றறிந்தோ
தொண்டர்க்குத் தொண்டனென்பார் சொல். (சங)

* எம்பரவை யோமண் ணிடந்தலைந்தான் சுந்தரனுர்
தம்பரவை வீட்டுத் தலைக்கடையாய் - வம்பணையாய்
வாயிற் படியாய் வடிவெடுக்க நேர்ந்திலனே
மாயப்பெயர் நீண்ட மால். (சச)

நண்ணித் தலையா னடக்கின்றே மென்பதெங்கண்
மண்ணிற் பழைய வழக்கங்காண் - பண்ணிற்சொ
லம்மையார் வாமத்தோ யாயினுமுன் காரைக்கா
லம்மையார் போனடந்தா ரார். (சரு)

வேத முடிவோ விளங்கா கமமுடிவோ
நாத முடிவோ நவில்கண்டாய் - வாதமுறு
மாசகர்க்கு ணில்லா மணிச்சுடரே மாணிக்க
வாசகர்க்கு நீயுரைத்த வாறு. (சசு)

ஆர்கொண்டார் சேய்க்கறியிட் டாரே சிறுத்தொண்டப்
பேர்கொண்டா ராயிடிலெம் பெம்மானே - யோர்தொண்டே
நாய்க்குங் கடைப்பட்ட நாங்களென்பே மெங்கண்முடை
வாய்க்கிங் கிஃதோர் வழக்கு. (சஎ)

கோள்கொண்ட நஞ்சங் குடியேனே கூர்கொண்ட
வாள்கொண்டு வீசி மடியேனே - கீள்கொண்ட
வங்கோவ ணத்தழகா வம்பலவா நின்புகழை
யிங்கோதி வாழ்த்தாத யான். (சஅ)

* எம்பர-எ-து, அண்மை விளி-இறை முன்னிலை.

ஆயாக் கொடியேனுக் கன்புடையாய் நீயருளிங்
கீயாக் குறையே யிலைகண்டாய் † மாயாற்கும்
விள்ளாத் திருவடிக்கீழ் விண்ணப்பம் யான்செய்து
கொள்ளாக் குறையே குறை. (சகூ)

பெற்றிதோய் போல்வதுநின் பெற்றியென்பேன் பிள்ளையது
மற்றழுதாற் கேட்டும் வராதங்கே - சற்றிருக்கப்
பெற்றாள் பொறுப்பள் பிரானீ பொறுக்கினுநின்
பொற்றாள் பொருவெம் புலம்பு. (ரு0)

பொன்போற் பொறுமையுளார் புந்திவிடாய் நீயென்பா
ரென்போற் பொறுமையுளார் யார்கண்டாய் - புன்போக
வல்லாம் படிசினங்கொண் டாணவஞ்செய் யின்னுமை
யெல்லாம் பொறுக்கின்றேன் யான். (ருக)

மூன்மணத்திற் சுந்தரரை முன்வலுவிற் கொண்டதுபோ
லென்மணத்தி னீவந் திடாவிடினு - நின்கணத்தி
லொன்று மொருகணம்வந் துற்றழைக்கிற் செய்ததன்றி
யின்று மொருமணஞ் செய்வேன். (ருஉ)

செய்யா ரழலேநின் செம்மேனி யென்னினுமென்
னய்யாநின் கால்பிடித்தற் கஞ்சேன்காண் - மெய்யாவிஞ்
ஞான்றுகண்டு நான்மகிழ நந்தொண்ட னென்றெனையு
மேன்றுகொண் டாற்போது மெனக்கு. (ருங)

என்பாலோ வென்பா லிராதோடு கின்றமனத்
தின்பாலோ வம்மனத்தைச் சேர்மாயை - தன்பாலோ
யார்பாற் பிழையுளதோ யானறியே னென்னம்மை
யோர்பாற் கொளநின்றோ யோது. (ருச)

நாணவத்தி னேன்றனையோ நாயேனை மூடிநின்ற
வாணவத்தை யோநா னறியேனே - வீணவத்திற்
றீங்குடையா யென்னவிவண் செய்பிழையை நோக்கியருட்
பாங்குடையாய் தண்டிப் பது. (ருரு)

எச்சம் பெறுமுலகோ ரெட்டிமர மானும்
பச்சென் றிருக்கப் பகர்வார்காண் - வெச்சென்ற
நஞ்சனையேன் குற்றமெலா நாடாது நாதவெனை
யஞ்சனையே லென்பா யமர்ந்து. (ருசு)

கற்றறியே னின்னடிச்சீர் கற்றார் கழகத்தி
லுற்றறியே னுண்மை யுணர்ந்தறியேன் - சிற்றறிவேன்
வன்செய்வே னேர்விழியார் மையலினேன் மாதேவா
வென்செய்வே னின்னருளின் றேல். (ருஎ)

† மாயற்கு-எ-து, மாயாற்கென நீட்டல் விகாரமாயிற்று.

மெய்தா னுடையோர் விரும்புகின்ற நின்னருளென்
செய்தால் வருமோ தெரியேனே - பொய்தாவு
நெஞ்சினேன் மன்று ணிருத்தா நினைக்கேழ்க்க
வஞ்சினே னன்பின்மை யால். (ருஅ)

மாதேவா வோவா மருந்தேவா மாமணியிப்
போதேவா வென்றே புலம்புற்றே - னீதாவா
யானுலுன் சித்த மறியே னுடம்பொழிந்து
போனுலென் செய்வேன் புகல். (ருகூ)

கொன்செய்தாற் கேற்றிடுமென் குற்றமெலா மையவெனை
யென்செய்தாற் றீர்ந்திடுமோ யானறியேன் - முன்செய்தோய்
நின்பாலெ னைக்கொடுத்தே னீசெய்க வன்றியினி
யென்பாற் செயலொன் றிலை. (சா0)

எண்ணிலெளி யேன்றவிர வெல்லா வுயிர்களுநின்
றண்ணிலகுந் தாணீழல் சார்ந்திடுங்காண் - மண்ணில்வருந்
தீங்கென்ற வெல்லாமென் சிந்தையிசைந் துற்றனமற்
றுங்கொன்று மில்லாமை யால். (சாக)

தாரம்விற்றுஞ் சேய்விற்றுந் தன்னைவிற்றும் பொய்யாத
வாரம்வைத்தான் முன்னிங்கோர் மன்னனென்பர் - நாரம்வைத்த
வேணிப் பிரானதுதான் மெய்யாமே லன்றெனைநீ
யேணிற் பிறப்பித்த தில். (சாஉ)

உள்ளொன்ற நின்னடிக்கன் புற்றறியே னென்னுளத்தின்
வெள்ளென்ற வன்மை விளங்காதோ - நள்ளொன்ற
வச்சங்கொண் டேனைநினக் கன்பனென்பர் வேழத்தி
னெச்சங்கண் டாற்போல வே. (சாங)

* நீத்தாடுஞ் செஞ்சடையாய் நீள்வேடங் கட்டிவஞ்சக்
கூத்தாடு கின்றேனைக் கொண்டுசிலர் - கூத்தாநின்
பத்தனென்ப ரென்னே பகல்வேடத் தார்க்குமிங்கு
† வித்தமிலா நாயேற்கும் வேறு. (சாச)

அன்புடையா ரின்சொல் லமுதேறு நின்செவிக்கே
யின்புடையா வென்பொய்யு மேற்குங்கொ - லன்புடையேன்
பொய்யுடையே னுயினுநின் பொன்னருளை வேண்டுமொரு
மெய்யுடையே னென்கோ விரைந்து. (சாரு)

என்னு ருயிர்க்குயிரா மெம்பெருமா னின்பதத்தை
யுன்னு ருயிர்க்குறுதி யுண்டோதான் - பொன்னுகத்
தார்க்குஞ் சதுமுகர்க்குந் ‡ தானத்த வர்க்குமற்றை
யார்க்கும் புகலுன் னருள். (சாசா)

* நீத்த மென்பது - நீத்தெனக்குறைந்து நின்றது.
† வித்தம்-எ-து, அறிவு. ‡ தானம்-எ-து, சுவர்க்கம்.

வெள்ளைப் பிறையணிந்த வேணிப் பிரானேநான்
பிள்ளைப் பிராயத்திற் பெற்றுளே - யெள்ளப்
பொறுத்தாளத் தாயிற் பொறுப்புடையோய் நீதான்
வெறுத்தா வினியென்செய் வேன். (சுஎ)

ஆயிரமன் றேனூறு மன்றேயீ ரைந்தன்றே
ஆயிரம்பே ரெந்தையெழுத் தைந்தேகாண் - நீயிரவு
மெல்லு நினைத்தியென வேத்துகினு மெந்தாய் வீண்
செல்லுமன மென்செய்கேன் செப்பு. (சுஅ)

வஞ்சந் தருங்காம வாழ்க்கையிடச் சிக்கியவென்
னெஞ்சந் திருத்தி நிலைத்திலையே - யெஞ்சங்
கரனே மழுக்கொள் கரனே யரனே
வரனே சிதம்பரனே வந்து. (சுகூ)

தாழ்விக்கும் வஞ்சச் சகமா லொழித்தென்னை
வாழ்விக்கு நல்ல மருந்தென்கோ - வீழ்விக்கு
மீங்கான மாயை யிகந்தோர்க் கருள்வோய் நின்
பாங்கான செம்பொற் பதம். (எ௦)

ஏசொலிக்கு மானிடனு யேன்பிறந்தேன் றொண்டர்கடந்
தூசொலிப்பான் கல்லாகத் தோன்றிலனே - தூசொலிப்பான்
கல்லாகத் தோன்றுவனேற் காளகண்டா நாயேனுக்
கெல்லா நலமுமுள தே. (எக)

குற்றம் பலசெயினுங் கோபஞ் செயாதவருட்
சிற்றம் பலமுறையுஞ் சிற்பரனே - வெற்றம்பற்
பொய்விட்டா லன்றிப் புரந்தருளே னென்றெனை நீ
கைவிட்டா லென்செய்கேன் காண். (எஉ)

தீக்குணத்தார் யாவருமென் சீடரெனி லென்னுடைய
தீக்குணத்தி னெல்லையெவர் தேர்கிற்பா - ரூக்கமிகு
நல்லோர் களிக்கு நதிச்சடையோ யெற்கருளி
லெல்லார்க்கு மையுறவா மே. (எங)

இன்படையான் றன்புடையா னென்றேழை யேன்றலைமே
லன்புடையாய் நீயமைப்பித் தாயிதற்கு - வன்படையா
தெவ்வண்ண நின்னெஞ் சிசைந்ததோ வந்நாளி
லிவ்வண்ண மென்றறிகி லேன். (எச)

ஏய்ப்பிறப்பொன் றில்லாதோ யென்பிறப்பி னேழ்மடங்கோர்
பேய்ப்பிறப்பே நல்ல பிறப்பன்றோ - வாய்ப்புலகம்
வஞ்சமெனத் தேக மறைத்தடிமண் வையாம
லஞ்சிநின்னே டாடு மது. (எரு)

கோடும் பிறைச்சடையோய் கோளுங் குறும்புஞ்சாக்
காடும் பிணிமூப்புங் காணர்கா - ணீடுநினைக்
கண்டா ரடிப்பொடியைக் கண்டார் திருவடியைக்
கண்டார் வடிவுகண்டார் கள். (எசு)

மாலெங்கே வேதனுயர் வாழ்வெங்கே யிந்திரன்செங்
கோலெங்கே வானோர் குடியெங்கே - கோலஞ்சேர்
அண்டமெங்கே யவ்வவ் வரும்பொருளெங் கேநினது
கண்டமங்கே நீலமுறாக் கால். (எஎ)

எவ்வேளை யோவருங்கூற் றெம்பாலென் றெண்ணுகின்ற
வவ்வேளை தோறு மழுங்குற்றேன் - செவ்வேளை
மிக்களித்தோய் நின்கழற்கால் வீரத்தை யெண்ணுதொறு
மெக்களித்து வாழ்கின்றேன் யான். (எஅ)

துற்சங்கத் தோர்கணமுந் தோயாது நின்னடியர்
சற்சங்கத் தென்றனைநீ தான்கூட்டி - நற்சங்கக்
காப்பான் புகழுன் கழற்புகழைக் கேட்பித்துக்
காப்பா யிஃதென் கருத்து. (எகூ)

என்னமுதே முக்க ணிறையே நிறைஞான
வின்னமுதே நின்னடியை யேத்துகின்றோர் - பொன்னடிக்கே
காதலுற்றுத் தொண்டுசெயக் காதல்கொண்டே னெற்கருணீ
காதலுற்றுச் செய்தல் கடன். (அ0)

ஆரா வமுதே யருட்கடலே நாயேன்றன்
பேராத வஞ்சப் பிழைநோக்கி - யாரேனு
நின்போல்வா ரில்லாதோய் நீயே புறம்பழித்தா
லென்போல்வா ரென்சொல்லா ரீங்கு. (அக)

மெய்யாக நின்னைவிட வேறோர் துணையில்லே
னையா வதுநீ யறிந்ததுகாண் - பொய்யான
தீதுசெய்வேன் றன்பிழையைச் சித்தங் குறித்திடில்யான்
யாதுசெய்வே னந்தோ வினி. (அஉ)

திண்ண மறியாச் சிறியே னுளத்திருக்கு
மெண்ண மறிந்தா யிரங்குகிலா - யண்ணலுன்பா
னித்த மிரங்காவென் னெஞ்சமர்ந்த தாலோநின்
சித்த மிரங்காச் செயல். (அங)

கொன்னஞ்சேன் றன்பிழையைக் கூர்ந்துற்று நானினைக்கி
லென்னெஞ்சே யென்னை யெரிக்குங்காண் - மன்னுஞ்சீ
ரெந்தாய்நின் சித்தத்திற் கேதாமோ நானறியேன்
சிந்தா குலனென்செய் வேன். (அச)

நின்னன்பர் தம்பா னிறுத்துதியோ வன்றியெனைப்
பொன்னன்பர் தம்பாற் புணர்த்துதியோ - பொன்னன்பர்
வைவமே யென்னும் வறியே னறியேனென்
றெய்வமே நின்றன் செயல். (அரு)

என்சிறுமை நோக்கா தெனக்கருளல் வேண்டுமென்றே
நின்பெருமை நோக்கியிங்கு நிற்கின்றே - னென்பெரும
யாதோநின் சித்த மறியே னடியேற்கெப்
போதோ வருள்வாய் புகல். (அசு)

எந்தாயென் குற்றமெலா மெண்ணுங்கா லுண்ணடுங்கி
நொந்தா குலத்தி னுழைகின்றேன் - சிந்தாத
காள மகிழ்நின் கருணை யெண்ணுதொறு
மீளமகிழ் கின்றேன் விரைந்து. (அஎ)

எள்ளலே யென்னினுமோ ரேத்துதலாய்க் கொண்டருளெம்
வள்ளலே யென்றனைநீ வாழ்வித்தா - றள்ளலே
வேண்டுமென யாரே விளம்புவார் நின்னடியர்
காண்டுமெனச் சூழ்வார் களித்து. (அஅ)

வேணிக்க மேவைத்த வெற்பே விலையில்லா
மாணிக்க மேகருணை மாகடலே - மாணிக்கு
முன்பொற் கிழியளித்த முத்தேயென் னுருயிர்க்கு
நின்பொற் கழலே நிலை. (அகூ)

முத்தேவர் போற்று முதற்றேவ நின்னையன்றி
யெத்தேவர் சற்றே யெடுத்துரைநீ - பித்தேன்செய்
குற்றமெலா மிங்கோர் குணமாகக் கொண்டென்னை
யற்றமிலா தாள்கின் றவர். (கூ0)

கங்கைச் சடையாய்முக் கண்ணுடையாய் கட்செவியம
மங்கச்சுடையா யருளுடையாய் - மங்கைக்
கொருகூ றளித்தா யுனைத்தொழுமிந் நாயே
னிருகூ றளித்தே னிடர்க்கு. (கூக)

பேசத் தெரியேன் பிழையறியேன் பேதுறினுங்
கூசத் தெரியேன் குணமறியே - னேசத்திற்
கொள்ளுவா ருன்னடிமைக் கூட்டத்தா ரல்லாதா
ரெள்ளுவார் கண்டா யெனை. (கூஉ)

ஊணே யுடையேமென் றுட்கருதி வெட்கமிலேன்
வீணேநன் னாளை விடுகின்றேன் - காணேனின்
செம்பாத மேயென்றுந் தீராப் பொருளென்று
நம்பாத நாயடியே னுன். (கூங)

சிவமே சிவஞானச் செல்வமே யன்பர்
நவமே தவமே நலமே - நவமாம்
வடிவுற்ற தேவநின் மாக்கருணை யன்றோ
படிவுற்ற வென்னுட் பயன். (கூச)

கோளாக்கிக் கொள்ளுந் தொடியே னையுநினக்கோ
ராளாக்கிக் கொள்ளற் கமைவாயே - னீளாக்குஞ்
செங்கேச வேணிச் சிவனேயென் னுணவத்திற்
கெங்கே யிடங்கா ணியம்பு. (கூரு)

திண்ணஞ்சற் றீந்திடநின் சித்தந் திரும்பாத
வண்ணஞ்சற் றேதெரிய வந்ததுகா - ணெண்ணெஞ்சி
னித்தனையு மென்வினைக ணீங்கி விருக்கவண்ட
மெத்தனையும் போதாமை யென்று. (கூசா)

இண்டைச் சடையோ யெனக்கருள வெண்ணு தியே
ரெண்டைப் பெறுமென் றுயரெல்லாஞ் -சண்டைக்கிங்
* குய்ஞ்சே மெனவோடு மோட்டத்திற் கென்னுடைய
நெஞ்சே பிறகிடுங்கா ணின்று. (கூஎ)

கண்ணு ணிழுதைகள்பாற் காட்டிக் கொடுக்கிலெனை
யண்ணு வருளுக் கழகன்றே - யுண்ணுடு
நின்னடியார் கூட்டத்தி னீரிவனைச் சேர்த்திடுமி
னென்னடியா னென்பா யெடுத்து. (கூஅ)

கண்ணப்ப னேத்துநுதற் கண்ணப்ப மெய்ஞ்ஞான
விண்ணப்ப நின்றனக்கோர் விண்ணப்ப - மண்ணிற்சில்
வானவரைப் போற்று மதத்தோர் பலருண்டு
நானவரைச் சேராம னுட்டு. (கூகூ)

பொன்னின் றொளிரும் புரிசடையோய் நின்னையன்றிப்
பின்னொன் றறியேன் பிழைநோக்கி - யென்னை
யடித்தாலு நீயே யணைத்தாலு நீயே
பிடித்தேனுன் பொற்பாதப் பேறு. (க00)

துற்குணத்தில் வேறு தொடர்வே னெனினுமற்றை
நற்குணத்தி லுன்சீர் நயப்பேன்கா ண் - சிற்குணத்தோய்
கூற்றுதைத்த நின்பொற் குரைகழற்பூந் தாளறிக
வேற்றுரைத் தேனில்லை விரித்து. (க0க)

இப்பாரி லென்பிழைக ளெல்லாம் பொறுத்தருளென்
னப்பாநின் றாட்கே யடைக்கலங்கா - ணிப்பாரி
னுனினது தாணீழ னண்ணுமட்டு நின்னடியார்
பானினது சீர்கேட்கப் பண். (க0உ)

திருச்சிற்றம்பலம்.

## சிவநேசவெண்பா

முற்றிற்று.

* உய்ந்தேம் - எ-து, உய்ஞ்சேமெனத்திரிந்தது.

உ

சிவமயம்.

சிவகணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

---

# திருவருட்பா.

# மஹாதேவமாலை.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

கருணைநிறைந்தகம்புறமுந்துளும்பிவழிந்துயிர்க்கெல்லாங்களைகணாகித்
தெருணிறைந்தவின்பநிலைவளர்க்கின்றகண்ணுடையோய்சிதையாஞானப்
பொருணிறைந்தமறையமுதம்பொழிகின்றமலர்வாயோய்பொய்யனேன்றன்
மருணிறைந்தமனக்கருங்கற்பாறையுமுட்கசிந்துருக்கும்வடிவத்தோயே.

---

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உலகநிலைமுழுதாகியாங்காங்குள்ளவுயிராகியுயிர்க்குயிராமொளிதானாகிக்
கலகநிலையறியாதகாட்சியாகிக்கதியாகிமெய்ஞ்ஞானக்கண்ணதாகி
யிலகுசிதாகாசமதாய்ப்பரமாகாசவியல்பாகியிணையொன்றுமில்லாதாகி
யலகிலறிவானந்தமாகிச்சச்சிதானந்தமயமாகியமர்ந்ததேவே. (க)

உலகமெலாந்தனிநிறைந்தவுண்மையாகியோகியர்தம்மநுபவத்தினுவப்பாயென்றுங்
கலகமுறாவுபசாந்தநிலையதாகிக்களங்கமற்றவருண்ஞானக்காட்சியாகி
விலகலுறாநிபிடவானந்தமாகிமீதானத்தொளிர்கின்றவிளக்கமாகி
யிலகுபராபரமாய்ச்சிற்பரமாயன்பரிதயமலர்மீதிருந்தவின்பத்தேவே. (உ)

வித்தாகிமுளையாகிவிளைவதாகிவிளைக்கும்பொருளாகிமேலுமாகிக்
கொத்தாகிப்பயனாகிக்கொள்வோனாகிக்குறைவாகிநிறைவாகிக்குறைவிலாத
சத்தாகிச்சித்தாகியின்பமாகிச்சதாநிலையாயெவ்வுயிர்க்குஞ்சாக்ஷியாகி
முத்தாகிமாணிக்கமாகித்தெய்வமுழுவயிரத்தனிமணியாய்முளைத்ததேவே. (ங)

வேதாந்தநிலையாகிச்சித்தாந்தத்தின்மெய்யாகிச்சமரசத்தின்விவேகமாகி
நாதாந்தவெளியாகிமுத்தாந்தத்தினடைவாகிநவநிலைக்குநண்ணாதாகி
மூதாண்டகோடியெல்லாந்தாங்கிநின்றமுதலாகிமனாதீதமுத்தியாகி
வாதாண்டசமயநெறிக்கமையாதென்றுமௌனவியோமத்தினிடை வயங்குந்தேவே.

தோன்றுதுவிதாத்துவிதமாய்விசிட்டாத்துவிதமாய்க்கேவலாத்துவிதமாகிச்
சான்றசுத்தாத்துவிதமாய்ச்சுத்தந்தோய்ந்தசமரசாத்துவிதமுமாய்த்தன்னையன்றி
யூன்றுநிலைவேறொன்றுமிலதாயென்றுமுள்ளதாய்நிரதிசயவுணர்வாயெல்லா
மீன்றருளுந்தாயாகித்தந்தையாகியெழிற்குருவாய்த்தெய்வதமாயிலங்குந்தேவே. (௫)

பரமாகிச்சூக்குமமாய்த்தூலமாகிப்பரமார்த்தநிலையாகிப்பதத்தின்மேலாஞ்
சிரமாகித்திருவருளாய்வெளியாயான்மசிற்சத்தியாய்ப்பரையின்செம்மையாகித்
திரமாகித்தற்போதநிவர்த்தியாகிச்சிவமாகிச்சிவானுபவச்செல்வமாகி
யரமாகியானந்தபோதமாகியானந்தாதீதமதாயமர்ந்ததேவே. (௬)

இந்தியமாய்க்கரணாதியனைத்துமாகியியல்புருடனாய்க்காலபரமுமாகிப்
பந்தமற்றவியோமமாய்ப்பரமாயப்பாற்பரம்பரமாய்விசுவமுண்டபான்மையாகி
வந்தவுபசாந்தமதாய்மௌனமாகிமகாமௌனநிலையாகிவயங்காநின்ற
வந்தமிறொம்பதமாய்த்தற்பதமாயொன்றுமசிபதமாயதீதமாயமர்ந்ததேவே. (௭)

நின்மயமாயென்மயமாயொன்றுங்காட்டாநிராமயமாய்நிருவிகற்பநிலையாய்மேலாந்
தன்மயமாய்த்தற்பரமாய்விமலமாகித்தடத்தமாய்ச்சொரூபமாய்ச்சகசமாகிச்
சின்மயமாய்ச்சிற்பரமாயசலமாகிச்சிற்சொலிதமாயகண்டசிவமாயெங்கு
மன்மயமாய்வாசகாதீதமாகிமனாதீதமாயமர்ந்தமௌனத்தேவே. (௮)

அளவிறந்தநெடுங்காலஞ்சித்தர்யோகரமிஞர்மலரயன்முதலோரனந்தவேதங்
களவிறந்துங்கரணாதியிறந்துஞ்செய்யுங்கடுந்தவத்துங்காண்பரிதாங்கடவுளாகி
யுளவிறந்தவெம்போல்வாருள்ளத்துள்ளேயூறுகின்றதெள்ளமுதவூறலாகிப் [வே.
பிளவிறந்துபிண்டாண்ட முழுதுந்தானாய்ப்பிறங்குகின்ற பெருங்கருணைப்பெரியதே

வாயாகிவாயிறந்தமௌனமாகிமதமாகிமதங்கடந்தவாய்மையாகிக்
காயாகிப்பழமாகித்தருவாய்மற்றைக்கருவிகரணாதிகளின்கலப்பாய்ப்பெற்ற
தாயாகித்தந்தையாய்ப்பிள்ளையாகித்தானாகிநானாகிச்சகலமாகி
யோயாதசத்தியெலாமுடையதாகியொன்றாகிப்பலவாகியோங்குந்தேவே. (௧௦)

அண்டங்கள்பலவாகியவற்றின்மேலுமளவாகியளவாதவதீதமாகிப்
பிண்டங்களனந்தவகையாகிப்பிண்டம்பிறங்குகின்றபொருளாகிப்பேதந்தோற்றும்
பண்டங்கள்பலவாகியிவற்றைக்காக்கும்பதியாகியானந்தம்பழுத்துச்சாந்தங்
கொண்டெங்குநிழல்பரப்பித்தழைந்தஞானக்கொழுங்கடவுட்டருவாகிக்குலவுந்தேவே.

பொன்னாகிமணியாகிப்போகமாகிப்புறமாகியகமாகிப்புனிதமாகி
மன்னாகிமலையாகிக்கடலுமாகிமதியாகிரவியாகிமற்றுமாகி
முன்னாகிப்பின்னாகிநடுவுமாகிமுழுதாகிநாதமுறமுழங்கியெங்கு [வே.
மின்னாகிப்பரவியின்பவெள்ளந்தேக்கவியன்கருணைப்பொழிமுகிலாய்விளங்குந்தே

அரிதாகியரியதினுமரியதாகியநாதியாதியாயருளதாகிப்
பெரிதாகிப்பெரியதினும்பெரியதாகிப்பேதமாயபேதமாய்ப்பிறங்காநின்ற
கரிதாகிவெளிதாகிக்கலைகளாகிக்கலைகடந்தபொருளாகிக்கரணுதீதத்
தெரிதானவெளிநடுவிலருளாம்வண்மைச்செழுங்கிரணச்சுடராகித்திகழுந்தேவே. (கங)

உருவாகியுருவினிலுள்ளுருவமாகியுருவத்திலுருவாகியுருவுள்ளொன்று
யருவாகியருவினிலுள்ளருவமாகியருவத்திலருவாகியருவுள்ளொன்றாய்க்
குருவாகிச்சத்துவசிற்குணத்ததாகிக்குணரகிதப்பொருளாகிக்குலவாநின்ற
மருவாகிமலராகிவல்லியாகிமகத்துவமாயணுத்துவமாய்வயங்குந்தேவே. (கச)

சகலமாய்க்கேவலமாய்ச்சுத்தமாகிச்சராசரமாயல்லவாய்த்தானேதானு
யகலமாய்க்குறுக்கமாய்நெடுமையாகியவையனைத்துமணுகாதவசலமாகி
யிகலுறுத்துணையாகித்தனியதாகியெண்குணமாயெண்குணத்தெம்மிறையாயென்று
முகலிலாத்தண்ணருள்கொண்டுயிரையெல்லாமூட்டிவளர்த்திடுங்கருணையோவாத்
தேவே. (கரு)

வாசகமாய்வாச்சியமாய் நடுவாயந்தவாசகவாச்சியங்கடந்தமௌனமாகித்
தேசகமாயிருளகமாயிரண்டுங்காட்டாச்சித்தகமாய்வித்தகமாய்ச் சிறிதும்பந்த
பாசமுறுப்பதியாகிப்பசுவுமாகிப்பாசநிலையாகியொன்றும்பகராதாகி
நாசமிலாவெளியாகியொளிதானுகிநாதாந்தமுடிவினடநவிற்றுந்தேவே. (கசு)

சகமாகிச்சிவனுயீசனுகிச்சதுமுக்னுய்த்திருமாலாயரன்றனுகி
மகமாயைமுதலாய்க்கூடத்தனுகிவான்பிரமமாகியல்லாவழக்குமாகி
யிகமாகிப்பரமாகிச்சமயகோடியெத்தனையுமாகியவை யெட்டாவான்கற்
பகமாகிப்பரமாகிப்பரமமாகிப்பராபரமாய்ப்பரம்பரமாய்ப்பதியுந்தேவே. (கள)

விதியாகியரியாகிக்கிரீசனுகிவிளங்குமகேச்சுரனுகிவிமலமான
நிதியாகுஞ்சதாசிவனுய்விந்துவாகிநிகழ்நாதமாய்ப்பரையாய்நிமலானந்தப்
பதியாகும் பரசிவமாய்ப்பரமாய்மேலாய்ப்பக்கமிரண்டாயிரண்டும்பகராதாகிக்
கதியாகியளவிறந்தகதிகளெல்லாங்கடந்துநின்று நிறைந்தபெருங்கருணைத்தேவே.

மானுகிமோகினியாய்விந்துவாகிமற்றவையாற்காணுதவானமாகி
நானுகிநானல்லனுகிநானேநானுகும்பதமாகிநான்றான்கண்ட
தானுகித்தானல்லனுகித்தானேதானுகும்பதமாகிச்சகசஞான
வானுகிவானடுவில்வயங்குகின்றமௌனநிலையாகியெங்கும்வளருந்தேவே. (ககூ)

மந்திரமாய்ப்பதமாகிவன்னமாகிவளர்கலையாய்த்தத்துவமாய்ப்புவனமாகிச்
சந்திரனுயிந்திரனுயிரவியாகித்தானவராய்வானவராய்த்தயங்காநின்ற
தந்திரமாயிவையொன்றுமல்லவாகித்தானுகித்தனதாகித்தானுன்காட்டா
வந்தரமாயப்பாலாயதற்கப்பாலாயப்பாலுக்கப்பாலா யமர்ந்ததேவே. (உ0)

மலைமேலுங்கடன்மேலுமலரின்மேலும்வாழ்கின்றஓருவின்வயங்குங்கோவே
நிலைமேலுநெறிமேலுநிறுத்துகின்றநெடுந்தவத்தோர்நிறைமேலுநிகழ்த்தும்வேதக்
கலைமேலுமெம்போல் வாருளத்தின்மேலுங் கண்மேலுந்தோண்மேலுங்கருத்தின்மே
லுந், தலைமேலுமுயிர்மேலுமுணர்வின்மேலுந்தருமன்பின்மேலும்வளர்தாண்மெய்த்
தேவே. (உக)

பொற்குன்றேயகம்புறமும்பொலிந்துநின்றபூரணமேயாரணத்துட்பொருளேயென்று
கற்கின்றோர்க்கினியசுவைக்கரும்பேதானகற்பகமேகற்பகத்தின்கனியேவாய்மைச்[ங்
சொற்குன்றாநாவகத்துண்மாறாவின்பந்தோற்றுகின்றதிருவருட்சீர்ச்சோதியேவிண்
ணிற்கின்றசுடரோயச்சுடருள்ளோங்குநீளொளியேயவ்வொளிக்குணிறைந்ததேவே.

தேசுவிரித்திருளகற்றியென்றுமோங்கித்திகழ்கின்றசெழுங்கதிரோசெறிந்தவாழ்க்கை
மாசுவிரித்திடுமனத்திற்பயிலாத்தெய்வமணிவிளக்கேயானந்தவாழ்வேயெங்குங்
காசுவிரித்திடுமொளிபோற்கலந்துநின்றகாரணமேசாந்தமெனக்கருதாநின்ற
தூசுவிரித்துடுக்கின்றோர்தம்மைநீங்காச்சுகமயமேயருட்கருணைதுலங்குந்தேவே.

கோவேயெண்குணக்குன்றேகுன்றாஞானக்கொழுந்தேனேசெழும்பாகேகுளிர்ந்தமோ
னக், காவேமெய்யறிவின்பமய்மேயென்றன்கண்ணேமுக்கண்கொண்டகரும்பேவா
னத், தேவேய்த்தேவுக்குந்தெளியவொண்ணாத்தெய்வமேவாடாமற்றிகழ்சிற்போதப்
பூவேயப்பூவிலுறுமணமேயெங்கும்பூரணமாய்நிறைந்தருளும்புனிதத்தேவே. (உச)

வானேயவ்வானுலவுங்காற்றேகாற்றின்வருநெருப்பேநெருப்புறுநீர்வடிவேநீரிற்
றானேயும்புவியேயப்புவியிற்றங்குந்தாபரமேசங்கமமேசாற்றுகின்ற
வூனேநல்லுயிரோயுள்ளொளியேயுள்ளத்துணர்வேயவ்வுணர்வுகலந்தூறுகின்ற [வே.
தேனேமுக்கனியேசெங்கரும்பேபாகின்றீஞ்சுவையேசுவையனைத்துந்திரண்டதே

விண்ணேவிண்ணுருவேவிண்முதலே விண்ணுள்வெளியே யவ்வெளிவிளங்குவெளி
யேயென்றன்,கண்ணேகண்மணியேகண்ணொளியேகண்ணுட்கலந்துநின்றகதிரேயக்
கதிரின்வித்தே, தண்ணேதண்மதியேயம்மதியிற்பூத்ததண்ணமுதேதண்ணமுதசார
மேசொற், பண்ணேபண்ணிசையேபண்மயமேபண்ணின்பயனேமெய்த்தவர்வாழ்த்தி
ப்பரவுந்தேவே. (உரு)

மாணேயத்தவருளத்தே மலர்ந்தசெந்தாமரைமலரின்வயங்குகின்றமணியேஞானப்
பூணேமெய்ப்பொருளேயற்புதமேமோனப்புத்தமுதேயானந்தம்பொலிந்தபொற்பே
யாணேபெண்ணுருவமேயலியேயொன்றுமல்லாதபேரொளியேயனைத்துந்தாங்குந்
தூணேசிற்சுகமே யச்சுகமேற்பொங்குஞ் சொரூபானந்தக்கடலேசோதித்தேவே.

பூதமேயவைதோன்றிப்புகுந்தொடுங்கும்புகலிடமேயிடம்புரிந்தபொருளேபோற்றும்
வேதமேவேதத்தின்விளைவேவேதவியன்முடிவேயம்முடிவின்விளங்குங்கோவே
நாதமேநாதாந்தநடமேயந்தநடத்தினையுண்ணடத்துகின்றநலமேஞான
வோதமேபோதமெலாங்கடந்துநின்றபூரணமேயோகியருட்பொலிந்ததேவே. (உஅ)

ஞாலமேஞாலமெலாம்விளங்கவைத்தநாயகமேகற்பமுதனவிலாநின்ற
காலமேகாலமெலாங்கடந்தஞானக்கதியேமெய்க்கதியளிக்குங்கடவுளேசிற்
கோலமேகுணமேயுட்குறியேகோலங்குணங்குறிகள்கடந்துநின்றகுருவேயன்பர்
சீலமேமாலறியாமனத்திற்கண்டசெம்பொருளேயும்பர்பதஞ்செழிக்குந்தேவே. (உகூ)

தத்துவமேதத்துவாதீதமேசிற்சயம்புவேயெங்குநிறைசாக்ஷியேமெய்ச்
சத்துவமேசத்துவத்தின்பயனுமின்பந்தருளும்பெருவாழ்வாஞ்சாமியேயெஞ்
சித்தநிலைதெளிவிக்கு மொளியேசற்றுந் தெவிட்டாததெள்ளமுதேதேனேயென்றுஞ்
சுத்தநெறிதிறம்பாதாரறிவிற்றோய்ந்தசுகப்பொருளேமெய்ஞ்ஞானந்துலங்குந்தேவே.

யோகமேயோகத்தின்பயனேயோகத்தொருமுதலேயோகத்திேனோங்குந்தூய
போகமேபோகத்தின்பொலிவே போகம்புரிந்தருளும்புண்ணியமேபுனிதஞான
யாகமேயாகத்தின்விளைவேயாகத்திறையேயவ்விறைபுரியுமின்பேயன்பர்
மோகமேமோகமெலாமழித்துவீறுமோனமேமோனத்தின்முளைத்ததேவே. (௩௧)

காட்சியேகாண்பதுவே ஞேயமேயுட்கண்ணுடையார்கண்ணிறைந்தகளிப்பேயோங்கு
மாட்சியேயுண்மையறிவின்பமென்னவயங்குகின்றவாழ்வேமாமௌனக்காணி
யாட்சியேயாட்சிசெயுமரசேசுத்தவறிவேமெய்யன்பேதெள்ளமுதேநல்ல
* சூட்சியேசூட்சியெலாங்கடந்துநின்றதுரியமேதுரியமுடிச்சோதித்தேவே. (௩௨)

மறைமுடிக்குப்பொருத்தமுறுமணியே ஞானவாரிதியேயன்பர்கடம்மனத்தேநின்ற
குறைமுடிக்குங்குணக்குன்றே குன்றுமோனக்கோமளமேதூயசிவக்கொழுந்தேவெள்
ளைப்; பிறைமுடிக்கும்பெருமானேதுளவமாலைப்பெம்மானேசெங்கமலப்பிரானேயிந்த
விறைமுடிக்குமூவர்கட்குமேலாய்நின்றவிறையேயிவ்வுருவுமின்றியிருந்ததேவே.

கோதகன்றயோகர்மனக்குகையில்வாழுங்குருவேசண்முகங்கொண்டகோவேவஞ்ச
வாதகன்றஞானியர்தம்மதியிலூறும்வானமுதேயானந்தமழையேமாயை
வேதகன்றமுத்தர்களைவிழுங்குஞானவேழமேமெய்யின்பவிருந்தேநெஞ்சிற்
றீதகன்றமெய்யடியர்தமக்குவாய்த்தசெல்வமேயெல்லையிலாச்சீர்மைத்தேவே. (௩௪)

அருளருவிவழிந்துவழிந்தொழுகவோங்குமானந்தத்தனிமலையேயமலவேதப்
பொருளளவுநிறைந்தவற்றின் மேலுமோங்கிப்பொலிகின்றபரம்பொருளேபுரணமாகி
யிருளறுசிற்பிரகாசமயமாஞ்சுத்தவேகாந்தப்பெருவெளிக்குளிருந்தவாழ்வே
தெருளளவுமுளமுழுதுங் கலந்துகொண்டுதித்திக்குஞ்செழுந்தேனேதேவதேவே.

அளவையெலாங்கடந்துமனங்கடந்துமற்றையறிவையெலாங்கடந்துகடந்தமல
யோக, ருளவையெலாங்கடந்துபதங்கடந்துமேலையொன்றுகடந்திரண்கெடந்துணரச்
சூழ்ந்த, களவையெலாங்கடந்தண்டபிண்டமெல்லாங்கடந்துநிறைவானசுகக்கடலேய
ன்பர், வளவையெலாமிருளகற்றுமொளியேமோனவாழ்வேயென்னுயிர்க்குயிராய்வதி
யுந்தேவே. (௩௬)

வன்புகலந்தறியாதமனத்தோர்தங்கண்மனங்கலந்துமதிகலந்துவயங்காநின்ற
வென்புகலந்தூன்கலந்துபுலன்களோடுமிந்திரியமவைகலந்துள்ளியங்குகின்ற
வன்புகலந்தறிவுகலந்துயிரைம்பூதமான்மாவுங்கலந்துகலந்தண்ணித்தூறி [வே.
யின்புகலந்தருள்கலந்துதுளும்பிப்பொங்கியெழுங்கருணைப்பெருக்காறேயின்பத்தே

தண்ணமுதமதிகுளிர்ந்தகிரணம்வீசத்தடம்பொழிற்பூமணம்வீசத்தென்றல்வீச
வெண்ணமுதப்பளிக்குநிலாமுற்றத்தேயின்னிசைவீசத்தண்பனிநீரெடுத்துவீசப்
பெண்ணமுதமனையவர்விண்ணமுதமூட்டப்பெறுகின்றசுகமனைத்தும்பிற்பட்டோடக்
கண்ணமுதத்துடம்புயிர்மற்றனைத்துமின்பங்கலந்துகொளத்தருங்கருணைக்கடவுட்டே
வே. (௩௮)

சுழியாதவருட்கருணைப் பெருக்கேயென்றுந் தூண்டாதமணிவிளக்கின் சோதியேவா
னொழியாதுகதிர்பரப்புஞ்சுடரேயன்பர்க்கோவாதவின்பருளுமொன்றேவிண்ணோர்
விழியாலுமொழியாலுமனத்தினாலும்விழைதருமெய்த்தவத்தாலும்விளம்புமெந்த
வழியாலுங்கண்டுகொளற்கரிதாய்ச்சுத்தமௌனவெளியூடிருந்துவயங்குந்தேவே.

* எதுகை நயம் பற்றி நின்றது.

சொல்லொழியப்பொருளொழியக்கரணமெல்லாஞ்சோர்ந்தொழிய வுணர்வொழியத் துளங்காநின்ற,வல்லொழியப்பகலொழியநடுவேநின்றவானந்தவநுபவமேயதீதவாழ்வே நெல்லொழியப்பதர்கொள்வார்போலவின்பநிறைவொழியக்குறைகொண்மதநெறியோர்நெஞ்சக், கல்லொழியமெய்யடியரிதயமெல்லாங்கலந்துகலந்தினிக்கின்றகருணைத்தேவே. (சo)

அலைகடலும்புவிவரையுமனல்காலீருமந்தரமுமற்றையகிலாண்டம்யாவு நிலைகுலையாவண்ணமருள்வெளியினூடேநிரைநிரையாநிறுத்தியுயிர்நிகழும்வண்ணந் தலைகுலையாத்தத்துவஞ்செய்திரோதையென்னுந்தனியாணைநடத்தியருட்டலத்திலென்று,மலைவறவீற்றிருந்தருளுமரசேமுத்திவழித்துணையேவிழித்துணையுண்மணியாந்தேவே. (சக)

வரம்பழுத்தநெறியேமெய்ந்நெறியிலின்பவளம்பழுத்தபெருவாழ்வேவானோர்தங்கள் சிரம்பழுத்தபதப்பொருளேயறிவானந்தசிவம்பழுத்தவநுபவமேசிதாகாசத்திற் பரம்பழுத்தநடத்தரசேகருணையென்னும்பழம்பழுத்தவான்றருவேபரமஞானத் திரம்பழுத்தயோகியர்தம்யோகத்துள்ளேதினம்பழுத்துக்கனிந்தவருட்செல்வத்தேவே

அண்டமெலாங்கண்ணுகக்கொளினுங்காண்டற் கணுத்துணையுங்கூடாவென்றனந்தவேதம்,விண்டலறியோலமிட்டுப்புலம்பமோனவெளிக்குள்வெளியாய்நிறைந்துவிளங்குமொன்றே, கண்டவடிவாயகண்டமயமாயெங்குங்கலந்துநின்றபெருங்கருணைக்கடவுளேயெஞ், சண்டவினைத்தொடக்கறச்சின்மயத்தைக்காட்டுஞ்சற்குருவேசிவகுருவே சாந்தத்தேவே. (சங)

பேதமுறுமெய்ப்போதவடிவமாகிப்பெருங்கருணைநிறம்பழுத்துச்சாந்தம்பொங்கிச் சீதமிகுந்தருள்கனிந்துகனிந்துமாறுச்சின்மயமாய்நின்மலமேமணந்துநீங்கா வாதரவோடியன்மௌனச்சுவைமேன்மேற்கொண்டானந்தரசமொழுக்கியன்பாலென்றுஞ்,சேதமுறுதறிஞருளந்தித்தித்தோங்குஞ்செழும்புனிதக்கொழுங்கனியேதேவதேவே. (சச)

உடல்குளிரவுயிர்தழைக்கவுணர்ச்சியோங்கவுளங்கனியமெய்யன்பருள்ளத்தூடே கடலனையபேரின்பந்துளும்பநாளுங்கருணைமலர்த்தேன்பொழியுங்கடவுட்காவே விடலரியவெம்போல்வாரிதயந்தோறும்வேதாந்தமருந்தளிக்கும்விருந்தேவேதந் தொடலரியவெளிமுழுதும்பரவிஞானச்சோதிவிரித்தொளிர்கின்றசோதித்தேவே.

கிரியைநெறியகற்றிமறைமுடிவினின்றுகேளாமற்கேட்கின்றகேள்வியேசொற் கரியவறைவிடுத்துநவநிலைக்குமேலேகாணமற்காண்கின்றகாட்சியேயுள் ளரியநிலையொன்றிரண்டினடுவேசற்றுமரியாமலறிகின்றவறிவேயென்று முரியசதாநிலைநின்றவுணர்ச்சிமேலோருன்னுமலுன்னுகின்றவொளியாந்தேவே. (சரு)

சொற்போதற்கரும்பெரியமறைசணுடித்தொடர்ந்துதொடர்ந்தயர்ந்திளைத்துத்துளங்கியேங்கிப், பிற்போதவிரைந்தன்பருளத்தேசென்றபெருங்கருணைப்பெருவாழ்வேபெயராதென்றுந், தற்போதவொழிவினிடைநிறைந்துபொங்கித்ததும்பிவழிந்தோங்கியெல்லாந்தானேயாகிச், சிற்போதத்தகம்புறமுங்கோத்துநின்றசிவானந்தப்பெருக்கேமெய்ச் செல்வத்தேவே. (சஎ)

பொங்குபலசமயமெனுநதிகளெல்லாம்புகுந்து கலந்திடநிறைவாய்ப்பொங்கியோங்கு கங்குகரைகாணுதகடலேயெங்குங்கண்ணுகக்காண்கின்றகதியேயன்பர் [ங் தங்கநிழல்பரப்பிமயற்சோடையெல்லாந்தணிக்கின்றதருவேபூந்தடமேஞானச் செங்குமுதமலரவருமதியேயெல்லாஞ்செய்யவல்லகடவுளேதேவதேவே. (சஅ)

வான்காணுமறைகாணுமலரோன்காணான்மால்காணானுருத்திரனுமதித்துக்காணு
ஞன்காணவிடத்ததனைக்காண்பேமென்றநல்லோர்கணவில்கின்றநலமேவேட்கை
மான்காணவுளக்கமலமலர்த்தாநின்றவான்சுடரேயானந்தமயமேயீன்ற
வான்காணவிளங்கன்றாயலமந்தேங்குமன்பர்தமைக்கலந்துகொளுமமலத்தேவே.

மெய்ஞ்ஞானவிருப்பத்திலேறிக்கேள்விமீதேறித்தெளிந்திச்சைவிடுதலேறி
யஞ்ஞானமற்றபடியேறியுண்மையறிந்தப்படிநிலையேறியதுநானென்னுங்
கைஞ்ஞானங்கழன்றேறிமற்றவெல்லாங்கடந்தேறிமௌனவியற்கதியிலேறி
யெஞ்ஞானமறத்தெளிந்தோர்கண்டுங்காணேமென்கின்றவநுபவமேயின்பத்தேவே.

பற்றறியாமுத்தர்தமையெல்லாம்வாழைப்பழம்போலவிழுங்குகின்றபரமேமாசு
பெற்றறியாப்பெரும்பதமேபதத்தைக்காட்டும்பெருமானேயானந்தப்பேற்றின்வாழ்வே
யுற்றறியாதின்னுமின்னுமறைகளெல்லாமோலமிட்டுத் தேடநின்றவொன்றேயொன்
றுங், கற்றறியாப்பேதையேன்றனக்குமின்பங்களிந்தளித்தவருட்கடலேகருணைத்தே
வே. (௫௧)

மெய்யுணர்ந்தவாதவூர்மலையைச்சுத்தவெளியாக்கிக்கலந்துகொண்டவெளியேமுற்
றும், பொய்யுணர்ந்தவெமைப்போல்வார்தமக்குமின்பம்புரிந்தருளுங்கருணைவெள்ளப்
பொற்பேயன்பர், கையுறைந்துவளர்நெல்லிக்கனியேயுள்ளங்கரைந்துகரைந்துருகவவ
ர்கருத்தினூடே, யுய்யுநெறியொளிகாட்டிவெளியுமுள்ளுமோங்குகின்றசுயஞ்சுடரே
யுண்மைத்தேவே. (௫௨)

ஒலிவடிவுநிறஞ்சுவைகணாற்றமூற்றமுறுதொழில்கள்பயன்பலவேறுளவாயெங்கு
மலிவகையாயெவ்வகையுமொன்றாயொன்றுமாட்டாதாயெல்லாமும்வல்லதாகிச்
சலிவகையில்லாதமுதற்பொருளே யெல்லாந்தன்மயமாய்விளங்குகின்றதனியேயாண்
பெண்,ணலிவகையல்லாதவகைகடந்துநின்றவருட்சிவமேசிவபோகத்தமைந்ததேவே

பேராயவண்டங்கள்பலவும்பிண்டபேதங்கள்பற்பலவும்பிண்டாண்டத்தின்
வாராயபலபொருளுங்கடலுமண்ணுமலையுளவுங்கடலுளவுமணலும்வானு
மூராதவான்மீனுமணுவுமற்றையுள்ளனவுமளந்திடலாமோகோவுன்னை
யாராலுமளப்பரிதென்றனந்தவேதமறைந்திளைக்கவதிதூரமாகுந்தேவே. (௫௪)

கற்பங்கள்பலகோடிசெல்லத்தீயகனலினடுவூசியின்மேற்காலையூன்றிப்
பொற்பறமெய்யுணவின்றியுறக்கமின்றிப்புலர்ந்தெலும்புபுலப்படவைம்பொறியை
யோம்பி, நிற்பவருக்கொளித்துமறைக்கொளித்தியோகநீண்முனிவர்க்கொளித்தமரர்க்
கொளித்துமேலாஞ்,சிற்பதத்திற்சின்மயமாய்நிறைந்துஞானத்திருவாளருட்கலந்ததே
வதேவே. (௫௫)

மட்டகன்றநெடுங்காலமனத்தால்வாக்கான்மதித்திடினும்புலம்பிடினும்வாராதென்றே
கட்டகன்றமெய்யறிவோர்கரணநீக்கிக்கலையகற்றிக்கருவியெலாங்கழற்றிமாயை
விட்டகன்றுகருமமலமாதம்யாவும்விடுத்தொழித்துச்சகசமலவீக்கநீக்கிச்
சுட்டகன்றுநிற்கவவர்தம்மைமுற்றுஞ்சூழ்ந்துகலந்திடுஞ்சிவமேதுரியத்தேவே. (௫௬)

உருநான்குமருநான்குநடுவேநின்றவுருவருவமொன்றுமிவையுடன்மேலுற்ற
வொருநான்குமிவைகடந்தவொன்றுமாயவ்வொன்றினடுவாய்நடுவுள்ளொன்றாய்நின்
றே, யிருநான்குமமைந்தவரைநான்கிளேடுமெண்ணுன்கின்மேலிருத்துமிறையேமா
யைக், கருநான்கும்பொருளுன்குங்காட்டுமுக்கட்கடவுளேகடவுளர்கள்கருதுந்தேவே.

பாங்குளநாந்தெரிதுமெனத்துணிந்துகோடிப்பழமறைகடனித்தனியேபாடிப்பாடி யீங்குளதென்றுங்குளதென்றேடி யோடியிளைத்திளைத்துத்தொடர்ந்துதொடர்ந்தெட்டுந்தோறும், வாங்குபரவெளிமுழுதுநீண்டுநீண்டுமறைந்துமறைந்தொளிக்கின்றமணியேயெங்குந், தேங்குபரமானந்தவெள்ளமேசச்சிதானந்தவருட்சிவமேதேவதேவே.

எழுத்தறிந்துதமையுணர்ந்தயோகருள்ளத்தியலறிவாந்தருவினிலன்பெனுமோருச்சி பழுத்தளிந்துமௌனநறுஞ்சுவைமேற்பொங்கிப் பதம்பொருந்தவநுபவிக்கும்பழமே மாயைக், கழுத்தரிந்துகருமமலத்தலையைவீசுங்கடுந்தொழிலோர்தமக்கோநற்கருணைகாட்டி, விழுத்துணையாயமர்ந்தருளும்பொருளேமோனவெளியினிறையானந்தவிளைவாந்தேவே. (ருகூ)

உருத்திரர்நாரணர்பிரமர்விண்ணோர்வேந்தருறுகருடர்காந்தருவரியக்கர்பூதர் மருத்துவர் யோகியர்சித்தர்முனிவர்மற்றைவானவர்கண் முதலோர்தம்மனத்தாற்றேடிக், கருத்தழிந்துதனித்தனியேசென்றுவேதங்களைவினவமற்றவையுங்காணேயென்று, வருத்தமுற்றுங்கவரோடுபுலம்பநின்றவஞ்சவெளியேயின்பமயமாந்தேவே. (கூ0)

பாவிரமாமறையனந்தமனந்தமின்னும்பார்த்தளந்துகாண்டுமெனப்பல்கான்மேவி யாயிரமாயிரமுகங்களாலும்பன்னாளளந்தளந்தோரணுத்துணையுமளவுகாணு தேயிரங்கியழுதுசிவசிவவென்றேங்கித்திரும்பவருட்பரவெளிவாழ்சிவமேயீன்ற தாயிரங்கிவளர்ப்பதுபோ லெம்போல்வாரைத்தண்ணருளால்வளர்த்தென்றுந்தாங்குந்தேவே. (கூக)

அந்தரமிங்கறிவோமற்றதனிலண்டமடுக்காயமைந்தவுளவறிவோமாங்கே யுந்துறும்பல்பிண்டநிலையறிவோஞ்சீவனுற்றநிலையறிவோமற்றனைத்துநாட்டு மெந்தைநின்தருள்விளையாட்டங்கோவங்கோ வெள்ளளவுமறிந்திலோமென்னேயென்று,முந்தனந்தமறைகளெலாம்வழுத்தநின்றமுழுமுதலேயன்பர்குறைமுடிக்குந்தேவே.

தோன்றுபரசாக்கிரமுங்கண்டோமந்தச்சொப்பனமுங்கண்டோமேற்சுழுத்திகண்டோ மான்றபரதுரியநிலைகண்டோமப்பாலதுகண்டோமப்பாலாமதுவுங்கண்டோ மேன்றவுபசாந்தநிலைகண்டோமப்பாலிருந்தநினைக்காண்கிலோமென்னேயென்று சான்றவுபனிடங்களெலாம்வழுத்தநின்றதன்மயமேசின்மயமேசகசத்தேவே. (கூங)

பரிக்கிரகநிலைமுழுதுந்தொடர்ந்தோமேலைப்பரவிந்துநிலையனைத்தும்பார்த்தோம்பாச மெரிக்குமியற்பரநாதநிலைக்கண்மெல்லவெய்தினேமப்பாலுமெட்டிப்போனேந் தெரிக்கரியவெளிமூன்றுந்தெரிந்தோமெங்குஞ்சிவமேநின்சின்மயமோர்சிறிதுந்தேறேந், தரிக்கரிதென்றாகமங்களெல்லாம்போற்றத் தனிநின்றபரம்பொருளேசாந்தத்தேவே. (கூச)

மணக்குமலர்த்தேனுண்டவண்டேபோலவளர்பரமானந்தமுண்டுமகிழ்ந்தோரெல்லா மிணக்கமுறக்கலந்துகலந்ததீதமாதற்கியற்கைநிலையாததுதானெம்மாற்கூறுங் கணக்குவழக்கனைத்தினையுங்கடந்ததங்கோகாண்பரிதிங்கெவர்க்குமெனக்கலைகளெல்லாம்,பிணக்கறநின்றோலமிடத்தனித்துநின்றபெரும்பதமேமதாதீதப்பெரியதேவே.

பொதுவென்றும்பொதுவினடம்புரியாநின்றபூரணசிற்சிவமென்றும்போதானந்த மதுவென்றும்பிரமமென்றும்பரமமென்றும்வகுக்கின்றோர்வகுத்திடுகவதுதானென்று மிதுவென்றுஞ்சுட்டவொண்ணாதஞற்சும்மாவிருப்பதுவேதுணிவெனக்கொண்டிருக்கின்றோரை, * விதுவென்றதண்ணளியாற் கலந்துகொண்டுவிளங்குகின்றபெருவெளியேவிமலத்தேவே. (கூகூ)

* விது-எ-து, சந்திரன்-ஈண்டிரண்டனுருபுவிரிக்க.

அருமறையாகமங்கண்முதனவிநெல்லாமமைந்தமைந்துமற்றவைக்குமப்பாலாகிக் கருமறைந்தவுயிர்கடொறுங்கலந்துமேவிக்கலவாமற்பன்னெறியுங்கடந்துஞானத் திருமணிமன்றகத்தின்பவுருவாயென்றுந்திகழ்கருணைநடம்புரியுஞ்சிவமேமோனப் பெருமலையேபரமவின்பநிலையேமுக்கட்பெருமானேயெத்திறத்தும்பெரியதேவே.

என்னுயிர்நீயென்னுயிர்க்கோருயிருநீயென்னின்னுயிர்க்குந்துணைவனீயென்னையீன் வன்னைநீயென்னுடையவப்பனீயென்னரும்பொருணீயென்னிதயத்தன்புநீயென் [ற னன்னெறிநீயெனக்குரியவுறவுநீயென்னற்குருநீயெனைக்கலந்தநட்புநீயென் றன்னுடையவாழ்வுநீயென்னைக்காக்குந்தலைவனீகண்மூன்றுதழைத்ததேவே. (சுஅ)

தானாகித்தானல்லதொன்றுமில்லாத்தன்மையனுயெவ்வெவைக்குந்தலைவனாகி வானாகிவளியனலாய்நீருமாகிமலர்தலையவுலகாகிமற்றுமாகித் தேனாகித்தேனினறுஞ்சுவையதாகித்தீஞ்சுவையின்பயனாகித்தேடுகின்ற நானாகியென்னிறையாய்நின்றோய்நின்னைநாயடியேனெவ்வாறுநவிற்றுமாறே. (சுகூ)

ஆனேறும்பெருமானேயரசேயென்றனருயிருக்கொருதுணையேயமுதேகொன்றைத் தேனேறுமலர்ச்சடையெஞ்சிவனேதில்லைச்செழுஞ்சுடரேயானந்தத்தெய்வமேயென் னூனேறுமுயிர்க்குணிறையொளியேயெல்லாமுடையானேநின்னடிச்சீருன்னியன்பர் வானேறுகின்றார்நானொருவன்பாவிமண்ணேறிமயக்கேறிவருந்துற்றேனே.

செஞ்சடையெம்பெருமானேசிறுமானேற்றசெழுங்கமலக்கரத்தவனேசிவனேசூழ்ந்து மஞ்சடையுமதிற்றில்லைமணியேயொற்றிவளர்மருந்தேயென்னுடையவாழ்வேவேட் கை, யஞ்சடையவஞ்சியர்மாலடையவஞ்சமடையநெடுந்துயரடையவகன்றபாவி நெஞ்சடையநினைதியோநினைதியேன்மெய்ந்நெறியுடையார்நெஞ்சமர்ந்தநீதனன்றே.

அன்னையினும்பெரிதினியகருணையுட்மொரமுதேயென்னுறவேயரசேயிந்த மன்னுலகிலடியேனையென்னேதுன்பவலையிலகப்படவியற்றிமறைந்தாயந்தோ பொன்னைமதித்திடுகின்றோர்மருங்கேசூழ்ந்துபோனகமும்பொய்யுறவும் பொருந்தலா ற்றே, னென்னையுளங்கொள்ளுதியோகொள்கிலாயோவென்செய்வேனென்செய்வே னென்செய்வேனே. (எஉ)

படித்தேன்பொய்யுலகியனூலெலந்தாய்நீயேபடிப்பித்தாயன்றியுமப்படிப்பிலிச்சை யொடித்தேனுனொடித்தேனோவொடிப்பித்தாய்பின்னுன்னடியேதுணையெனநானுறுதி யாகப், பிடித்தேன்மற்றதுவுநீபிடிப்பித்தாயிப்பேதையேனின்னருளைப்பெற்றோர்போ ல, நடித்தேனெம்பெருமானீதொன்றுநானேநடித்தேனோவல்லதுநீநடிப்பித்தாயோ.

மத்தேறியலைதயிர்போல்வஞ்சவாழ்க்கைமயலேறிவிருப்பேறிமதத்தினோடு, பித்தேறி யுழல்கின்றமனத்தாலந்தோபேயேறிநலிகின்றபேதையானேன், வித்தேறுவிளைவேறி மகிழ்கின்றோர் போன்மேலேறியன்பரெலாம்விளங்குகின்றா, ரொத்தேறியுயிர்க்குயி ராய்நிறைந்தவெங்களுடையானேயிதுதருமோவுணர்கிலேனே. (எச)

மதியணிந்தமுடிக்கனியேமணியேயெல்லாம் வல்லவருட்குருவேநின்மலர்த்தாள்வாழ் த்திக், கதியணிந்தாரன்பரெலாமடியேனொன்றுங்கண்டறியேன்கருமத்தாற்கலங்கியந் தோ, பொதியணிந்துதிரிந்துழலுமேறுபோலப்பொய்யுலகிற்பொய்சுமந்துபுலம்பாநி ன்றேன், றுதியணிந்தநின்னருளென்றனக்கு முண்டோவின்றெனிலிப்பாவியேன் சொல்வதென்னே. (எ௫)

என்னரசே யென்னுயிரேயென்னையீன்ற வென்றாயேயென்குருவேயெளியேனிங்கே தன்னரசேசெலுத்திியெங்குமுழலாநின்றசஞ்சலநெஞ்சகத்தாலேதயங்கியந்தோ [க் மின்னரசேபெண்ணமுதேயென்றுமாதர்வெய்யசிறுநீர்க்குழிக்கண்விழவேயெண்ணி கொன்னரைசேர்கிழக்குருடன்கோல்போல்வீணேகுப்புறுகின்றேன்மயலிற் கொடிய னேனே. (எசு)

அல்விலங்குசெழுஞ்சுடரா யடியாருள்ளத் தமர்ந்தருளுஞ்சிவகுருவேயடியேனிங்கே யில்விலங்குமடந்தையென்றேயெந்தாயந்த விருப்புவிலங்கினையொழித்துமென்னே பின்னு, மல்விலங்குபரத்தையர்தம்மாசையென்னும் வல்விலங்குபூண்டந்தோமயங்கி நின்றேன், புல்விலங்குமிதுசெய்யாவோகோவிந்தப்புலைநாயேன்பிழைபொறுக்கிற் புதிதேயன்றே. (எஎ)

வன்கொடுமைமலநீக்கி யடியார்தம்மை வாழ்விக்குங்குருவேநின்மலர்த்தாளெண்ண முன்கொடுசென்றிடுமெடியேன் றன்னையிந்த மூடமனமிவ்வுலகமுயற்சிநாடிப் பின்கொடுசென்றலைத்* திழுக்குதந்தோநாயேன்பேய்பிடித்தபித்தனைப்போற்பிதற்று நின்றே, னென்கொடுமையென்பாவமெந்தாயெந்தா யென்னுரைப்பேனெங்குருவே னென்செய்வேனே. (எஅ)

† உய்குவித்துமெய்யடியார்தம்மையெல்லாமுண்மைநிலைபெறவருளுமுடையாயிங் கே, மைகுவித்தநெடுங்கண்ணார்மயக்கிலாழ்ந்துவருந்துகின்றேனல்லாலுன்மலர்த்தா ளெண்ணிக், கைகுவித்துக்கண்களினீர் பொழிந்துநானோர் கணமேனுங்கருதிநினைக் கலந்ததுண்டோ, செய்குவித்துக்கொள்ளுதியோகொள்கிலாயோ திருவுளத்தையறி யேனென்செய்குவேனே. (எகூ)

அருள்வெளியிலானந்தவடிவினனின்றாடுகின்றபெருவாழ்வேயரசேயிந்த மருள்வலையிலகப்பட்ட மனத்தாலந்தோமதிகலங்கிமெய்ந்நிலைக்கோர்வழிகாணாதே [கி யிருணெறியிற்கோலிழந்த குருட்டமேன்போ லெண்ணாதெல்லாமெண்ணியேங்கியேங் யுருள்சகடக்கால்போலுஞ்சுழலாநின்றேனுய்யும்வகையறியேனிவ்வொதியனேனே.

கற்றவளைதனக்குமுணவளிக்குமுன்றன்கருணைநிலைதனையறியேன்கடையேனிங்கே யெற்றவளையெறும்பேபோற்றிரிந்துநாளுமிளைத்துநினதருள்காணாதெந்தாயந்தோ பெற்றவளைக்காணாதபிள்ளைபோலப்பேதுறுகின்றேன்செய்யும்பிழையைநோக்கி ‡ யிற்றவளைக்கேள்விடல்போல்விடுதியேல்யானென்செய்வேனெங்குறவேனென் சொல்வேனே. (அக)

---

* இழுக்குது - எ-து, மரூஉவழக்கு. அல்லதூஉம் - ஆசிரியர் - தொல்காப்பிய னூர் கூறியகடிசொல்லில்லை யென்பதனாற் கோடலுமாம். இங்ஙனமாதல் - இனியே தெமக்குனருள் வருமோ வெனக்கருதி "யேங்குதே" நெஞ்சம், எனத் தாயுமானார் முதலியபிறசான்றோர் செய்யுட்களானு முணர்க வென்க.

† உய்குவித்தென்பதனுள்-கு-சாரியை.

‡ இற்றவள்-எ-து, மனையறங்காப்போள்.

அடிமைசெயப்புருந்திடுமெம்போல்வார்குற்றமாயிரமும்பொறுத்தருளுமரசேநாயேன்கொடுமைசெயுமனத்தாலேவருந்தியந்தோகுரங்கின்கைமாலையெனக்குலையாநின்றேன், கடுமைசெயப்பிறர்துணிந்தாலடிமைதன்னைக்கண்டிருத்தலழகன்றேகருணைக்கெந்தாய், செடிமையுளப்பாதகனேனென்செய்வேனின்றிருவுளத்தையறிந்திலேன்றிகைக்கின்றேனே. (அ௨)

கூம்பாதமெய்ந்நெறியோருளத்தேயென்றுங் குறையாதவின்பளிக்குங்குன்றேயெனைத், தாம்பாலேயாப்புண்டுவருந்திநாயேன்றையலார்மையலெனுந்தாம்பினூடே வோம்பாமலுவர்நீருண்டுயங்குகின்றேனுன்னடியரக்கணமேலுவந்துநின்றே தீம்பாலுஞ்சருக்கரையுந்தேனுநெய்யுந்தேக்குகின்றாரிதுதகுமோதேவதேவே.

வெள்ளமணிசடைக்கனியேமூவராகிவிரிந்தருளுமொருதனியேவிழலனேனைக் கள்ளமனக்குரங்காட்டுமோட்டமெல்லாங்கண்டிருந்துமிரங்கிலையேற்கவலையாலே யுள்ளமெலிந்துழல்கின்றசிறியேன்பின்னருய்யும்வகையெவ்வகையீதுன்னுந்தோறும் பொள்ளெனமெய்வியர்க்கவுளம்பதைக்கச்சோபம்பொங்கிவழிகின்றதுநான்பொறுக்கிலேனே. (அ௪)

எனையறியாப்பருவத்தேயாண்டுகொண்டவென்னரசேயென்குருவேயிறையேயின்று மனையறியாப்பிழைகருதுமகிழ் நன்போலமதியறியேன்செய்பிழையைமனத்துட்கொண்டே, தனையறியாமுகத்தவர்போலிருந்தாயெந்தாய்தடங்கருணைப்பெருங்கடற்குத்தகுமோகண்டா, யனையறியாச்சிறுகுழவியாகியிங்கேயடிநாயேனரற்றுகின்றேனந்தோவந்தோ. (அ௫)

தீவினைநல்வினையெனும்வன்கயிற்றாலிந்தச்சீவர்களையாட்டுகின்றதேவேநாயேனேவினைநேர்கண்மடவார்மையற்பேயாலிடருழந்துஞ்சலிப்பின்றியெவ்வேளையின்னுநாவினையென்பால்வருந்திக்கறண்டுகின்றநாய்க்குநகைதோன்றநின்றுநக்கின்றேனுனுவினைவிட்டெருதுகறந்திடுவான்செல்லுமறிவிலிக்குமறிவிலியேனானேனே.

எம்பெருமானின்விளையாட்டென்சொல்கேனேதுமறியாச்சிறியேனையெனைத்தாலிங்கே, செம்புனலாற்குழைத்தபுலாற்சுவர்சூழ்பொத்தைச் சிறுவீட்டிலிருட்டறையிற்சிறைசெய்தந்தோ, கம்பமுறப்பசித்தழலுங்கொளுந்தவந்தக்கரணமுதற்பொறிபுலப்பேய்கவர்ந்துசூழ்ந்து, வம்பியற்றக்காமாதியரட்டரெல்லாமடிபிடித்துவருத்தவென்றேவளர்த்தாயெந்தாய். (அ௭)

அம்பரத்தேயானந்தவடிவாலென்றுமாடுகின்றமாமணியேயரசேநாயேனிம்பரத்தமெனுமுலகநடையிலந்தோவிடருழந்தேன்பன்னெறியிலெனையிழுத்தேபம்பரத்திநுடியலைப்படுத்துமிந்தப்பாவிமனமெனக்குவயப்படுவதில்லைகொம்பரற்றவிளங்கொடிபோற்றளர்ந்தேனென்னைக் குறிக்கொள்ளக்கருதுதியோகுறித்திடாயோ. (அ௮)

கண்ணுடையநுதற்கரும்பேமன்றிலாடுகாரணகாரியங்கடந்தகடவுளேநின், றண்ணுடைய மலரடிக்கோர் சிறிதுமன்புசார்ந்தேனேசெம்மரம்போற்றணிந்தேன், பெண்ணுடையமயலாலேசுழல்கின்றேனென்பேதமையையென்புகல்வேன்பேயனேனைப், புண்ணுடையபுழுவிரும்பும்புள்ளென்கேனேபுலைவிழைந்துநிலைவெறுத்தேபுலையனேனே. (அ௯)

பொன்னுடையாரிடம்புகவோவவர்கட்கேற்கப் பொய்மொழிகள்புகன்றிடவோபொதி
போலிந்தக்,கொன்னுடையாவுடல்பருக்கப்பசிக்குச்சோறுகொடுக்கவோகுளிர்க்காடை
கொளவோவஞ்ச,மின்னிடையார்முடைச்சிறுநீர்க்குழிக்கணந்தோவீழ்ந்திடவோதாழ்
ந்திளைத்துவிழிக்கவோதா, னென்னுடையாயென்னுடையாயென்னையிங்கேயெடுத்து
வளர்த்தனையறியேனென்சொல்வேனே. (கூ0)

வருகணத்துவாழ்ந்திடுமோவிழுமோவிந்தமலக்கூடென்றறிஞரெலாம்வருந்தக்கேட்டு
மருகணைத்துக்கொளப் பெண்பேயெங்கேமேட்டுக்கடைத்திட வெண்சோறெங்கேயா
டையெங்கே, யிருகணுக்குவியப்பெங்கேவசதியானவிடமெங்கேயென்றுதிரிந்திளைத்
தேனல்லா, லொருகணத்துமுனைநினைந்ததுண்டோவென்னையுடையானேயெவ்வகை
நானுய்யுமாறே. (கூக)

பொன்மலையோ சிறிதெனப்பேராசைபொங்கிப்புவிநடையிற்பற்பலகாற்போந்துபோ
ந்து, நென்மலையோநிதிமலையோவென்றுதேடிநிலைகுலைந்ததன்றியுனைநினைந்துநேடி
மன்மலையோமாமணியேமருந்தோவென்றுவழுத்தியதேயில்லையிந்தவஞ்சநெஞ்சங்
கன்மலையோவிரும்போ செம்மரமோபாறைக்கருங்கல்லோபராய்முருட்டுக்கட்டையே
யோ. (கூஉ)

தம்மைமறந்தருளமுதமுண்டுதேக்குந்தகையுடையார்திருக்கூட்டஞ்சார்ந்துநாயேன்
வெம்மையெலாந்தவிர்ந்துமனங்குளிரக்கேள்விவிருந்தருந்திமெய்யறிவாம்வீட்டி
லென்றுஞ், செம்மையெலாந்தருமௌனவணைமேற்கொண்டுசெறியிரவுபகலொன்றுந்
தெரியாவண்ண, மிம்மையிலேயெம்மையினுங்காணுச்சுத்தவின்பநிலையடைவேனோ
வேழையேனே. (கூங)

அடியனேன்பிழையனைத்தும் பொறுத்தாட்கொண்டவருட்கடலேமன்றேங்குமரசே
யிந்நாள்,கொடியனேன்செய்பிழையைத்திருவுள்ளத்தேகொள்ளுதியோகொண்டுகுலங்
குறிப்பதுண்டோ, நெடியனேமுதற்கடவுட்சமுகத்தோர்தந்நெடும்பிழைகளாயிரமும்
பொறுத்துமாயை, யொடியநேர்நின்றபெருங்கருணைவள்ளலெனமறைகளோதுவதிங்
குனைத்தானன்றே. (கூச)

கண்மயக்குப்பேரிருட்டுக்கங்குற்போதிற்கருத்தறியாச்சிறுவனையோர்கடுங்கானத்தே
யுண்மயக்கங்கொள விடுத்தேயொருவன்பின்போமொருதாய்போன்மாயையிருளோங்
கும்போதின், மண்மயக்கம்பெறும்விடயக்காட்டிலந்தோமதியிலேன்மாழாந்துமயங்க
நீதான், வண்மையுற்றநிப்திபின்பினென்னைவிட்டேமறைந்தனையேபரமேநின்வண்
ண்மையென்னே. (கூரு)

நற்றாயும்பிழைகுறிக்கக்கண்டோமிந்தநானிலத்தேமற்றவர்யார்நாடார்வீணே
பற்றாயுமவர்தமைநாம்பற்றேம்பற்றிற்பற்றுதபற்றுடையார்பற்றியுள்ளே
யுற்றாயுஞ்சிவபெருமான்கருணையொன்றேயுறுபிழைகளைத்துணையும்பொறுப்பதென்
றுன், பொற்றாளைவிரும்பியதுமன்றளாடும்பொருளேயென்பிழையனைத்தும்பொறுக்
கவன்றே. (கூசா)

எண்ணியநம்மெண்ணமெலாமுடிப்பான்மன்றுளெம்பெருமானென்றுமகிழ்ந்திருமா
ந்திங்கே, நண்ணியநற்றுறையர்தம்மை யுறாமைபேசி நன்குமதியாதிருந்தநாயினேனைத்
தன்னணியநகைநட்டமேலென்றிவின்பத்தாண்டவஞ்செய்கின்றபெருந்தகையேயெங்
கள், புண்ணியனேபிழைகுறித்துவிடுத்தியாயிற்பொய்யனேனெங்குற்றென்புரிவேன
ந்தோ. (கூஎ)

அன்பர் திருவுளங்கோயிலாகக்கொண்டேயற்புதச்சிற்சபையோங்குமரசேயிங்கு வன்பரிடைச்சிறியேனை மயங்கவைத்து மறைந்தனையேயானந்தவடிவோய்நின்னை துன்பவடிவுடைப்பிறரிற்பிரித்துமேலோர்துரியவடிவினனென்றுசொன்னவெல்லா மின்பவடி வடைந்தன்றே யெந்தா யந்தோ வென்னளவென்சொல்கே னிவ்வேழை யேனே. (கூஅ)

புற்றேறுங்குமரவமெல்லாம்பணியாக்கொண்டுபொன்மேனிதனிலணிந்தபொருளேமாயை, யுற்றேறுங்குவஞ்சமனக்கள்வனேனையுளங்கொண்டுபணிகொள்வதுனக்கேயொக்கு, மற்றேறுங்குமவரெல்லாம் பெருமைவேண்டும் வன்மனத்தரெனைவேண்டார்வள்ளலேநான், கற்றேறுங்குமறிவறியேன்பலவாச்சொல்லுங் கருத்தறியேனெனக்கருளக்கருதுவாயே. (கூகூ)

அருளுடையபரம்பொருளேமன்றிலாமோனந்தப்பெருவாழ்வேயன்புளோர்தந் தெருளுடையவுளமுழுதுங் கோயில்கொண்டசிவமேமெய்யறிவுருவாந்தெய்வமேயிம் மருளுடையமனப்பேதை நாயினேன்செய் வன்பிழையைச்சிறிதேனுமதித்தியாயி லிருளுடையபவக்கடல்விட்டேறேனென்னை யேற்றுவதற்கெண்ணுகவென்னின்பத் தேவே. (சOO)

திருச்சிற்றம்பலம்.

---

## மஹாதேவமாலை.

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

சிவகணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவருண்முறையீடு.



கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

துனியாலுளந்தளர்ந்தந்தோதுரும்பிற்சுழலுகின்றே
னினியாயினுமிரங்காதோநின்சித்தமெந்தாயிதென்ன
வனியாயமோவென்னளவினின்பாற்றண்ணருளிலையோ
சனியாமென்வல்வினைப்போதனையோவென்கொல்சாற்றுவதே. (க)

என்னேமுறையுண்டெனிற்கேள்வியுண்டென்பரென்னளவி
லின்னேசிறிதுமிலையேநின்பாலிதற்கென்செய்குவேன்
மன்னேமுக்கண்ணுடைமாமணியேயிடைவைப்பரிதாம்
பொன்னேமின்னேர்சடைத்தன்னேரிலாப்பரிபூரணனே. (உ)

தண்டாதசஞ்சலங்கொண்டேனிலையையித்தாரணியிற்
கண்டாரிரங்குவர்கேட்டாருருகுவர்கங்கைதிங்கட்
டுண்டார்மலர்ச்சடையெந்தாயிரங்கிலைதூய்மையிலா
வண்டார்பிழையும்பொறுப்போயிதுநின்னருட்கழகே. (ங)

பொய்யாமுலகநடைநின்றுசஞ்சலம்பொங்கமுக்க
ணையாவென்னுள்ளமழலார்மெழுகொத்தழிகின்றதாற்
பையாரரவமதிச்சடையாய்செம்பவளநிறச்
செய்யாயெனக்கருள்செய்யாயெனிலென்னசெய்குவனே. (ச)

விடமிலையேர்மணிகண்டாநின்சைவவிரதஞ்செய்யத்
திடமிலையேயுட்செறிவிலையேயென்றன்சித்தத்துநின்
னடமிலையேயுன்றனன்பிலையேவுனைநாடுதற்கோ
ரிடமிலையேயிதையெண்ணிலையேசற்றிரங்கிலையே. (ரு)

விண்ணுடையாய்வெள்ளிவெற்புடையாய்மதிமேவுசடைக்
கண்ணுடையாய்நெற்றிக்கண்ணுடையாயருட்கண்ணுடையாய்
பண்ணுடையாய்திசைப்பட்டுடையாயிடப்பாலிலருட்
பெண்ணுடையாய்வந்திப்பிட்டுடையாயென்பெருஞ்செல்வமே. (சு)

விடையுடையாய்மறைமேலுடையாய்நதிமேவியசெஞ்
சடையுடையாய்கொன்றைத்தாருடையாய்கரந்தாங்குமழுப்
படையுடையாயருட்பண்புடையாய்பெண்பரவையின்பா
னடையுடையாயருளுடையாய்பதநல்குகவே. (எ)

கீளுடையாய்பிறைக்கீற்றுடையாயெங்கிளைத்தலைமேற்
றாளுடையாய்செஞ்சடையுடையாயென்றனையுடையாய்
வாளுடையாய்மலைமானுடையாய்கலைமானுடையா
யாளுடையாய்மன்றுளாட்டுடையாயென்னையாண்டருளே. (அ)

நான்படும்பாடுசிவனேயுலகர்நவிலும்பஞ்சு
தான்படுமோசொல்லத்தான்படுமோவெண்ணத்தான்படுமோ
கான்படுகண்ணியின்மான்படுமாறுகலங்கிநின்றே
னேன்படுகின்றனையென்றிரங்காயென்னிலென்செய்வனே. (கூ)

பொய்யோவடிமையுரைத்தலெந்தாயென்னுட்போந்திருந்தா
யையோநின்னுள்ளத்தறிந்ததன்றோவென்னவலமெல்லாங்
கையோடவல்லவரோர்பதிஞயிரங்கற்பநின்று
மெய்யோடெழுதினுந்தானடங்காதவியப்புடைத்தே. (கo)

தேன்சொல்லும்வாயுமைபாகாநின்றன்னைத்தெரிந்தடுத்தோர்
தான்சொல்லுங்குற்றங்குணமாகக்கொள்ளுந்தயாளுவன்றே
நான்சொல்வதென்னைபொன்னுண்சொல்லும்வாணிதன்னுண்சொல்லுமவ்
வான்சொல்லுமெம்மலைமான்சொல்லுங்கைம்மலைமான்சொல்லுமே. (கக)

வென்றேமுதலையுமூர்க்கருங்கொண்டதுமீளவிடா
ரென்றேயுரைப்பரிங்கென்போன்றமூடர்மற்றில்லைநின்பேர்
நன்றேயுரைத்துநின்றன்றேவிடுத்தனனுணிலென்மட்
டின்றேயக்கட்டுரையின்றேயென்சொல்வதிறையவனே. (கஉ)

கைக்கின்றகாயுமினிப்பாம்விடமுங்கனவமுதாம்
பொய்க்கின்றகானலுநீராம்வன்பாவமும்புண்ணியமாம்
வைக்கின்றவோடுஞ்செம்பொன்னுமென்கெட்டமனதுநின்சீர்
துய்க்கின்றநல்லமனதாவதில்லையென்சொல்லுவனே. (கங)

வீணேபொழுதுகழிக்கின்றநானுன்விரைமலர்த்தாட்
காணேன்கண்டாரையுங்காண்கின்றிலேன்சற்றுங்காணற்கன்பும்
பூணேன்றவமும்புரியேனறமும்புகல்கின்றிலே
ஞணேன்விலங்கிழியாணேயெனுங்கடைநாயினனே. (கச

நாஞேரெளிமையடிமையென்றோநல்லனல்லனென்று
தாஞேநின்னன்பர்தகாதென்பரீதென்றுதாணினைத்தோ
வேஞேநின்னுள்ளமிரங்கிலையின்னுமிரங்கிலையேற்
காஞேடுவேன்சொல்கடல்விழுவேன்கொன்முக்கண்ணவனே. (கரு)

மின்போலுஞ்செஞ்சடைவித்தகனேயொளிமேவியசெம்
பொன்போலுமேனியெம்புண்ணியனேயெனைப்போற்றிப்பெற்ற
தன்போலுந்தாய்தந்தையாயிரம்பேரிருந்தாலுமந்தோ
நின்போலுமன்புடையாரெனக்காரிந்தநீணிலத்தே. (கசு)

அன்பாலென்னையிங்காளுடையாயிவ்வடியவனே
னின்பாலென்றுன்பநெறிப்பாலகற்றென்றுநின்றதல்லாற்
றன்பாலிடரைப்பிறர்பாலடுத்தொன்றுசொன்னதுண்டோ
வென்பாலிரங்கிலையென்பாற்கடல்பிள்ளைக்கீந்தவனே. (கஎ)

என்போன்மனிதரையேனடுப்பேனெனக்கெய்ப்பில்வைப்பாம்
பொன்போல்விளங்கும்புரிசடையான்றனைப்போயடுத்தேன்
றுன்போரணுவும்பெறேனினியானென்றுசொல்லிவந்தேன்
முன்போற்பராமுகஞ்செய்யேலருளுகமுக்கணனே. (கஅ)

பொன்னுடையார்தமைப்போயடுப்பாயென்றபுன்மையினோர்க்
கென்னுடையான்றனையேயடுப்பேனிதற்கெள்ளளவும்
பின்னிடையேனவர்முன்னடையேனெனப்பேசிவந்தேன்
மின்னிடைமாதுமைபாகாவென்சோகம்விலக்குகவே. (ககூ)

சாதகத்தோர்கட்குத்தானருள்வேனெனிற்றாழ்ந்திடுமோ
பாதகத்தோனுக்குமுன்னருளீந்ததெப்பான்மைகொண்டோ
தீதகத்தேனெளியேனாயினுமுன்றிருவடியாம்
போதகத்தேநினைக்கின்றேன்கருணைபுரிந்தருளே. (உ0)

அருளறியாச்சிறுதேவருந்தம்மையடுத்தவர்கட்
கிருளறியாவிளக்கென்றாலுநெஞ்சமிரங்குகின்றார்
மருளறியாப்பெருந்தேவேநின்றன்னடிவந்தடுத்தேன்
றெருளறியாச்சிறியேனாயினுஞ்செய்கசீரருளே. (உக)

அரும்பொருளேயென்னரசேயென்னாருயிர்க்காகவந்த
பெரும்பொருளேயருட்பேறேசிவானந்தம்பெற்றவர்பால்
வரும்பொருளேமுக்கண்மாமணியேநின்வழியருளாற்
றரும்பொருளேபொருளென்றுவந்தேனெனைத்தாங்கிக்கொள்ளே. (உஉ)

சரங்கார்முகந்தொடுத்தெய்வதுபோலென்றனையுலகத்
துரங்காரிருட்பெருவாதனையாலிடரூட்டுநெஞ்சக்
குரங்கான்மெலிந்துநின்னாமந்துணையெனக்கூறுகின்றே
னிரங்கார்தமக்குமிரங்குகின்றாயெற்கிரங்குகவே. (உ௩)

கூறுற்றகுற்றமுந்தானேமகிழ்விற்குணமெனவே
யாறுற்றசெஞ்சடையண்ணல்கொள்வானென்பராங்கதற்கு
வேறுற்றதோர்கரிவேண்டுங்கொலோவென்னுண்மேவியென்றும்
வீறுற்றபாதத்தவன்மிடற்றேகரிமேவியுமே. (உச)

சூற்படுமேகநிறத்தோனுநான்முகத்தோனுமென்னைப்
போற்படும்பாடுநல்லோர்சொலக்கேட்கும்பொழுதுமனம்
வேற்படும்புண்ணிற்கலங்கியந்தோநம்விடையவன்பூங்
காற்படுந்தூளிநம்மேற்படுமோவொருகாலென்னுமே. (உ௫)

வாளேய்நெடுங்கண்ணியெம்பெருமாட்டிவருமலர்த்
தாளேவருந்தமணிக்கூடற்பாணன்றனக்கடிமை
யாளேயெனவிறகேற்றுவிற்றோய்நின்னருள்கிடைக்கு
நாளேநன்னாளந்நாட்காயிரந்தெண்டனுன்செய்வனே. (உ௬)

அடுத்தார்தமையென்றுமேலோர்விடார்களவர்க்குப்பிச்சை
யெடுத்தாயினுமிடுவார்களென்பாரதற்கேற்கச்சொற்பூத்
தொடுத்தாரொருவர்க்குக்கச்சூரிலேபிச்சைச்சோறெடுத்துக்
கொடுத்தாய்நின்பேரருளென்சொல்லுகேனெண்குணக்குன்றமே. (உ௭)

நாடிநின்றேநினைநான்கேட்டுக்கொள்வதுநண்ணும்பத்துக்
கோடியன்றேயொருகோடியினூற்றொருகூறுமன்றே
தேடிநின்றேபுதைப்பொருந்தருவர்நின்சீர்நினைந்துட்
பாடியந்தோமனம்வாடிநின்றேன்முகம்பார்த்தருளே. (உ௮)

தாயாகினுஞ்சற்றுநேரந்தரிப்பணந்தந்தையைநாம்
வாயாரவாழ்த்தினும்வையினுந்தன்னிடைவந்திதுநீ
யீயாயெனிலருள்வானென்றுனையடுத்தேனுமையா
ணேயாமனமிரங்காயாவென்னெண்ணநெறிப்படவே. (உ௯)

நடும்பாட்டைநாவலன்வாய்த்திருப்பாட்டைநயந்திட்டநீ
குடும்பாட்டைமேற்கொண்டவென்றமிழ்ப்பாட்டையுங்கொண்டெனுள்ளத்
திடும்பாட்டைநீக்கிலையென்னினுந்துன்பத்திழுக்குற்றுநான்
படும்பாட்டையாயினும்பார்த்திரங்காயெம்பரஞ்சுடரே. (௩0)

எட்டாலுங்கேளயலென்பாரைநான்சிரித்தென்னைவெட்டிப்
போட்டாலும்வேறிடங்கேளேனென்னுணைப்புறம்விடுத்துக்
கேட்டாலுமென்னையுடையானிடஞ்சென்றுகேட்பனென்றே
நீட்டாலும்வாயுரைப்பாட்டாலுஞ்சொல்லிநிறுத்துவனே. (௩க)

சீர்க்கின்றகூடலிற்பாணனுக்காட்படச்சென்றவந்நாள்
வேர்க்கின்றவெம்மணலென்றலைமேல்வைக்குமெல்லடிக்குப்
பேர்க்கின்றதோறுமுறுத்தியதோவெனப்பேசியெண்ணிப்
பார்க்கின்றதோறுமென்கண்ணேயென்னுள்ளம்பதைக்கின்றதே. (௩உ)

நீயேயென்றந்தையருளுடையாயெனைநேர்ந்துபெற்ற
தாயேநின்பாலிடத்தெம்பெருமாட்டியித்தன்மையினு
ஞாயேன்சிறிதுங்குணமிலனாயினுநானுமுங்கள்
சேயேயெனைப்புறம்விட்டாலுலகஞ்சிரித்திடுமே. (௩௩)

தெருளும்பொருளுநின்சீரருளேயெனத்தேர்ந்தபின்யான்
மருளும்புவனத்தொருவரையேனுமதித்ததுண்டோ
வெருளும்புவியிற்றுயராற்கலங்கிவெதும்புகின்றே
னிருளுங்கருமணிகண்டாவறிந்துமிரங்கிலையே. (௩௪)

பெண்ணுன்மயங்குமெளியேனையாளப்பெருங்கருணை
யண்ணுநின்றுள்ளமிரங்காதவண்ணமறிந்துகொண்டேன்
கண்ணுருலகிலென்றுன்பமெல்லாம்வெளிகாணிலிந்த
மண்ணுபிலத்தொடுவிண்ணுடுங்கொள்ளைவழங்குமென்றே. (௩௫)

நெறிகொண்டநின்னடித்தாமரைக்காட்படுநின்றவென்னைக்
குறிகொண்டவாழ்க்கைத்துயராம்பெரியகொடுங்கலிப்பேய்
முறிகொண்டலைக்கவழக்கோவளர்த்தமுடக்கிழநாய்
வெறிகொண்டதேனும்விடத்துணியாரிவ்வியனிலத்தே. (௩௬)

மதியாமலாரையுநானிறுமாந்துமகிழ்கின்றதெம்
பதியாமுனதுதிருவருட்சீருரம்பற்றியன்றோ
வெதியார்படினுமிடர்ப்பட்டலையவிவ்வேழைக்கென்ன
விதியாவினிப்படமாட்டேனருள்செய்விடையவனே. (௩௭)

கற்கோட்டைநெஞ்சருந்தம்பாலடுத்தவர்கட்குச்சும்மாச்
சொற்கோட்டையாயினுங்கட்டுவர்நின்னைத்துணிந்தடுத்தே
னற்கோட்டைநெஞ்சுடையேனுக்கிரங்கிலையன்றலவா
நெற்கோட்டையீந்தவனீயல்லையோமுக்கணின்மலனே. (௩௮)

ஆதிக்கமாயைமனத்தேன்கவலையடுத்தடுத்து
வாதிக்கநொந்துவருந்துகின்றேனின்வழக்கமெண்ணிச்
சோதிக்கவென்னைத்தொடங்கேலருளத்தொடங்குகண்டாய்
போதிக்கவல்லநற்சேயுமையோடென்னுட்புக்கவனே. (௩௯)

பிறைமுடித்தாண்டொருபெண்முடித்தோர்பிள்ளைப்பேர்முடித்த
நிறைமுடித்தாண்டவஞ்செய்வேணிசெய்திடநித்தமன்றின்
மறைமுடித்தாண்டவஞ்செய்வோயென்பாலருள்வைத்தெளியேன்
குறைமுடித்தாண்டுகொளென்னேபலமுறைகூறுவதே. (௪O)

நடங்கொண்டபொன்னடிநீழலினுன்வந்துநண்ணுமட்டுந்
திடங்கொண்டநின்புகழல்லாற்பிறர்புகழ்செப்பவையேல்
விடங்கொண்டகண்டத்தருட்குன்றமேயிமவெற்புடையா
ளிடங்கொண்டதெய்வத்தனிமுதலேயெம்மிறையவனே. (௪௧)

விழிக்கஞ்சனந்தருமின்னார்தம்வாழ்க்கையில்வீழ்ந்தயலோர்
மொழிக்கஞ்சியுள்ளம்பொறுதுநின்னுமமொழிந்தெளியேன்
குழிக்கஞ்சிபோன் * மயங்கின்றேனருளக்குறித்திலையேற்
பழிக்கஞ்சிநோயின்னுமென்பழிக்கஞ்சப்படுமுனக்கே. (௪௨)

* மயங்குகின்றே னெனற்பாலது - மயங்கின்றேனென விகாரமாயிற்று.

சேல்வைக்குங்கண்ணுமைபாகாநின்சித்தந்திருவருளென்
பால்வைக்குமேலிடரெல்லாமெனைவிட்டப்பாலடக்கக்
கால்வைக்குமேநற்சுகவாழ்வென்மீதினிற்கண்வைக்குமே
மால்வைக்குமாயைகண்மண்வைக்குமேதங்கள்வாய்தனிலே. (சு௩)

ஒருமாதுபெற்றமகன்பொருட்டாகவுவந்துமுன்னம்
வருமாமனுகிவழக்குரைத்தோயென்வழக்குரைத்தற்
கிருமாநிலத்ததுபோல்வேடங்கட்டவிருத்திகொலோ
திருமால்வணங்கும்பதத்தவயானுன்சிறுவனன்றே. (சுச)

முன்னஞ்சமுண்டமிடற்றரசேநின்முழுக்கருணை
யின்னஞ்சுகம்பெறவுண்டுமுன்பாலன்பண்டந்திலதாற்
கன்னஞ்சமோகட்டைவன்னெஞ்சமோவெட்டிக்காய்நெஞ்சமோ
வென்னெஞ்சமென்னெஞ்சமோதெரியேனிதற்கென்செய்வதே. (சுரு)

வானம்விடாதுறுகாற்போலென்றன்னைவளைந்துகொண்ட
மானம்விடாதிதற்கென்செய்குவேனின்னைவந்தடுத்தே
னூனம்விடாதுழலுயேன்பிழையையுளங் * கொண்டிடேன்
ஞானம்விடாதநடத்தோய்நின்றண்ணருணல்குகவே. (சுசு)

நாயுஞ்செயாதநடையுடையேனுக்குநாணமுமுண்
ணேயுஞ்செய்ாநின்றவன்மிடிநீக்கிநன்ஞேன்பளித்தாய்
பேயுஞ்செயாதகொடுந்தவத்தாற்பெற்றபிள்ளைக்குநற்
றாயுஞ்செயாளிந்தநன்றிகண்டாய்செஞ்சடையவனே. (சுஎ)

உருவத்திலேசிறியேனுகியூகத்திலொன்றுமின்றித்
தெருவத்திலேசிறுகால்வீசியாடச்சென்றவந்தப்
பருவத்திலேநல்லறிவளித்தேயுனைப்பாடச்செய்தா
யருவத்திலேயுருவானேய்நின்றண்ணளியார்க்குளதே. (சுஅ)

மானெழுந்தாடுங்கரத்தோய்நின்சாந்தமனத்திற்சினந்
தானெழுந்தாலுமெழுகவென்றேயென்றளர்வையெல்லா
மூனெழுந்தார்க்கநின்பாலுரைப்பேனன்றியூர்க்குரைக்க
நானெழுந்தாலுமென்னுவெழுமோமொழிநல்கிடவே. (சுகூ)

வனமெழுந்தாடுஞ்சடையோய்நின்சித்தமகிழ்தலன்றிச்
சினமெழுந்தாலுமெழுகவென்றேயென்சிறுமையைநின்
முனமெழுந்தாற்றுவதல்லாற்பிறர்க்குமொழிந்திடவென்
மனமெழுந்தாலுமென்வாயெழுமோவுள்ளவாறிதுவே. (எ௦)

சிற்பரமேயெஞ்சிவமேதிருவருட்சீர்மிகுந்த
கற்பகமேயுனைச்சார்ந்தோர்க்களிக்குநின்கைவழக்க
மற்பமன்றேபலவண்டங்களினடங்காததென்றே
நற்பரஞானிகள்வாசகத்தாற்கண்டுநாடினனே. (எக)

* கொண்டிடேல் என முன்னிலையெதிர்மறையேவன்முற்றாகக்கொள்க.

வருஞ் † செல்லுணீர்மறுத்தாலுங்கருணைமறாதவெங்கட்
பெருஞ்செல்வமேயெஞ்சிவமேநினைத்தொழப்பெற்றுமிங்கே
தருஞ்செல்லரிக்குமரம்போற்சிறுமைத்தளர்நடையா
லருஞ்செல்லன்மூழ்கிநிற்கின்றேனிதுநின்னருட்கழகே. (ருஉ)

கருமுகநீக்கியபாணனுக்கேகனகங்கொடுக்கத்
திருமுகஞ்சேரற்களித்தோயென்றுனைத்தெரிந்தடுத்தென்
னொருமுகம்பார்த்தருளென்கின்றவேழைக்குதவிலையே
‡ லுருமுகவார்க்கும்விடையோயெவர்மற்றுதவுவரோ. (ருங)

மருப்பாவனத்துற்றமாணிக்குமன்னன்மனமறிந்தோர்
திருப்பாசுரஞ்செய்துபொற்கிழியீந்தநின்சீர்நினைந்தே
விருப்பாநினையடுத்தேனெனக்கீந்திடவேயின்றென்னை
கருப்பாநின்சித்தந்திருப்பாயென்மீதுகறைக்கண்டனே. (ருச)

பீழையைமேவுமிவ்வாழ்க்கையிலேமனம்பேதுற்றவிவ்
வேழையைநீவிடலாமோவடிமைக்கிரங்குகண்டாய்
* மாழையைப்போன்முன்னர்த்தாங்கொண்டுவைத்துவளர்த்தவிள
வாழையைத்தாம்பின்னர்நீர்விடலின்றிமறப்பதுண்டே. (ருரு)

கருத்தறியாச்சிறியேன்படுந்துன்பக்கலக்கமெல்லா
முருத்தறியாமைபொறுத்தருளீபவருன்னையன்றித்
திருத்தறியார்பிறரன்றேமென்கன்றின்சிறுமையொன்று
மெருத்தறியாதுநற்சேதாவறியுமிரங்குகவே. (ருசு)

வான்வேண்டிக்கொண்டமருந்தோர்முக்கண்கொண்டவள்ளலுன்னை
நான்வேண்டிக்கொண்டதுநின்னடியார்க்குநகைதருமீ
தேன்வேண்டிக்கொண்டனையென்பாரிதற்கின்னுமேனிரங்காய்
தான்வேண்டிக்கொண்டவடிமைக்குக்கூழிடத்தாழ்ப்பதுண்டே. (ருஎ)

பையுரைத்தாடும்பணிப்புயத்தோய்தமைப்பாடுகின்றோ
ருய்யுரைத்தாவுள்ளதில்லதென்றில்லதையுள்ளதென்றே
பொய்யுரைத்தாலுந்தருவார்பிறரதுபோலன்றிநான்
மெய்யுரைத்தாலுமிரங்காமைநின்னருண்மெய்க்கழகே. (ருஅ)

மடல்வற்றினாலுமணம்வற்றறாதமலரொனவென்
னுடல்வற்றினாலுமென்னுள்வற்றுமோதுயருள்ளவெல்லா
மடல்வற்றுறாதநின்றருட்கன்றியீங்கயலார்க்குரையேன்
கடல்வற்றினாலுங்கருணைவற்றாதமுக்கண்ணவனே. (ருகூ)

எள்ளிருக்கின்றதற்கேனுஞ்சிறிதிடமின்றியென்பான்
முள்ளிருக்கின்றதுபோலுற்றதுன்பமுயக்கமெல்லாம்
வெள்ளிருக்கின்றவர்தாமுங்கண்டாரொனின்மேவியென்ற
னுள்ளிருக்கின்றநின்றருட்கோதலென்னெம்முடையவனே. (சுO)

† செல்-எ-து, மேகம். ‡ உரும்-எது, இடி * மாழை-எ-து, பொன்.

† பொன்கின்றபூத்தசடையாயிவ்வேழைக்குன்பொன்னருளாம்
நன்கின்றநீதரல்வேண்டுமெந்தோதுயர்நண்ணியென்னைத்
தின்கின்றதேகொடும்பாம்பையும்பாலுணச்செய்துகொலா
ரென்கின்றஞாலமிழுக்குரையாதெற்கிரங்கிடினே. (சுக)

வாய்மூடிக்கொல்பவர்போலேயென்னுள்ளத்தைவன்றுயராம்
பேய்மூடிக்கொண்டதென்செய்கேன்முகத்திற்பீறங்குகையைச்
சேய்மூடிக்கொண்டுநிற்பார்க்கழக்கண்டுந்திகழ்முலையைத்
தாய்மூடிக்கொள்ளுவதுண்டோவருளுகசங்கரனே. (சுஉ)

கோள்வேண்டுமேழைமனத்தினைவேறுற்றுக்கொட்டக்கொள்ளித்
தேள்வேண்டுமோசுடத்தீவேண்டுமோவதைசெய்திடவோர்
வாள்வேண்டுமோகொடுந்துன்பேயதிலெண்மடங்குகண்டா
யாள்வேண்டுமேலென்னையாள்வேண்டுமென்னுளஞ்ரொழித்தே. (சுங)

விடையிலையோவதன்மேலேறியென்முன்விரைந்துவரப்
படையிலையோதுயரெல்லாந்துணிக்கப்பதங்கொளருட்
கொடையிலையோவென்குறைதீரநல்கக்குலவுமென்றாய்
புடையிலையோவென்றனக்காகப்பேசவெம்புண்ணியனே. (சுச)

நறையுளதேமலர்க்கொன்றைகொண்டாடியநற்சடைமேற்
பிறையுளதேகங்கைப்பெண்ணுளதேபிறங்குங்கழுத்திற்
கறையுளதேயருளெங்குளதேயிக்கடையவனேன்
குறையுளதேயென்றரற்றவுஞ்சற்றுங்குறித்திலதே. (சுரு)

சினத்தாலுங்காமத்தினாலுமென்றன்னைத்திகைப்பிக்குமிம்
மனத்தாலுறுந்துயர்போதாமையென்றுமதித்துச்சுற்று
மினத்தாலும்வாழ்க்கையிடும்பையினாலுமிளைக்கவைத்தா
யனத்தான்புகழும்பதத்தோயிதுநின்னருட்கழகே. (சுசு)

புல்லளவாயினுமீயார்தம்வாயிற்புகுந்துபுகழ்ச்
சொல்லளவாநின்றிரப்போரிரக்கநற்சொன்னங்களைக்
* கல்லளவாத்தருகின்றோர்தம்பாலுங்கருதிச்சென்றோர்
நெல்லளவாயினுங்கேளேனின்பாலன்றிநின்மலனே. (சுஎ)

பிறைசூழ்ந்தவேணிமுடிக்கனியேயெம்பெருஞ்செல்வமே
கறைசூழ்ந்தகண்டத்தெங்கற்பகமேநுதற்கட்கரும்பே
மறைசூழ்ந்தமன்றொளிர்மாமணியேயென்மனமுழுதுங்
குறைசூழ்ந்துகொண்டதென்செய்கேனகற்றக்குறித்தருளே. (சுஅ)

கண்கட்டியாடும்பருவத்திலேமுலைகண்டவொரு
பெண்கட்டியாளநினைக்கின்றவோர்சிறுபிள்ளையைப்போ
லெண்கட்டியானுன்னருள்விழைந்தேன்சிவனேயென்னெஞ்சம்
புண்கட்டியாயலைக்கின்றதுமண்கட்டிப்போலுமிர்ந்தே. (சுகூ)

† பொன்கின்றபூத்தசடை-எ-து, கொன்றை பூத்தசடை. * கல் - எ-து, மலை.

மெய்விட்டவஞ்சகநெஞ்சாற்படுந்துயர்வெந்நெருப்பின்
னெய்விட்டவாறிந்தவாழ்க்கையின்வாதனைநேரிட்டதாற்
பொய்விட்டநெஞ்சுறும்பொற்பதத்தையவிப்பொய்யனைநீ
கைவிட்டிடநினையேலருள்வாய்கருணைக்கடலே. (எ0)

அருட்கடலேயக்கடலமுதேயவ்வமுதத்துற்ற
தெருட்சுவையேயச்சுவைப்பயனேமறைச்சென்னிநின்ற
பொருட்பதமேயப்பதத்தரசேநின்புகழ்நினையா
விருட்குணமாயைமனத்தேனையுமுவந்தேன்றுகொள்ளே. (எக)

அண்டங்கண்டானுமளந்தானுங்காண்டாற்கரியவநின்
கண்டங்கண்டார்க்குஞ்சடைமேற்குறைந்தகலைமதியின்
றுண்டங்கண்டார்க்கும்பயமுளதோவெனச்சூழ்ந்தடைந்தேன்
றெண்டன்கண்டாள்பலதெண்டன்கண்டாய்நின்றுணையடிக்கே. (எஉ)

தேட்டக்கண்டேர்மொழிப்பாகாவுலகிற்சிலர்குரங்கை
யாட்டக்கண்டேனன்றியக்குரங்காலவராடச்சற்றுங்
கேட்டுக்கண்டேனிலைநானேழைநெஞ்சக்கிழக்குரங்கால்
வேட்டுக்கொண்டாடுகின்றேனிதுசான்றவியப்புடைத்தே. (எங)

போகங்கொண்டார்த்தவருளாரமுதப்புணர்முலையைப்
பாகங்கொண்டார்த்தபரம்பொருளேநின்பதநினையா
வேகங்கொண்டார்த்தமனத்தாலிவ்வேழைமெலிந்துமிகச்
சோகங்கொண்டார்த்துநிற்கின்றேனருளத்தொடங்குகவே. (எச)

இன்றலவேநெடுநாளாகவேழைக்கெதிர்த்ததுன்ப
மொன்றலவேபலவெண்ணிலவேயுற்றுரைத்தயன்
மன்றலவேபிறர்நன்றலவேயெனவந்தகயக்
கன்றலவேபசுங்கன்றடியேன்றனைக்காத்தருளே. (எரு)

படிபட்டமாயையின்பாற்பட்டசாலப்பரப்பிற்பட்டே
மிடிபட்டவாழ்க்கையின்மேற்பட்டதுன்பவிசாரத்தினு
லடிபட்டநானுனக்காட்பட்டுமின்னுமலைதனன்றே
பிடிபட்டநேரிடைப்பெண்பட்டபாகப்பெருந்தகையே. (எசு)

உடையாயென்விண்ணப்பமொன்றுண்டுகேட்டருளுன்னடிச்சீர்
தடையாதுமின்றிப்புகல்வதல்லாலிச்சகத்திடைநா
னடையாற்சிறுமைகொண்டந்தோபிறரைநவின்றவர்பா
லடையாமையுநெஞ்சுடையாமையுந்தந்தருளுகவே. (எஎ)

தஞ்சமென்றேநின்றநாயேன்குறையைத்தவிருனக்கோர்
பஞ்சமின்றேயுலகெல்லாநின்சீரருட்யாங்குக்கண்டா
யெஞ்சநின்றேற்குனையல்லாற்றுணைபிறிதில்லையிது
வஞ்சமன்றேநின்பதங்காண்கமுக்கண்மணிச்சுடரே. (எஅ)

பொறுத்தாலுநான்செயுங்குற்றங்கள்யாவும்பொருதெனைநீ
யொறுத்தாலுநன்றினிக்கைவிட்டிடேலென்னுடையவனீ
வெறுத்தாலும்வேறிலைவேற்றோரிடத்தைவிரும்பியென்னை
யறுத்தாலுஞ்சென்றிடமாட்டேனெனக்குன்னருளிடமே. (௭௯)

சேல்வருமோர்விழிமங்கைபங்காவென்சிறுமைகண்டான்
மேல்வருநீவரத்தாழ்த்தாலுமுன்றன்வியனருட்பொற்
கால்வருமேயிளங்கன்றழத்தாய்ப்பசுக்காணின்மடிப்
பால்வருமேமுலைப்பால்வருமேபெற்றபாவைக்குமே. (௮௦)

வன்பட்டகூடலில்வான்பட்டவையைவரம்பிட்டநின்
பொன்பட்டமேனியிற்புண்பட்டபோதிற்புவிநடையாந்
துன்பட்டவீரரந்தோவாதவூரர்தந்தூயநெஞ்ச
மென்பட்டதோவின்றுகேட்டவென்னெஞ்சமிடிப்பட்டதே. (௮௧)

நீர்சிந்துங்கண்ணுநிலைசிந்துநெஞ்சமுநீணடையிற்
சீர்சிந்துவாழ்க்கையுந்தேன்சிந்திவாடியசெம்மலர்போற்
கூர்சிந்துபுந்தியுங்கொண்டுநின்றேனுட்குறைசிந்தும்வா
ரோர்சிந்துபோலருணேர்சிந்தனேத்துமுடையவனே. (௮௨)

கொடிகொண்டவேற்றினடையுஞ்சடையுங்குளிர்முகமுந்
துடிகொண்டகையும்பொடிகொண்டமேனியுந்தோலுடையும்
பிடிகொண்டபாகமும்பேரருணோக்கமும்பெய்கழலுங்
குடிகொண்டநன்மனமென்மனம்போற்குறைகொள்வதின்றே. (௮௩)

விதிக்கும்பதிக்கும்பதிநதியார்மதிவேணிப்பதி
திதிக்கும்பதிக்கும்பதிமேற்கதிக்குந்திகழ்பதிவான்
றுதிக்கும்பதிக்கும்பதியோங்குமாபதிசொற்கடந்த
பதிக்கும்பதிசிற்பதியெம்பதிநம்பசுபதியே. (௮௪)

எனையடைந்தாழ்த்தியதுன்பச்சுமையையிறக்கெனவே
நினையடைந்தேனடிநாயேற்கருளநினைதிகண்டாய்
வினையடைந்தேமனவீறுடைந்தேநின்றுவேற்றவர்தம்
மனையடைந்தேமனம்வாடலுன்றொண்டர்மரபல்லவே. (௮௫)

வனம்போய்வருவதுபோலேவன்செல்வர்மனையிடத்தே
தினம்போய்வருமிச்சிறியேன்சிறுமைச்செயலதுபோய்ச்
சினம்போய்க்கொடும்பகைக்காமமும்போய்நின்றிறநிகழ்த்தா
வினம்போய்க்கொடியமனம்போயிருப்பதென்றென்னரசே. (௮௬)

பெற்றாளனையநின்குற்றேவல்செய்துபிழைக்கறியாச்
சிற்றாள்பலரினுஞ்சிற்றாளெனுமென்சிறுமைதவிர்த்
துற்றாள்கிலையெனின்மற்றார்துணையெனக்குன்கமலப்
பொற்றாளருட்புகழ்க்கற்றாய்ந்துபாடப்புரிந்தருளே. (௮௭)

அந்நாணையா துநஞ்சேற்றயன்மான் மனையாதியர்தம்
பொன்னுணைக்காத்தவருட்கடலேபிறர்புன்மனைபோ
யிந்நாணையாவகையென்னுணைக்காத்தருளேழைக்குநின்
றன்னுணையயநின்றுளாணைவேறுசரணில்லையே. (அஅ)

பவசாதனம்பெறும்பாதகர்மேவுமிப்பாரிடைநற்
சிவசாதனத்தரையேன்படைத்தாயத்திருவிலிக
ளவசாதனங்களைக்கண்டிவருள்ளமழுங்கவென்றே
கவசாதனமெனக்கைம்மானுரியைக்களித்தவனே. (அகூ)

நான்செய்தபுண்ணியமியாதோசிவாயநமவெனவே
வூன்செய்தநாவைக்கொண்டோதப்பெற்றேனெனையொப்பவரார்
வான்செய்தநான்முகத்தோனுந்திருநெடுமாலுமற்றைத்
தேன்செய்தகற்பகத்தேவனுந்தேவருஞ்செய்யரிதே. (கூO)

உற்றாயினுமறைக்கோர்வரியோயெனையுற்றுப்பெற்ற
நற்றாயினுமினியானேநின்னல்லருணல்கிலென்னை
விற்றாயினுங்கொளவேண்டுகின்றேனென்விருப்பறிந்துஞ்
சற்றாயினுமிரங்காதோநின்சித்தந்தயாநிதியே. (கூக)

வான்மாறினுமொழிமாறாதமாறன்மனங்களிக்கக்
கான்மாறியாடியகற்பகமேநின்கருணையென்மேற்
றான்மாறினும்விட்டுநான்மாறிடேன்பெற்றதாய்க்குமுலைப்
பான்மாறினும்பிள்ளைபான்மாறுமோவதிற்பல்விடுமே. (கூஉ)

அன்பரிதாமனத்தேழையன்யான்றுயரான்மெலிந்தே
யின்பரிதாமிச்சிறுநடைவாழ்க்கையிலேங்குகின்றே
னென்பரிதாபநிலைநீயறிந்துமிரங்கிலையேல்
வன்பரிதாந்தண்ணருட்கடலேயென்னைவாழ்வெனக்கே. (கூங)

மைகண்டகண்டமுமான்கண்டவாமமும்வைத்தருளிற்
கைகண்டநீயெங்குங்கண்கண்டதெய்வங்கருதிலென்றே
மெய்கண்டநான்மற்றைப்பொய்கண்டதெய்வங்கண்மேவுவனோ
நெய்கண்டவூண்விட்டுநீர்கண்டகூழுக்கென்னேடுவதே. (கூச)

வேணிக்குமேலொரு * வேணிவைத்தோய்முன்விரும்பியொரு
மாணிக்குவேதம்வகுத்தேகிழியொன்றுவாங்கித்தந்த
காணிக்குத்தானரைக்காணிமட்டாயினுங்காட்டுகண்டாய்
பாணிக்குமோதரும்பாணிவந்தேற்றவர்பான்மைகண்டே. (கூரு)

மறைக்கொளித்தாய்நெடுமாற்கொளித்தாய்திசைமாமுகங்கொ
ளிறைக்கொளித்தாயிங்கதிலோர்பழியிலையென்றன்மனக்
குறைக்கொளித்தாலுங்குறைதீர்த்தருளெனக்கூவிடுமென்
முறைக்கொளித்தாலுமரசேநின்பாற்பழிமூடிடுமே. (கூசு)

* வேணி - ஏ - து, நதி.

முன்மழைவேண்டும்பருவப்பயிர்வெயின்மூடிக்கெட்ட
பின்மழைபெய்ந்தென்னேபேறுகண்டாயந்தப்பெற்றியைப்போ
னின்மழைபோற்கொடையின்றன்றிமூப்புநெருங்கியக்காற்
பொன்மழைபெய்ந்தென்னேகன்மழைபெய்ந்தென்னேபூரணனே. (கூஎ)

நீளாதரவுகொண்டென்குறையாவுநிகழ்த்தவுநீ
கேளாதவனெனவாளாவிருக்கின்றகேண்மையென்னே
சூளாதமுக்கண்மணியேவிடேலுனைச்சூழ்ந்தவென்னை
யாளாகக்கொள்ளினுமீளாநரசத்தழுத்தினுமே. (கூஅ)

வளங்கன்றுமாவனத்தின்றதன்றாயின்றிவாடுகின்ற
விளங்கன்றுபோற்சிறவாழ்க்கையினின்னருளின்றியந்தோ
வுளங்கன்றுநான்செய்வதென்னேகருணையுதவுகண்டாய்
களங்கன்றுபேருட்காரென்றுகூறுங்களத்தவனே. (கூகூ)

காற்றுக்குமேல்விட்டபஞ்சாகியுள்ளங்கறங்கச்சென்றே
சோற்றுக்குமேற்கதியின்றெனவேற்றகந்தோறுமுண்போர்
தூற்றுக்குமேற்பெருந்தூறிலையாங்கென்றுயரமெனுஞ்
சேற்றுக்குமேற்பெருஞ்சேறிலைகாணருட்செவ்வண்ணனே. (க00)

அந்தோதுயரிற்சுழன்றோடுமேழையவலநெஞ்சஞ்
சிந்தோதநீரிற்சுழியோவிளையவர்செங்கைதொட்ட
பந்தோசிறுவர்தம்பம்பரமோகொட்டும்பஞ்சுகொலோ
வந்தோடுழலுந்துரும்போவென்சொல்வதெம்மாமணியே. (க0க)

பொன்வசமோபெண்களின்வசமோகடற்பூவசமோ
மின்வசமோவெனுமெய்வசமோவென்விதிவசமோ
தன்வசமோமலந்தன்வசமோவென்கவலைநெஞ்ச
மென்வசமோவில்லைநின்வசநானெனையேன்றுகொள்ளே. (க0உ)

நானடங்காதொருநாட்செயுங்குற்றநடக்கையெல்லாம்
வானடங்காதிந்தமண்ணடங்காதுமதிக்குமண்டந்
தானடங்காதெங்குந்தானடங்காதெனத்தானறிந்து
மானடங்காட்டுமெணியெனையாண்டதுமாவியப்பே. (க0௩)

பாம்பாயினுமுணப்பால்கொடுப்பார்வளர்ப்பார்மனைப்பால்
வேம்பாயினும்வெட்டல்செய்யார்வளர்த்தவெருட்சிக்கடாத்
தாம்பாயினுமொருதாம்பாயினுங்கொடுதாம்பின்செல்வார்
தேம்பாய்மலர்க்குழற்காம்பாகவென்னையுஞ்சேர்த்துக்கொள்ளே. (க0௪)

நெருப்புக்குமுட்டையுங்கூழ்க்கிடவுப்பையுநேடிச்செல்வோர்
பருப்புக்குநெய்யுமொண்பாலுக்குவாழைப்பழமுங்கொள்ளத்
தெருப்புக்குவாரொடுசேர்க்கிலென்னுமிச்சிறுநடையா
மிருப்புக்குவேண்டியநான்சிவயோகர்பின்னெய்திலென்னே. (க0௫)

எம்மதமாட்டுமெரியோவென்பாவியிடும்பைநெஞ்சை
மும்மதயானையின்காலிட்டிடறினுமொய்யனற்கண்
விம்மதமாக்கினும்வெட்டினுநன்றுன்னைவிட்டவதன்
வெம்மதநீங்கவென்சம்மதங்காணெவ்விதத்தினுமே. (க0சு)

கல்லாதபுந்தியுமந்தோநின்றுளிற்கணப்பொழுது
நில்லாதநெஞ்சமும்பொல்லாதமாயையுநீண்மதமுங்
கொல்லாமற்கொன்றெனைத்தின்னுமற்றின்கின்றகொள்கையையிங்
கெல்லாமறிந்தவுனக்கெளியேனின்றிசைப்பதென்னே. (க0எ)

தெவ்வழியோமனத்தேனுக்குன்றன்றிருவுளந்தா
னிவ்வழியேகென்றிருவழிக்குள்விட்டதெவ்வழியோ
வவ்வழியேவழிசெவ்வழிபாடநின்றாடுகின்றோய்
வெவ்வழிநீர்ப்புணைக்கென்னேசெயலிவ்வியனிலத்தே. (க0அ)

கண்ணூர்நுதற்செங்கரும்பேநின்பொன்னருட்கான்மலரை
யெண்ணாதபாவியிங்கேன்பிறந்தேனினையேத்துகின்றோ
ருண்ணாதவூணுமுடுக்காவுடையுமுணர்ச்சிசற்று
நண்ணாதநெஞ்சமுங்கொண்டுலகோர்முன்னர்நாணுறவே. (க0கூ)

அம்மாவயிற்றெரிக்காற்றேனெனநின்றழுதலறச்
சும்மாவச்சேய்முகந்தாய்பார்த்திருக்கத்துணிவள்கொலோ
விம்மாநிலத்தமுதேதற்றாயினுந்தந்திடுவெண்முக்க
ணெம்மானிங்கேழையழுமுகம்பார்த்துமிரங்கிலையே. (கக0)

ஓயாக்கருணைமுகிலேநுதற்கண்ணொருவநின்பாற்
றோயாக்கொடியவெங்நெஞ்சத்தைநான்சுடுசொல்லைச்சொல்லி
வாயாற்சுடினுந்தெரிந்திலதேயினிவல்வடவைத்
தீயாற்சுடினுமென்னந்தோசிறிதுந்தெரிவதன்றே. (ககக)

மாலறியான்மலரோனறியான்மகவானறியான்
காலறியான்மற்றைவானோர்கனவினுங்கண்டறியார்
சேலறியாவிழிமங்கைபங்காநின்றிறத்தைமறை
நாலறியாவெனிஞானறிவேனெனநாணுடைத்தே. (கக௨)

ஆறிட்டவேணியுமாட்டிட்டபாதமுமம்மையொரு
கூறிட்டபாகமுங்கோத்திட்டகொன்றையுங்கோலமிக்க
நீறிட்டமேனியுநான்காணுநாளென்னிலைத்தலைமே
லேறிட்டகைகள்கண்டாணவப்பேய்களிறங்கிடுமே. (ககந)

அல்லுண்டகண்டத்தரசேநின்சீர்த்தியமுதமுண்டோர்
கொல்லுண்டதேவர்தங்கோளுண்டசீரெனுங்கூழுண்பரோ
* சொல்லுண்டவாயினர்புல்லுண்பரோவின்சுவைக்கண்டெனுங்
கல்லுண்டபேர்கருங்கல்லுண்பரோவிக்கடலிடத்தே. (ககச)

* சொல் - எ - து, நெல்.

காரேயெனுமணிகண்டத்தினன்பொற்கழலையன்றி
யாரேதுணைநமக்கேழைநெஞ்சேயிங்கிருந்துகழு
நீரேயெனினுந்தரற்கஞ்சுவாரொடுநீயுஞ்சென்று
சேரேலிறுகச்சிவாயநமவெனச்சிந்தைசெய்யே. (௧௧௫)

வலைப்பட்டமானெனவாட்பட்டகண்ணியர்மையலென்னும்
புலைப்பட்டபேய்க்குவிலைப்பட்டநான்மதிபோய்ப்புலம்ப
விலைப்பட்டவிம்மனமந்தோவிவ்வேழைக்கென்றெங்கிருந்து
தலைப்பட்டதோவிதற்கென்செய்குவேன்முக்கட்சங்கரனே. (௧௧௬)

குருந்தாமென்சோகமனமானபிள்ளைக்குரங்குக்கிங்கே
வருந்தாணவமென்னுமானிடப்பேயொன்றுமாத்திரமோ
பெருந்தாமதமென்றிராக்கதப்பேயும்பிடித்ததெந்தாய்
திருந்தாவதன்குதிப்பென்றொருவாய்கொண்டுசெப்பரிதே. (௧௧௭)

பெண்மணியாகப்பெருமணியேயருட்பெற்றிகொண்ட
விண்மணியானவிழிமணியேயென்விருப்புறுநற்
கண்மணிநேர்கடவுண்மணியேயொருகான்மணியைத்
திண்மணிக்கூடலில்விற்றோங்குதெய்வசிகாமணியே. (௧௧௮)

அலையெழுத்துந்தெறுமைந்தெழித்தாலுன்னையர்ச்சிக்கின்றோர்
கலையெழுத்தும்புகழ்காலெழுத்திற்குக்கனிவிரக்க
மிலையெழுத்தும்பிறப்பீடெழுத்துங்கொண்டவெங்கள்புழுத்
தலையெழுத்துஞ்சரியாமோநுதற்கட்டனிமுதலே. (௧௧௯)

ஆட்சிகண்டார்க்குற்றதுன்பத்தைத்தான்கொண்டருளளிக்கு
மாட்சிகண்டாயெந்தைவள்ளற்குணமென்பர்மற்றதற்குக்
காட்சிகண்டேனிலையாயினுமுன்னருட்கண்டத்திலோர்
சாட்சிகண்டேன்களிகொண்டேன்கருணைத்தடங்கடலே. (௧௨௦)

கண்கொண்டநெற்றியுங்கார்கொண்டகண்டமுங்கற்பளிக்கும்
பெண்கொண்டபாகமுங்கண்டேன்முன்மாறன்பிரம்படியாற்
புண்கொண்டமேனிப்புறங்கண்டிலேனப்புறத்தைக்கண்டா
லொண்கொண்டகல்லுமுருகுமென்றோவிங்கொளித்தனையே. (௧௨௧)

வேய்க்குப்பொருமெழிற்றோளுடைத்தேவிவிளங்குமெங்க
டாய்க்குக்கனிந்தொருகூறளித்தோய்நின்றயவுமிந்த
நாய்க்குக்கிடைக்குமெனவொருசோதிடநல்கிலவர்
வாய்க்குப்பழத்தொடுசர்க்கரைவாங்கிவழங்குவனே. (௧௨௨)

காண்டத்தின்மேவுமுலகீரித்தேகங்கரும்பனைபோ
னீண்டத்திலென்னைநிலையலவேயிதுநிற்றல்பசும்
பாண்டத்தினீர்நிற்றலன்றோநமைநம்பசுபதிதா
ஞண்டத்திலென்னைகுறையோநம்மேற்குறையாயிரமே. (௧௨௩)

வேணிக்கணீர்வைத்ததேவேமதுரைவியன்றெருவின்
மாணிக்கம்விற்றசெம்மாணிக்கமேயெனைவாழ்வித்ததோ
ராணிப்பொன்னேதெள்ளமுதேநின்செய்யவடிமலர்க்குக்
காணிக்கையாக்கிக்கொண்டாள்வாயெனதுகருத்தினையே. (கஉச)

மாகலைவாணர்பிறன்பாலெமக்குமனைக்குங்கட்ட
நீகலைதாவொருமேகலைதாவுணநென்மலைதா
போகலையாவெனப்பின்றொடர்வாரவர்போன்மனனீ
யேகலையீகலரேகம்பவாணரிடஞ்செல்கவே. (கஉரு)

ஊர்தருவார்நல்லவூண்டருவாருடையுந்தருவார்
பார்தருவாருழற்கேர்தருவார்பொன்பணந்தருவார்
சோர்தருவாருள்ளறிவுகெடாமற்சுகிப்பதற்கிங்
கார்தருவாரம்மையார்தருபாகனையன்றிநெஞ்சே. (கஉசா)

பண்செய்தசொன்மங்கைபாகாவெண்பாற்கடற்பள்ளிகொண்டோன்
றிண்செய்தசக்கரங்கொள்வானருச்சனைசெய்திட்டநாள்
விண்செய்தநின்னருட்சேவடிமேற்படவேண்டியவன்
கண்செய்தநற்றவம்யாதோகருத்திற்கனிப்பரிதே. (கஉஎ)

மாப்பிட்டுநேர்ந்துண்வெந்தியைவாழ்வித்தவள்ளலுன்வெண்
காப்பிட்டுமேற்பலபாப்பிட்டமேனியைக்கண்டுதொழக்
கூப்பிட்டொனிற்கவந்திலைநாதனைக்கூடவில்லாள்
பூப்பிட்டகாலத்திற்கூப்பிட்டபோதினும்போவதுண்டே. (கஉஅ)

என்மேற்பிழையிலையானென்செய்கேனென்னிடத்திருந்தென்
சொன்மேற்கொளாதெனையின்மேற்றுரும்பெனச்சுற்றுநெஞ்சத்
தின்மேற்பிழையதுபுன்மேற்பனியெனச்செய்தொழிக்க
நின்மேற்பரம்விடைதன்மேற்கொண்டன்பர்முன்னிற்பவனே. (கஉகூ)

மைவிட்டிடாமணிகண்டாநின்றன்னைவழுத்துமென்னை
நெய்விட்டிடாவுண்டிபோலின்பிலான்மெய்ந்நெறியறியான்
பொய்விட்டிடான்வெம்புலைவிட்டிடான்மயற்போகமெலாங்
கைவிட்டிடானெனக்கைவிட்டிடேல்வந்துகாத்தருளே. (கரு0)

நல்லமுதஞ்சிவைதான்றரக்கொண்டுநின்னற்செவிக்குச்
சொல்லமுதந்தந்தவெங்கள்பிரான்வளஞ்சூழ்மயிலை
யில்லமுதந்திகழ்பெண்ணுகவென்பையெழுப்பியநாட்
சில்லமுதம்பெற்றதேவரைவானஞ்சிரித்ததன்றே. (கருக)

சொற்றுணைவேதியனென்னும்பதிகச்சுருதியைநின்
பொற்றுணைவார்கழற்கேற்றியப்பொன்னடிப்போதினையே
நற்றுணையாக்கரையேறியபுண்ணியநாவரசைக்
கற்றுணையாதிந்தக்கற்றுணையாமென்கடைநெஞ்சமே. (கருஉ)

சடையவரீமுன்றடுத்தாண்டநம்பிக்குச்சற்றெனினுங்
கடையவனேன்செயுங்கைம்மாறறிந்திலன்கால்வருந்தி
நடையுறநின்னைப்பரவைத்ன்பாங்கர்நடத்தியன்ப
ரிடைவருமுன்றனிரக்கத்தைத்தான்வெளியிட்டதற்கே. (௩௩௩)

திருவாதவூரெம்பெருமான்பொருட்டன்றுதென்னன்முன்னே
வெருவாதவைதிகப்பாய்பரிமேற்கொண்டுமேவிநின்ற
வொருவாதகோலத்தொருவாவக்கோலத்தையுள்குளிர்ந்தே
கருவாதநீங்கிடக்காட்டுகண்டாயென்கனவினிலே. (க௩௪)

சீர்தருநாவுக்கரையரைப்போலிச்சிறியனுமோர்
கார்தருமாயைச்சமணன்மனக்கருங்கல்லிற்கட்டிப்
பார்தருபாவக்கடலிடைவீழ்த்திடப்பட்டுழன்றே
யோர்தருமைந்தெழுத்தோதுகின்றேன்கரையேற்றரசே. (க௩௫)

தூக்கமுஞ்சோம்பலுந்துக்கமும்வாழ்க்கையைத்தொட்டுவரு
மேக்கமுநோயுமிடையூறுமற்றையிடரும்விட்ட
நீக்கமுநின்மலநெஞ்சமுஞ்சாந்தநிறைவுமரு
ளாக்கமுநின்பதத்தன்புந்தருகவருட்சிவமே. (க௩௬)

பொய்வந்தவாயும்புலைவந்தசெய்கையும்புன்மையெல்லாங்
கைவந்தநெஞ்சமுங்கண்டேனினிநற்கனிவுடன்யான்
மெய்வந்தவாயும்விதிவந்தசெய்கையும்வீறன்பினுற்
றைவந்தநெஞ்சமுங்காண்பதென்றேசெஞ்சடைக்கனியே. (க௩௭)

கங்கைகொண்டாய்மலர்வேணியிலேயருட்கண்ணிமலை
மங்கைகொண்டாயிடப்பாகத்திலேயையமற்றுமொரு
நங்கைகொண்டாலெங்குகொண்டருள்வாயென்றுநண்ணுமன்பர்
சங்கைகொண்டாலதற்கென்சொல்லுவாய்முக்கட்சங்கரனே. (க௩௮)

வாட்கொண்டகண்ணியர்மாயாவிகாரவலைபிழைத்துன்
றாட்கொண்டநீழலிற்சார்ந்திடுமோவென்றனக்கருள்வாய்
கீட்கொண்டகோவணப்பேரழகாவெனைக்கேதமற
வாட்கொண்டநீயின்றுவாளாவிருப்பதழகல்லவே. (க௩௯)

வீட்டுத்தலைவநின்றாள்வணங்கார்தம்விரிதலைசும்
மாட்டுத்தலைபட்டிமாட்டுத்தலைபுன்வராகத்தலை
யாட்டுத்தலைவெறிநாய்த்தலைபாம்பினவெந்தலைகற்
பூட்டுத்தலைவெம்புலைத்தலைநாற்றப்புழுத்தலையே. (க௪0)

தெண்ணீர்முடியனைக்காணார்தங்கண்ணிருள்சேர்குருட்டுக்
கண்ணீர்சொரிந்தகண்காசக்கண்புன்முலைக்கண்ணகக்கண்
புண்ணீரொழுகுங்கொடுங்கண்பொறாமைக்கண்புன்கண்வன்கண்
மண்ணீர்மையுற்றகண்மாமணிநீத்தகண்மாலைக்கண்ணே. (க௪க)

கண்ணுதலான்புகழ்கேளார்செவிபொய்க்கதையொலியு
மண்ணுறமாதருமைந்தருங்கூடியழுமொலியுந்
துண்ணெனுந்தீச்சொல்லொலியுமவ்வந்தகன்றூதர்கண்மொத்
துண்ணுறவாவென்றுரப்பொலியும்புகுமூன்செவியே. (கசஉ)

மணிகொண்டகண்டனைவாழ்த்தார்தம்வாய்த்தெருமண்ணுண்டவாய்
பிணிகொண்டவாய்விடப்பிச்சுண்டவாய்வரும்பேச்சற்றவாய்
துணிகொண்டவாயனற்சூடுண்டவாய்மலஞ்சோர்ந்திழிவாய்
குணிகொண்டவுப்பிலிக்கூழுண்டவாயெனக்கூறுபவே. (கசங)

சகமிலையேயென்றுடையானையெண்ணலர்தங்கணெஞ்சஞ்
சுகமிலையேயுணச்சோறிலையேகட்டத்தூசிலையே
யகமிலையேபொருளாவிலையேவள்ளலாரிலையே
யிகமிலையேயொன்றுமிங்கிலையேயென்றிரங்குநெஞ்சே. (கசச)

பொங்கரும்பேர்மூலமங்கைக்கிடந்தந்தபுத்தமுதே
செங்கரும்பேநறுந்தேனேமதுரச்செழுங்கனியே
திங்களுங்கங்கையுஞ்சேர்ந்தொளிர்வேணிச்சிவக்கொழுந்தே
யெங்களையாட்கொண்டுமென்னேதுயரிலிருத்துவதே. (கசரு)

வில்லைப்பொன்னுக்கரங்கொண்டோய்வன்றொண்டர்விரும்புறச்செங்
கல்லைப்பொன்னுக்கிக்கொடுத்தோய்நின்பாதங்கருத்தில்வையார்
புல்லைப்பொன்னுக்கொளும்புல்லர்கள்பாற்சென்றுபோன்னளிக்க
வல்லைப்பொன்னுர்புயவென்பாரிஃதென்சொல்வாணர்களே. (கசசு)

கூத்துடையாயென்னுடையாய்மூத்தேவருங்கூறுகின்ற
வேத்துடையாயன்பரேத்துடையாயென்றனெண்மைமொழிச்
சாத்துடையாய்நின்றனக்கேபரமெனைத்தாங்குதற்கோர்
வேத்துடையார்மற்றிலையருளீதென்றன்விண்ணப்பமே. (கசஎ)

வெப்பிலையேயெனுந்தண்விளக்கேமுக்கண்வித்தகநின்
னொப்பிலையேயெனுஞ்சீர்புகலார்புற்கையுண்ணுதற்கோ
ருப்பிலையேபொருளொன்றிலையேயென்றுழல்பவர்மேற்
றப்பிலையேயவர்புன்றலையேட்டிற்றவமிலையே. (கசஅ)

எனைப்பெற்றதாயினுமன்புடையாயெனக்கின்பநல்கு
முனைப்பெற்றவுள்ளத்தவர்மலர்ச்சேவடிக்கோங்குமன்பு
தனைப்பெற்றநன்மனந்தாம்பெற்றமேலவர்சார்பைப்பெற்றால்
வினைப்பெற்றவாழ்வின்மனைப்பெற்றம்போலமெலிவதின்றே. (கசகூ)

நிறைமதியாளர்புகழ்வோய்சடையுடைநீண்முடிமேற்
குறைமதிதானென்றுகொண்டனையேயக்குறிப்பெனவே
பொறைமதியேன்றன்குறைமதிதன்னையும்பொன்னடிக்கீ
ழுறைமதியாக்கொண்டருள்வாயுலகமுவப்புறவே. (கருo)

துடிவைத்தசெங்கையரசேநல்லூரினின்றாமலர்ப்பொன்
னடிவைத்தபோதெங்களப்பர்தஞ்சென்னியதுகுளிர்ந்தெப்
படிவைத்ததோவின்பமியானெனுந்தோறுமிப்பாவிக்குமால்
குடிவைத்தபுன்றலையொன்றேமனமுங்குளிர்கின்றதே. (கருக)

ஒருமுடிமேற்பிறைவைத்தோயரியயனெண்மறைதம்
பெருமுடிமேலுறவேண்டிவராதுணைப்பித்தனென்ற
மருமுடியூரன்முடிமேன்மறுப்பவும்வந்தவர்
திருமுடிமேலென்னவாசைகண்டாய்நின்றிருவடிக்கே. (கருஉ)

வேல்கொண்டகையுமுந்நூல்கொண்டமார்பமுமென்மலர்ப்பொற்
கால்கொண்டவொண்கழற்காட்சியும்பன்னிருகண்ணும்விடை
மேல்கொண்டசெஞ்சுடர்மேனியுஞ்சண்முகவீறுங்கண்டு
மால்கொண்டநெஞ்சமகிழ்வதெந்நாளென்கண்மாமணியே. (கருங)

விண்பூத்தகங்கையுமின்பூத்தவேணியுமென்முகமுங்
கண்பூத்தநெற்றியும்பெண்பூத்தபாகமுங்கார்மிடறுந்
தண்பூத்தபாதமும்பொன்பூத்தமேனியுஞ்சார்ந்துகண்டே
மண்பூத்தவாழ்க்கையைவிண்பூத்தபூவின்மதிப்பதென்றே. (கருச)

தண்மதியோவதன்றண்ணமுதோவெனச்சார்ந்திருணீத்
துண்மதியோர்க்கின்புதவுநின்பேரருளூற்றிடவே
யெண்மதியோடிச்சையெய்தாதலையுமென்னேழைமதி
பெண்மதியோவன்றிப்பேய்மதியோவென்னைபேசுவதே. (கருரு)

பிட்டுக்கும்வந்துமுன்மண்சுமந்தாயென்பர்பித்தனென்ற
திட்டுக்குஞ்சீரருள்செய்தளித்தாயென்பர்தீவிறகுக்
கட்டுக்கும்பொன்முடிகாட்டிநின்றாயென்பர்கண்டிடவென்
மட்டுக்கும்வஞ்சகத்தெய்வமென்கோமுக்கண்மாணிக்கமே. (கருசு)

மையிட்டகண்ணியர்பொய்யிட்டவாழ்வின்மதிமயங்கிக்
கையிட்டநானுமுன்மெய்யிட்டசீரருள்காண்குவனோ
பையிட்டபாம்பணியையிட்டமேனியும்பத்தருள்ள
மொய்யிட்டகாலுஞ்செவ்வையிட்டவேலுங்கொண்முன்னவனே. (கருஎ)

தவமேபுரியும்பருவமிலேன்பொய்ச்சகநடைக்க
ணவமேபுரியுமறிவிலியேனுக்கருளுமுண்டோ
வுவமேயமென்னப்படாதெங்குமாகியொளிரொளியாஞ்
சிவமேமுக்கண்ணுடைத்தேவேநின்சித்தந்தெரிந்திலனே. (கருஅ)

மட்டுண்டகொன்றைச்சடையரசேயன்றுவந்தியிட்ட
பிட்டுண்டபிச்சைப்பெருந்தகையேகொடும்பெண்மயலாற்
கட்டுண்டநான்சுகப்பட்டுண்டுவாழ்வனிக்கன்மனமாந்
திட்டுண்டபேய்த்தலைவெட்டுண்டநாளிலென்றீமையற்றே. (கருகூ)

ஆட்டுக்குக்காலெடுத்தாய்நினைப்பாடலராங்கியற்றும்
பாட்டுக்குப்பேரென்கொல்பண்ணென்கொனீட்டியபாட்டெழுது
மேட்டுக்குமையென்கொல்சேற்றிலுறங்கவிறங்குங்கடா
மாட்டுக்குவீடென்கொல்பஞ்சணையென்கொன்மதித்திடினே. (கசுo)

ஒப்பற்றமுக்கட்சுடரேநின்சீர்த்தியுறாதவெறுந்
துப்பற்றபாட்டிற்சுவையுளதோவ்தைச்சூழ்ந்துசுற்றுச்
செப்பற்றவாய்க்குத்திருவுளதோசிறிதேனுமுண்டே
லுப்பற்றபுன்கறியுண்டோர்தந்நாவுக்குவப்புளதே. (கசுக)

சேல்வருங்கண்ணியிடத்தோய்நின்சீர்த்தியைச்சேர்த்தியந்த
நால்வருஞ்செய்தமிழ்கேட்டுப்புறத்தினடக்கச்சற்றே
கால்வருமாயினுமின்புருவாகிக்கனிமனமப்
பால்வருமோவதன்பாற்பெண்களைவிட்டுப்பார்க்கினுமே. (கசுஉ)

கார்முகமாகப்பொற்கல்வளைத்தோயிக்கடையவனேன்
சோர்முகமாகநின்சீர்முகம்பார்த்துத்துவளுகின்றேன்
போர்முகமாகநின்றோரையுங்காத்தநின்பொன்னருளிப்
பார்முகமாகவென்னோர்முகம்பார்க்கப்பரிந்திலதே. (கசுங)

வான்வளர்த்தாயிந்தமண்வளர்த்தாயெங்குமன்னுயிர்க
டான்வளர்த்தாய்நின்றகையறியாவென்றனையரசே
யேன்வளர்த்தாய்கொடும்பாம்பையெல்லாந்தள்ளிலைவளர்த்தாய்
மான்வளர்த்தாய்கரத்தார்நினைப்போலவளர்ப்பவரே. (கசுச)

அற்கண்டமோங்குமரசேநின்றன்னடியார்மதுரச்
சொற்கண்டபோதுமென்புற்கண்டநெஞ்சந்துணிந்துநில்லா
திற்கண்டமெய்த்தவர்போலோடுகின்றதெறிந்ததுதீங்
கற்கண்டெனினுமக்கற்கண்டகாக்கைநிற்காதென்பரே. (கசுரு)

சொல்லுகின்றோர்க்கமுதம்போற்சுவைதருந்தொல்புகழோய்
வெல்லுகின்றோரின்றிச்சும்மாவலையுமென்வேடநெஞ்சம்
புல்லுகின்றோர்தமைக்கண்டாலென்னுங்கொல்புகல்வெறும்வாய்
மெல்லுகின்றோர்க்கொருநெல்லவல்வாய்க்கில்விடுவரன்றே. (கசுசு)

சீரிடுவார்பொருட்செல்வர்க்கலாமலித்தீனர்கட்கிங்
காரிடுவார்பிச்சையாயினும்பிச்சனசடனென்றே
பேரிடுவார்வம்புபேச்சிடுவாரிந்தப்பெற்றிகண்டும்
போரிடுவார்நினைப்போற்றுரென்னேமுக்கட்புண்ணியனே. (கசுஎ)

சேலுக்குநேர்விழிமங்கைபங்காவென்சிறுமதிதான்
மேலுக்குநெஞ்சையுட்காப்பதுபோனின்றுவெவ்விடய
மாலுக்குவாங்கிவழங்கவுந்தான்சம்மதித்ததுகாண்
பாலுக்குங்காவல்வெம்பூனைக்குத்தோழனென்பாரிதுவே. (கசுஅ)

இணையேதுமின்றியதேவேகனலினனிந்தெனுமுக்
கணையேகொளுஞ்செங்கரும்பேபிறவிக்கடல்கடத்தும்
புணையேதிருவருட்பூரணமேமெய்ப்புலமளிக்குந்
துணையேயென்றன்பந்தடைத்தாண்டுகொள்ளத்துணிந்தருளே. (கசுகூ)

நிலைகாட்டியாண்டநின்றாட்கன்பிலாதன்பினீண்டவன்போற்
புலைகாட்டியமனத்தேன்கொண்டவேடம்புனையிடைமேற்
கலைகாட்டிக்கட்டுமயிர்த்தலைகாட்டிப்புன்கந்தைசுற்றி
முலைகாட்டியாண்மகன்பெண்வேடங்காட்டுமுறைமையன்றே. (கஎ0)

விடநாகப்பூணணிமேலோயென்னெஞ்சம்விரிதல்விட்டென்
னுடனாகமெய்யன்புளூற்றாகநின்னருளூற்றிடுதற்
கிடனாகமெய்ந்நெறிக்கீடாகச்செய்குவதிங்குனக்கே
கடனாகநிற்பதுகண்டேன்பின்றுன்பொன்றுங்கண்டிலனே. (கஎக)

நயப்படுமோர்நின்னருளெனக்கின்றெனினும்மனமென்
வயப்படுமோதுயர்மண்படுமோநல்லவாழ்வையென்னாற்
செயப்படுமோகுணஞ்சீர்ப்படுமோபவஞ்சேரச்சற்றும்
பயப்படுமோமலம்பாழ்படுமோவெம்பசுபதியே. (கஎஉ)

சோபங்கண்டார்க்கருள்செய்வோய்மதிக்கன்றிச்சூழ்ந்திடுவெந்
தீபங்கண்டாலுமிருள்போமிவ்வேழைதியங்கும்பரி
தாபங்கண்டாயருள்செய்யாதென்குற்றந்தனைக்குறித்துக்
கோபங்கண்டாலுநன்றையாவென்றன்பக்கொதிப்பறுமே. (கஎங)

எல்லாமுடையவிறையவனேநினையேத்துகின்ற
நல்லார்தமக்கொருநாளேனும்பூசைநயந்தியற்றிச்
சொல்லாலவர்புகழ்சொல்லாதிவ்வண்ணந்துயர்வதற்கென்
கல்லாமையொன்றுமற்றில்லாமையொன்றிருகாரணமே. (கஎச)

பிறையாறுகொண்டசெவ்வேணிப்பிரான்பதப்பேறடைவான்
மறையாறுகாட்டுநின்றண்ணருளேயன்றிமாயையென்னு
நிறையாறுசூழுந்துரும்பாய்ச்சுழலுமென்னெஞ்சினுள்ள
குறையாறுதற்கிடம்வேறில்லைகாணிக்குவலயத்தே. (கஎரு)

மாலறியாதவனன்றேய்த்தெய்வவரதனுநின்
காலறியாதவனென்றாலக்காலையெக்காலையெமைப்
போலறியாதவர்காண்பார்முற்கண்டமெய்ப்புண்ணியர்தம்
பாலறியாதவனுனிதுகேட்டுணர்பாலனன்றே. (கஎசு)

ஒன்றேயென்னுருயிர்க்கோருறவேயெனக்கோரமுதே
நன்றேமுக்கண்ணுடைநாயகமேமிக்கநல்லகுணக்
குன்றேநிறையருட்கோவேயெனதுகுலதெய்வமே
மன்றேயொளிர்முழுமாணிக்கமேயெனைவாழ்விக்கவே. (கஎஎ)

தாழ்வேதுமின்றியகோவேயெனக்குத்தனித்தபெரு
வாழ்வேநுதற்கண்மணியேயென்னுள்ளமணிவிளக்கே
யேழ்வேலையென்னினும்போதாவிடும்பையிடுங்குடும்பப்
பாழ்வேதனைப்படமாட்டேனெனக்குன்பதமருளே. (கஎஅ)

வண்டுகொண்டார்நறுங்கொன்றையினுன்றன்மலரடிக்குத்
தொண்டுகொண்டார்தஞ்சுகத்துக்கும்வாழ்க்கைச்சுழலிற்றள்ளும்
பெண்டுகொண்டார்தந்துயருக்குமொப்பின்றுபேசிலென்றே
கண்டுகொண்டாயினிநெஞ்சேநின்னுள்ளக்கருத்தெதுவே. (கஎசு)

மலங்கவிழ்ந்தார்மனம்வான்கவிழ்ந்தாலுமவ்வான்புறமாஞ்
சலங்கவிழ்ந்தாலுஞ்சலியாதென்புன்மனந்தான்கடலிற்
கலங்கவிழ்ந்தார்மனம்போலேசலிப்பதுகாண்குடும்ப
விலங்கவிழ்ந்தாலன்றிநில்லாதென்செய்வல்விடையவனே. (கஅ0)

மைகொடுத்தார்நெடுங்கண்மலைமானுக்குவாய்ந்தொருபான்
மெய்கொடுத்தாய்தவர்விட்டவெம்மானுக்குமேவுறவோர்
கைகொடுத்தாய்மயற்கண்ணியில்வீழ்ந்துட்கலங்குறுமென்
கொய்கொடுத்தாழ்மனமானுக்குக்காலைக்கொடுத்தருளே. (கஅக)

உடம்பாருறுமயிர்க்காற்புழைதோறனலூட்டிவெய்ய
விடம்பாச்சியவிருப்பூசிகள்பாய்ச்சினுமெத்தென்னுமித்
தடம்பார்சிறுநடைத்துன்பஞ்செய்வேதனைத்தாங்கரிதென்
கடம்பாநற்பன்னிருகண்ணுவினியெனைக்காத்தருளே. (கஅஉ)

மண்ணுலுமண்ணுற்றவாழ்க்கையினுலுமவ்வாழ்க்கைக்குற்ற
பெண்ணுலுநொந்துவந்தாரையெலாமருட்பேறெனுமுக்
கண்ணுலும்பார்த்தைந்துகையாலுமீயுங்கணபதிநின்
பண்ணுலும்மாமறைமேற்றுளேயென்னுட்பதித்தருளே. (கஅங)

வாளுளமாயன்வாழ்வாளவன்றியிம்மண்முழுதுந்
தாளுளநின்பதந்தாழ்பவர்தாழ்கவொண்சங்கையங்கை
மாளுளமெய்யிடந்தந்தோய்துன்பற்றமனமதொன்றே
நாளுளவெண்ணிநின்றுளேத்துகின்றனனல்குகவே. (கஅச)

ஈடறியாதமுக்கண்ணுநின்னன்பரியல்பினையிந்
நாடறியாதுன்னருளன்றியூண்சுவைநாவையன்றி
மேடறியாதுநற்பாட்டைக்கற்றோரன்றிமேற்சுமந்த
வேடறியாதவையேனறியாவென்றிகழ்வரன்றே. (கஅரு)

சூடுண்டபூனைக்குச்சோறுண்டவாய்பின்றுடிப்பதன்றி
யூடுண்டபாலிட்டவூண்கண்டதேனுமுணத்துணியா
தீடுண்டவென்மனமந்தோதுயரிலிடியுண்டுமிவ்
வீடுண்டவாழ்க்கையின்வீழுண்டதாலெம்விடையவனே. (கஅசு)

கரங்காட்டிமையிட்டகண்காட்டியென்பெருங்கன்மநெஞ்சக்
குரங்காட்டிச்சேய்மையினிற்கின்றமாதனைக்கொண்டுகெல்லா
ருரங்காட்டிக்கோலொன்றுடனீட்டிக்காட்டியுரப்பியொரு
மரங்காட்டியகுரங்காட்டுகின்றோரென்மணிகண்டனே. (கஅஎ)

களங்கனிபோன்மணிகண்டாநின்பொற்கழல்காணற்கென்சிற்
றுளங்கனியாதுநின்சீர்கேட்கினுமன்புறவுருகா
வளங்கனிகாமஞ்சிறவாமற்சிற்றில்வகுத்தழலு
மிளங்கனிபோனின்றதென்செய்குவேனெம்மிறையவனே. (கஅஅ)

மாமத்திறற்சுழல்வெண்டயிர்போன்றுமடந்தையர்தங்
காமத்திறற்சுழலென்றனெஞ்சோவுன்றன்காலையன்பாந்
தாமத்திறற்றளையிட்டநெஞ்சோவித்தகையிரண்டி
னுமத்திறற்பித்தனென்போய்நினக்கெதுநல்லநெஞ்சே. (கஅகூ)

ஏற்றிலிட்டார்கொடிகொண்டோய்விளக்கினையேற்றபெருங்
காற்றிலிட்டாலுமிடலாநென்மாவைக்கலித்திடுநீ
ராற்றிலிட்டாலும்பெறலாமுட்காலையடுங்குடும்பச்
சேற்றிலிட்டாற்பின்பரிதாமெவர்க்குந்திருப்புவதே. (ககூ0)

தேரோங்குகாழிக்கண்மெய்ஞ்ஞானப்பாலுண்டசெம்மணியைச்
சீரோங்குமுத்துச்சிவிகையின்மேல்வைத்ததேவவுன்றன்
பேரோங்குமைந்தெழுத்தன்றோபடைப்பப்பிரமனுக்கு
மேரோங்குகாப்பைத்திருநெடுமாலுக்குமீந்ததுவே. (ககூக)

வேதனையாமதுசூதனையாவென்றுவேதனையாற்
போதனையாநின்றுனைக்கூவுமேழையைப்போதனைகேள்
வாதனையாதிங்குவாதனையாவென்றுன்வாய்மலரச்
சோதனையாயினுஞ்சோதனையாசிற்சுகப்பொருளே. (ககூஉ)

இன்பற்றவிச்சிறுவாழ்க்கையிலேவெயிலேறவெம்பு
மென்பற்றபுன்புழுப்போற்றளரேழையெனினுமிவ
னன்பற்றபாவியென்றந்தோவெனைவிடிலையவையத்
தென்பற்றதாகமற்றில்லைகண்டாயெனையேன்றுகொள்ளே. (ககூஙு)

களங்கொண்டவோர்மணிக்காட்சியுமுச்சுடர்க்கண்ணருளும்
வளங்கொண்டதெய்வத்திருமுகமாட்சியும்வாய்ந்தபரி
மளங்கொண்டகொன்றைச்சடையும்பொற்சேவடிமாண்புமொன்ற
வுளங்கொண்டபுண்ணியரன்றோவென்றன்னையுடையவரே. (ககூச)

காவிக்குநேர்மணிகண்டாவண்டார்குழற்கற்பருளுந்
தேவிக்குவாமங்கொடுத்தோய்நின்மாமலர்ச்சேவடிப்பால்
சேவிக்குஞ்சேவகஞ்செய்வோரையாயினுஞ்சேவிக்கவிப்
பாவிக்குவாய்க்கிலென்ஞ்விக்குநீண்டபயனதுவே. (ககூரு)

கொங்கிட்டகொன்றைச்சடையுநின்றோர்பசுங்கோமளப்பெண்
பங்கிட்டவெண்டிருநீற்றொளிமேனியும்பார்த்திடிற்பின்
னிங்கிட்டமாயையையெங்கிட்டவாவென்றிசைப்பினும்போய்ச்
சங்கிட்டவோசையிற்பொங்கிட்டவாய்கொடுதாண்டிடுமே. (ககூசு)

வெம்பெருமானுக்குக்கைகொடுத்தாண்டமிகுங்கருணை
யெம்பெருமானுக்குவிண்ணப்பந்தேவரிளம்பிடியார்
தம்பெருமானுக்குஞ்சார்மலைமானுக்குஞ்சாற்றுமைங்கைச்
செம்பெருமானுக்குமெந்தாய்க்குநான்பணிசெய்யச்செய்யே. (ககூஎ)

சாற்றவனேகநன்றாவுள்ளதாயினுஞ்சாற்றரிதாம்
வீற்றவனேவெள்ளிவெற்பவனேயருண்மேவியவெண்
ணீற்றவனேநின்னருடரவேண்டுநெடுமுடிவெள்
ளேற்றவனேபலியேற்றவனேயன்பர்க்கேற்றவனே. (ககூஅ)

பதியேசரணம்பரமேசரணம்பரம்பரமாந்
திதியேசரணஞ்சிவமேசரணஞ்சிவமுணர்ந்தோர்
கதியேசரணமென்கண்ணேசரணமுக்கட்கருணா
நிதியேசரணஞ்சரணமென்பான்மெய்ந்நிலையருளே. (ககூகூ)

என்னுறவேயென்குருவேயென்னுள்ளத்தெழுமின்பமே
யென்னுயிரேயென்றன்பேநிலைபெற்றவென்செல்வமே
யென்னறிவேயென்றன்வாழ்வேயென்வாழ்வுக்கிடுமுதலே
யென்னரசேயென்குலதெய்வமேயெனையேன்றுகொள்ளே. (உ00)

கான்போலிருண்டவிவ்வஞ்சகவாழ்க்கையிற்கன்னெஞ்சமே
மான்போற்குதித்துக்கொண்டோடேலமுதமதிவிளங்கும்
வான்போற்குளிர்ந்தசிவானந்தவாழ்க்கையின்வாழ்வுறச்செந்
தேன்போலினிக்குஞ்சிவாயநமவெனச்சிந்தைசெய்யே. (உ0க)

வேதனென்கோதறவேண்டுமென்கோவெனவிண்ணப்பஞ்செய்
பாதனென்கோகடற்பள்ளிகொண்டான்றொழும்பண்பனென்கோ
நாதனென்கோபரநாதனென்கோவெங்கணம்பிக்குநற்
றூதனென்கோவவன்றோழனென்கோநினைத்தூய்மணியே. (உ0உ)

இயங்காமனமுங்கயங்காநிலையுமிகபரத்தே
மயங்காவறிவுந்தியங்காநெறியுமகிழ்ந்தருள்வாய்
வயங்காநிலத்தின்முயங்காவுயர்தவர்வாழ்த்துகின்ற
புயங்காதுதித்தற்குயங்காதவருட்புகுந்தவனே. (உ0ங)

சிவசங்கராசிவயோகாசிவகதிச்சீரளிக்குஞ்
சிவசம்புவேசிவலோகாசிவானந்தச்செல்வநல்குஞ்
சிவசுந்தராசிவபோகாசிவாகமச்செந்நெறிசொல்
சிவபுங்கவாசிவஞானிகள்வாழ்த்துஞ்சிவகுருவே. (உ0ச)

மதிதத்துவாந்தவருட்சிவமேசின்மயசிவமே
துதிசித்தெலாம்வல்லமெய்ச்சிவமேசிற்சுகசிவமே
சதிநித்தசுத்தச்சிவமேவிளங்குமுக்கட்சிவமே
பதிசச்சிதாநந்தசிற்சிவமேயெம்பரசிவமே. (உ0ரு)

கடும்புலவேடர்களோரைவரிந்தியக்கள்வரைவர்
கொடுங்கரணத்துட்டர்நால்வர்கள்வன்மலக்கோளரைவ
ரடும்படைகோடிகொண்டுற்றார்மற்றேழையன்யானொருவ
னிடும்படையாதுமிலேன்வெல்வதெங்ஙனிறையவனே. (உ0சு)

இடைக்கொடிவாமத்திறைவாமெய்ஞ்ஞானிகட்கின்பநல்கும்
விடைக்கொடியேந்தும்வலத்தாய்நின்னும்வியந்துரையார்
கடைக்கொடிபோலக்கதறுகின்றார்பொய்க்கதையவர்தாம்
புடைக்கொடியாலன்றிப்புல்லாலெயிலைப்புனைபவரே. (உ0எ)

உருமத்திலேபட்டபுன்புழுப்போலிவ்வுலகநடைக்
கருமத்திலேபட்டவென்மனந்தானின்கழலடையுந்
தருமத்திலேபட்டதின்றேயென்றெண்ணுந்தனையுமந்தோ
மருமத்திலேபட்டவாளியைப்போன்றுவருத்துவதே. (உ0அ)

என்னிறைவாவிமையோரிறைவாமறையின்முடிபின்
முன்னிறைவாமலமின்னிறைவாமலர்முண்டகத்தோன்
றன்னிறைவாதிதித்தானிறைவாமெய்த்தபோதனருண்
மன்னிறைவாயிங்குவாவென்றெனக்குநல்வாழ்வருளே. (உ0கு)

போற்றியென்னாவித்துணையேயென்னன்பிற்புகுஞ்சிவமே
போற்றியென்வாழ்வின்பயனேயென்னின்பப்புதுநறவே
போற்றியென்கண்ணுண்மணியேயென்னுள்ளம்புனையணியே
போற்றியென்னேர்பெருந்தேவேகருணைபுரிந்தருளே. (உக0)

கஞ்சத்திலேர்முகமஞ்சத்திலேர்நடைக்கன்னியர்கண்
ணஞ்சத்திலேயவர்வஞ்சத்திலேபட்டுநாணுறும்புன்
னெஞ்சத்திலேயதன்றஞ்சத்திலேமுக்கணித்தவென்போற்
பஞ்சத்திலேபிரபஞ்சத்திலேயுழைப்பாரெவரே. (உகக)

நான்முகத்தோனுந்திருநெடுமாலுமெய்ஞ்ஞானமென்னும்
வான்முகக்கண்கொண்டுகாணுமற்றம்முருமாறியுநின்
றேன்முகக்கொன்றைமுடியுஞ்செந்தாமரைச்சேவடியு
மூன்முகக்கண்கொண்டுதேடிநின்றார்சற்றுணர்விலரே. (உகஉ)

இருவர்க்கரியப்படாதெழுந்தோங்கிநின்றேத்துகின்றோர்
கருவர்க்கநீக்குங்கருணைவெற்பேயென்கவலையையிங்
கொருவர்க்குநான்சொலமாட்டேனவரென்னுடையவரோ
வெருவற்கவென்றெனையாண்டருளீதென்றன்விண்ணப்பமே. (உகங)

ஒண்ணுதலேழைமடவார்தம்வாழ்க்கையினுற்றிடினும்
பண்ணுதலேர்மறையாயிரஞ்சூழுநின்பாதத்தையா
னெண்ணுதலேதொழிலாகச்செய்வித்தென்னையேன்றுகொள்வாய்
கண்ணுதலேகருணைக்கடலேயென்கருத்திதுவே. (உகச)

தளைக்கின்றமாயக்குடும்பப்பெருந்துயர்தாங்கியந்தோ
விளைக்கின்றவேழைக்கிரங்குகண்டாய்சிறிதேயிறகு
முளைக்கின்றபோதறுப்பார்போனின்னும்மொழிந்திடுங்கால்
வளைக்கின்றமாயைக்கிங்காற்றேன்முக்கண்ணுடைமாமணியே. (உகரு)

மஞ்சடைவானிறத்தோனயன்முதல்வானவர்க்கா
நஞ்சடையாளமிடமிடற்றேய்கங்கைநண்ணுகின்ற
செஞ்சடையாய்நின்றிருப்பெயராகச்சிறந்தவெழுத்
தஞ்சடையார்கண்கள்பஞ்சடையாமுன்னறிவிலரோ. (உகசு)

இலங்காபுரத்தனிராக்கதர்மன்னனிராவணன்முன்
மலங்காநின்வெள்ளிமலைக்கீழிருந்துவருந்திநின்சீர்
கலங்காமற்பாடக்கேட்டேயிரங்கிக்கருணைசெய்த
நலங்காணின்றன்மையின்றென்னளவியாண்டையினண்ணியதே. (உகஎ)

உடையென்றும்பூணென்றுமூணென்றுநாடியுழன்றிடமிந்
நடையென்றுஞ்சஞ்சலஞ்சஞ்சலங்காணிதினுஞ்சிறியேன்
புடையென்றுவெய்யலுறும்புழுப்போன்றுபுழுங்குகின்றேன்
விடையென்றுமாலறங்கொண்டோயென்றுன்பம்விலக்குவவே. (உகஅ)

அருளரசேயருட்குன்றேமன்றுமெருளிறையே
யருளமுதேயருட்பேறேநிறைந்தவருட்கடலே
யருளணியேயருட்கண்ணேவிண்ணேங்குமருளொளியே
யருளறமேயருட்பண்பேமுக்கண்கொளருட்சிவமே. (உகக)

நிலையறியாதகுடும்பத்துயரொன்னுநீத்தத்திலே
தலையறியாதுவிழுந்தேனையாண்டருடானளிப்பா
யலையறியாதகடலேமுக்கண்கொண்டவாரமுதே
விலையறியாதமணியேவிடேலிதென்விண்ணப்பமே. (உஉ0)

மெய்யகத்தேகணப்போதும்விடாதுவிரும்புகின்றோர்
கையகத்தேநின்றொளிர்கனியேநுதற்கட்கரும்பே
வையகத்தேநினையல்லாமனற்றுணைமற்றிலையிப்
பொய்யகத்தேன்செயுந்தீங்காயிரமும்பொறுத்தருளே. (உஉக)

முலைக்கலங்காரமிடமடவார்மயன்மூடியவர்
தலைக்கலங்காரமலர்சூடுவார்நின்றனைவழுத்தா
ரிலைக்கலங்காரவ்வியமன்வந்தாலென்னிசைப்பர்வெள்ளி
மலைக்கலங்காரமணியேமுக்கண்கொண்டமாமருந்தே. (உஉஉ)

புரிகின்றவீட்டகம்போந்தடிபட்டுப்புறங்கடையிற்
றிரிகின்றநாய்க்குஞ்சிரிப்பாமென்பாவிச்சிறுபிழைப்பைச்
சொரிகின்றபுண்ணிற்கனலிடல்போலெனுந்தோறுநெஞ்ச
மெரிகின்றதென்செய்குவேன்பிறைவார்சடையென்னமுதே. (உஉ௩)

மனக்கேதமாற்றுமருந்தேபொதுவொளிர்மாணிக்கமே
கனக்கேதுறவென்கருத்தறியாமற்கழறுகின்ற
தனக்கேளர்பாற்சென்றடியேனிதயந்தளர்வதெல்லா
நினக்கேதெரிந்ததெனக்கேயருளநினைந்தருளே. (உஉச)

மோகங்கலந்தமனத்தேன்றுயரங்கண்முற்றுமற்றுத்
தேகங்கலந்தபவந்தீர்க்குநின்பதஞ்சிந்திக்குநாட்
போகங்கலந்ததிருநாண்மலையற்புதப்பசுந்தேன்
பாகங்கலந்தசெம்பாலேநுதற்கட்பரஞ்சுடரே. (உஉ௫)

கோலொன்றுகண்டவிறைமகன்வாழ்வினுங்கோடிபங்கு
மேலொன்றுகண்டனநெஞ்சேயென்சொல்லைவிரும்பினியஞ்
சேலொன்றுகண்டமணியான்வரைப்பசுந்தேன்கலந்த
பாலொன்றுகண்டகண்கொண்டுயர்வாழ்வுபலித்ததுவே. (உஉ௬)

புலையளவோவெனுநெஞ்சகனேன்றுயர்ப்போகமெட்டு
மலையளவோவிந்தமண்ணளவோவந்தவானளவோ
வலையளவோவன்றுமன்றுணின்றோங்குமருமருந்தே
யிலையளவோவெனுந்தேவேயறிந்துமிரங்கிலையே. (உஉ௭)

கல்லென்றுவல்லென்றுமின்னார்புளகக்கனதனத்தைச்
சொல்லென்றுசொல்லுமுன்சொல்லுமந்தோநின்றுணையடிக்கண்
ணில்லென்றுபல்லநிகழ்த்தினுமென்மனநிற்பதன்றே
யல்லென்றுவெல்களங்கொண்டோயென்செய்வதறிந்திலனே. (உஉஅ)

கள்ளாடியகொன்றைச்செஞ்சடையோய்நற்கனகமன்றி
னுள்ளாடியமலர்ச்சேவடியோயிவ்வுலகியற்க
ணௌள்ளாடியசெக்கிடைப்படல்போற்றுன்பிடையிளைத்துத்
தள்ளாடியநடைகொண்டேற்குநன்னடைதந்தருளே. (உஉ௯)

மருக்காமலர்க்குழன்மின்னார்மயற்சண்டமாருதத்தா
லிருக்காதுழலுமென்னேழைநெஞ்சேயிவ்விடும்பையிலே
செருக்காதுருகிச்சிவாயநமவெனத்தேர்ந்தன்பிற
லொருக்காலுரைக்கிற்பெருக்காகுநல்லின்பமோங்கிடுமே. (உ௩0)

மதிக்கண்ணிவேணிப்பெருந்தகையேநின்மலரடிக்குத்
துதிக்கண்ணிசூட்டுமெய்த்தொண்டரிற்சேர்ந்துநின்றூயவொற்றிப்
பதிக்கண்ணிநின்னைப்பணிந்தேத்தியுள்ளம்பரவசமாக்
கதிக்கண்ணிவாழும்படியருளாயென்கருத்திதுவே. (உ௩க)

இரையேற்றுதுன்பக்குடும்பவிகாரவிருட்கடலிற்
புரையேற்றுநெஞ்சம்புலர்ந்துநின்றேனைப்பொருட்படுத்திக்
கரையேற்றவேண்டுமென்கண்ணேபவத்தைக்கடிமருந்தே
திரையேற்றுசெஞ்சடைத்தேவேயமரர்சிகாமணியே. (உ௩உ)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவருண்முறையீடு.

முற்றிற்று.

உ

சிவமயம்.

சிவகணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# வடிவுடைமாணிக்கமாலை.



காப்பு.

கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

சீர்கொண்டவொற்றிப்பதியுடையானிடஞ்சேர்ந்தமணி
வார்கொண்டகொங்கைவடிவாம்பிகைதன்மலரடிக்குத்
தார்கொண்டசெந்தமிழ்ப்பாமாலைசாத்தத்தமியனுக்கே
யேர்கொண்டநல்லருளீயுங்குணாலயவேரம்பனே.

---

கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

கடலமுதேசெங்கரும்பேயருட்கற்பகக்கனியே
யுடலுயிரேயுயிர்க்குள்ளுணர்வேயுணர்வுள்ளொளியே
யடல்விடையாரொற்றியாரிடங்கொண்டவருமருந்தே
மடலவிழ்ஞானமலரேவடிவுடைமாணிக்கமே. (க)

அணியேயணிபெறுமொற்றித்தியாகர்தம்மன்புறுசற்
குணியேயெம்வாழ்க்கைக்குலதெய்வமேமலைக்கோன்றவமே
பணியேன்பிழைபொறுத்தாட்கொண்டதெய்வப்பதிகொள்சிந்தா
மணியேயென்கண்ணுண்மணியேவடிவுடைமாணிக்கமே. (உ)

மானேர்விழிமலைமானேயெம்மானிடம்வாழ்மயிலே
கானேரளகப்பசுங்குயிலேயருட்கட்கரும்பே
தேனேதிருவொற்றிமாநகர்வாழுஞ்சிவசத்தியே
வானேகருணைவடிவேவடிவுடைமாணிக்கமே. (ந)

பொருளேயடியர்புகலிடமேயொற்றிப்பூரணன்றண்
ணருளேயெம்மாருயிர்க்காந்துணையேவிண்ணவர்புகழுந்
தெருளேமெய்ஞ்ஞானத்தெளிவேமறைமுடிச்செம்பொருளே
மருளேதநீக்குமொளியேவடிவுடைமாணிக்கமே. (ச)

திருமாலுநான் முகத்தேவுமுன் ஞண்மிகத்தேடிமனத்
தருமாலுழக்கவனலுருவாகியமர்ந்தருளும்
பெருமானெம்மானொற்றிப்பெம்மான்கைம்மான்கொளும்பித்தன்மலை
மருமானிடங்கொள்பெண்மானேவடிவுடைமாணிக்கமே. (ரு)

உன்னேரருட்டெய்வங்காணேன்மனத்துமுறைக்கப்படாப்
பொன்னேயப்பொன்னற்புதவொளியேமலர்ப்பொன்வணங்கு
மன்னேயெம்மாருயிர்க்கோருயிரேயொற்றியம்பதிவாழ்
மன்னேரிடம்வளர்மின்னேவடிவுடைமாணிக்கமே. (சா)

கண்ணேயக்கண்ணின்மணியேமணியிற்கலந்தொளிசெய்
விண்ணேவியனொற்றியூரண்ணல்வாமத்தில்வீற்றிருக்கும்
பெண்ணேமலைபெறும்பெண்மணியேதெய்வப்பெண்ணமுதே
மண்ணேயநீத்தவர்வாழ்வேவடிவுடைமாணிக்கமே. (எ)

மலையான்றவஞ்செய்துபெற்றமுத்தேயொற்றிவாழ்கனகச்
சிலையான்மணக்கமணக்குந்தெய்வீகத்திருமலரே
யலையான்மலிகடற்பள்ளிகொண்டான்றெழுமாரமுதே
வலையானருமைமகளேவடிவுடைமாணிக்கமே. (அ)

காமம்படர்நெஞ்சுடையோர்கனவினுங்காணப்படாச்
சேமம்படர்செல்வப்பொன்னேமந்திரச்செழுங்கனியே
தாமம்படரொற்றியூர்வாழ்பவளத்தனிமலையின்
வாமம்படர்பைங்கொடியேவடிவுடைமாணிக்கமே. (கூ)

கோடாவருட்குணக்குன்றேசிவத்திற்குறிப்பிலரை
நாடாதவானந்தநட்பேமெய்யன்பர்நயக்குமின்பே
பீடார்திருவொற்றிப்பெம்மானிடஞ்செய்பெருந்தவமே
வாடாமணிமலர்க்கொம்பேவடிவுடைமாணிக்கமே. (கo)

நாலேயென்னுமறையந்தங்களின்னமுநாடியென்னைப்
போலேவருந்தவெளியொளியாயொற்றிப்புண்ணியர்தம்
பாலேயிருந்தநினைத்தங்கையாகப்பகரப்பெற்ற
மாலேதவத்திற்பெரியோன்வடிவுடைமாணிக்கமே. (கக)

கங்கைகொண்டோனொற்றியூரண்ணல்வாமங்கலந்தருள்செய்
நங்கையெல்லாவுலகுந்தந்தநின்னையந்நாரணற்குத்
தங்கையென்கோவன்றித்தாயனென்கோசொற்றழைக்குமலை
மங்கையெங்கோமளமானேவடிவுடைமாணிக்கமே. (கஉ)

சோலையிட்டார்வயலூரொற்றிவைத்துத்தன்றொண்டரன்பின்
வேலையிட்டாற்செயும்பித்தனைமெய்யிடைமேவுகரித்
தோலையிட்டாடுந்தொழிலுடையோனைத்துணிந்துமுன்ஞண்
மாலையிட்டாயிஃதென்னேவடிவுடைமாணிக்கமே. (கங)

தனையாள்பவரின்றிநிற்கும்பரமன்றனியருளாய்
வினையாளுயிர்மலநீக்கிமெய்வீட்டின்விடுத்திடுநீ
யெனையாளருளொற்றியூர்வாழவன்றன்னிடத்துமொரு
மனையாளெனநின்றதென்னேவடிவுடைமாணிக்கமே. (கச)

பின்னீன்றபிள்ளையின்மேலார்வந்தாய்க்கெனப்பேசுவர்நீ
முன்னீன்றபிள்ளையின்மேலாசையுள்ளவர்மொய்யசுரர்
சொன்னீன்றபோர்க்கிளம்பிள்ளையையேவக்கொடுத்ததென்னே
மன்னீன்றவொற்றிமயிலேவடிவுடைமாணிக்கமே. (கரு)

பையாளுமல்குற்சுரர்மடவார்கள்பலருமிச்
செய்யாளும்வெண்ணிறமெய்யாளுமெத்தவஞ்செய்தனரோ
கையாளுநின்னடிக்குற்றேவல்செய்யக்கடைக்கணித்தாய்
மையாளுங்கண்ணொற்றிவாழ்வேவடிவுடைமாணிக்கமே. (கசு)

இலையாற்றுநீமலர்க்காலாற்பணிக்குங்குற்றேவலெலாந்
தலையாற்செயும்பெண்கள்பல்லோரிற்பூமகடன்னைத்தள்ளாய்
நிலையாற்பெரியநின்றொண்டர்தம்பக்கநிலாமையினான்
மலையாற்கருளொற்றிவாழ்வேவடிவுடைமாணிக்கமே. (கஎ)

கலைமகளோநின்பணியையன்போடுங்கடைப்பிடித்தா
ளலைமகளோவன்பொடுபிடித்தாளெற்கறதிகண்டாய்
தலைமகளேயருட்டாயேசெவ்வாய்க்கருந்தாழ்குழற்பொன்
மலைமகளேயொற்றிவாழ்வேவடிவுடைமாணிக்கமே. (கஅ)

பொன்னோடுவாணியென்போரிருவோரும்பொருணற்கல்வி
தன்னோடருளுந்திறநின்குற்றேவலைத்தாங்கிநின்ற
பின்னோவலததன்முன்னோதெளிந்திடப்பேசுகநீ
மன்னோடெழிலொற்றியூர்வாழ்வடிவுடைமாணிக்கமே. (ககூ)

காமட்டலர்திருவொற்றிநின்னாயகன்கந்தைசுற்றி
யேமட்டணையொடுநிற்பதுகண்டுமிரங்கலர்போ
னீமட்டுமேபட்டுடுக்கின்றனையுன்றனேயமென்னோ.
மாமட்டலர்குழன்மானேவடிவுடைமாணிக்கமே. (உ0)

வீற்றார்நின்றன்மணத்தம்பியின்மேற்சிறுமெல்லனிச்ச
மாற்றாநின்சிற்றடிப்போதினைத்தூக்கிவைத்தாரெனின்மா
லேற்றார்திருவொற்றியூரார்களக்கறுப்பேற்றவரே
மாற்றாவியல்கொண்மயிலேவடிவுடைமாணிக்கமே. (உக)

பொருப்புறுநீலியென்பார்நின்னைமெய்யதுபோலுமொற்றி
விருப்புறுநாயகன்பாம்பாபரணமும்வெண்டலையு
நெருப்புறுகையுங்கன்னன்மேனியுங்கண்டுநெஞ்சமஞ்சாய்
மருப்புறுகொங்கைமயிலேவடிவுடைமாணிக்கமே. (உஉ)

அனம்பொறுத்தான்புகழொற்றிநின்னையகனங்குமிழித்
தனம்பொறுத்தாளொருமாற்றாளைத்தன்முடிதன்னில்வைத்தே
தினம்பொறுத்தானதுகண்டுஞ்சினமின்றிச்சேர்ந்தநின்போன்
மனம்பொறுத்தாரெவர்கண்டாய்வடிவுடைமாணிக்கமே. (உ௩)

ஒருருவாயொற்றியூரமர்ந்தார்நின்னுடையவர்பெண்
சீருருவாகுநின்மாற்றாளைநீதெளியாத்திறத்தி
னீருருவாக்கிச்சுமந்தாரதனைநினைந்திலையே
வாருருவார்கொங்கைநங்காய்வடிவுடைமாணிக்கமே. (உச)

சார்ந்தேநின்பாலொற்றியூர்வாழுநாயகர்தாமகிழ்வு
கூர்ந்தேகுலாவுமக்கொள்கையைக்காணிற்கொதிப்பளென்று
தேர்ந்தேயக்கங்கையைச்செஞ்சடைமேற்சிறைசெய்தனரொண்
வார்ந்தேகுழைகொள்விழியாய்வடிவுடைமாணிக்கமே. (உ௫)

நீயேயெனதுபிழைகுறிப்பாயெனினின்னடிமைப்
பேயேன்செயும்வண்ணமெவ்வண்ணமோவெனைப்பெற்றளிக்குந்
தாயேகருணைத்தடங்கடலேயொற்றிச்சார்குமுத
வாயேர் * சவுந்தர்மானேவடிவுடைமாணிக்கமே. (உசா)

முப்போதுமன்பர்கள்வாழ்த்தொற்றியூரெம்முதல்வர்மகி
ழொப்போதரும்லைப்பெண்ணமுதேயென்றுவந்துநினை
யெப்போதுஞ்சிந்தித்திடாநீங்கிவாழவெனக்கருள்வாய்
மைப்போதனையகண்மானேவடிவுடைமாணிக்கமே. (உஎ)

மீதலத்தோர்களுள்யார்வணங்காதவர்மேவுநடுப்
பூதலத்தோர்களுள்யார்புகழாதவர்போற்றிநிதம்
பாதலத்தோர்களுள்யார்பணியாதவர்பற்றிநின்றாண்
மாதலத்தோங்கொற்றிவாழ்வேவடிவுடைமாணிக்கமே. (உஅ)

சேய்க்குற்றந்தாய்பொறுத்தேடாவருகெனச்செப்புவளிந்
நாய்க்குற்றநீபொறுத்தாளுதல்வேண்டுநெவின்மதியின்
றேய்க்குற்றமாற்றுந்திருவொற்றிநாதர்தந்தேவியன்பர்
வாய்க்குற்றநீக்குமயிலேவடிவுடைமாணிக்கமே. (உகூ)

செங்கமலாசனன்றேவிபொன்னுணுந்திருமுதலோர்
சங்கமதாமிடற்றோங்குபொன்னுணுந்தலைகுனித்துத்
துங்கமுறுதுளநாணத்திருவொற்றித்தோன்றல்புனை
மங்கலநாணுடையாளேவடிவுடைமாணிக்கமே. (௩௦)

சேடாரியன்மணம்வீசச்செயன்மணஞ்சேர்ந்துபொங்க
வேடார்பொழிலொற்றியூரண்ணனெஞ்சமிருந்துவக்க
வீடாவிருளுமுகிலும்பின்னிட்டுவெருவவைத்த
வாடாமலர்க்குழலாளேவடிவுடைமாணிக்கமே. (௩க)

* சௌந்தரம், எ-து, சவுந்தரமெனப்போலியாயிற்று.

புரனோக்கினாற்பொடிதேக்கியவொற்றிப்புனிதர்களக்
§ கரநோக்கிநல்லமுதாக்கிநிற்போற்றுங்கருத்தினரா
தரநோக்கியுள்ளிருணீக்கிமெய்ஞ்ஞானத்தனிச்சுகந்தான்
வரநோக்கியாள்விழிமானேவடிவுடைமாணிக்கமே. (௩௨)

உன்னுந்திருவொற்றியூருடையார்நெஞ்சுவப்பவெழிற்
றுன்னுமுயிர்ப்பயிரெல்லாந்தழைக்கச்சுகக்கருணை
யென்னுந்திருவமுதோயாமலூற்றியெமதுளத்தின்
மன்னுங்கடைக்கண்மயிலேவடிவுடைமாணிக்கமே. (௩௩)

வெள்ளங்குளிருஞ்சடைமுடியோனொற்றிவித்தகன்ற
னுள்ளங்குளிரமெய்பூரிப்பவானந்தமூற்றெடுப்பத்
தெள்ளங்குளிரின்னமுதேயளிக்குஞ்செவ்வாய்க்குமுத
வள்ளங்குளிர்முத்தமானேவடிவுடைமாணிக்கமே. (௩௪)

மாநந்தமார்வயற்காழிக்கவுணியர்மாமணிக்கன்
றாநந்தவின்னமுதூற்றுந்திருமுலையாரணங்கே
காநந்தவோங்குமெழிலொற்றியாருட்களித்தியலும்
வானந்தருமிடைமானேவடிவுடைமாணிக்கமே. (௩௫)

வான்றேடநான்குமறைதேடமாலுடன்வாரிசமே
லான்றேடமற்றையருந்தவர்தேடவென்னன்பின்மையால்
யான்றேடவென்னுளஞ்சேரொற்றியூரெம்மிருநிதியே
மான்றேடும்வாட்கண்மயிலேவடிவுடைமாணிக்கமே. (௩௬)

முத்தேவர் † விண்ணன்முதற்றேவர்சித்தர்முனிவர்மற்றை
யெத்தேவருநின்னடிநினைவார்நினைக்கின்றிலர்தாஞ்
செத்தேபிறக்குஞ்சிறியரன்றோவொற்றித்தேவர்நற்றா
மத்தேவர்வாமமயிலேவடிவுடைமாணிக்கமே. (௩௭)

திருநாணினைத்தொழுநன்னாடொழாமற்செலுத்தியநாள்
கருநாளெனமறையெல்லாம்புகலுங்கருத்தறிந்தே
யொருநாளினுநின்றனைமறவாரன்பரொற்றியில்வாழ்
மருநாண்மலர்க்குழன்மானேவடிவுடைமாணிக்கமே. (௩௮)

வாணாளடைவர்வறுமையுறார்நன்மனைமக்கள்பொன்
பூணாளிடம்புகழ்போதம்பெறுவர்பின்புன்மையொன்றுங்
காணார்நின்னாமங்கருதுகின்றோரொற்றிக்கண்ணுதல்பான்
மாணார்வமுற்றமயிலேவடிவுடைமாணிக்கமே. (௩௯)

சீரறிவாய்த்திருவொற்றிப்பரமசிவத்தைநினைப்
போரறிவாயவ்வறிவாம்வெளிக்கப்புறத்துநின்றாய்
யாரறிவார்நின்னைநாயேனறிவதழகுடைத்தே
வாரெறிபூண்முலைமானேவடிவுடைமாணிக்கமே. (௪0)

§ கரம், எ-து, விடம். † விண்ணன், எ-து, இந்திரன்.

போற்றிடுவோர்தம்பிழையாயிரமும்பொறுத்தருள்செய்
வீற்றிருளிர்ஞானவிளக்கேமரகதமென்கரும்பே
யேற்றெளிரொற்றியிடத்தாரிடத்திலிலங்குமுயர்
மாற்றெளிரும்பசும்பொன்னேவடிவுடைமாணிக்கமே. (சுக)

ஆசையுள்ளாரயன்மாலாதிதேவர்கள்யாருநின்றாட்
பூசையுள்ளாரொனிலெங்கேயுலகர்செய்பூசைகொள்வார்
தேசையுள்ளாரொற்றியூருடையாரிடஞ்சேர்மயிலே
‡ மாசையுள்ளார்புகழ்மானேவடிவுடைமாணிக்கமே. (சுஉ)

அண்டாளைவென் றுலகாண்டுமெய்ஞ்ஞானமடைந்துவிண்ணிற்
பண்டாளைசூழ்மதிபோலிருப்போர்கணின்பத்தர்பதங்
கண்டாளைக்கண்டவரன்றேதிருவொற்றிக்கண்ணுதல்சேர்
வண்டாளைவேலன்னமானேவடிவுடைமாணிக்கமே. (சுங)

அடியார்தொழுநின்னடிப்பொடிதான்சற்றணியப்பெற்ற
முடியாலடிக்குப்பெருமைபெற்றாரம்முகுந்தன்சந்தக்
கடியார்மலரயன்முன்னோர்தென்னொற்றிக்கடவுட்செம்பால்
வடியாக்கருணைக்கடலேவடிவுடைமாணிக்கமே. (சுச)

ஓவாதயன்முதலோர்முடிகோடியுறழ்ந்துபடி
லாவாவனிச்சம்பொருமலர்ச்சிற்றடியாற்றுங்கொலோ
காவாயிமயப்பொற்பாவாய்குளொற்றிக்காமர்வல்லி
வாவாவெனுமன்பர்வாழ்வேவடிவுடைமாணிக்கமே. (சரு)

இட்டார்மறைக்குமுபநிடதத்திற்குமின்னுஞ்சற்று
மெட்டாநின்பொன்னடிப்போதெள்ளியேன்றலைக்கெட்டுங்கொலோ
கட்டார்சடைமுடியொற்றியெம்மானெஞ்சகத்தமர்ந்த
மட்டார்குழன்மடமானேவடிவுடைமாணிக்கமே. (சசு)

வெளியாய்வெளிக்குள்வெறுவெளியாய்ச்சிவமேநிறைந்த
வொளியாயொளிக்குளொளியாம்பரைநினையொர்ப்பவரா
ளெளியார்க்கெளியர்திருவொற்றியார்மெய்யினிதுபரி
மளியாநின்றேங்குமருவேவடிவுடைமாணிக்கமே. (சஎ)

விணங்காதலன்பர்தமன்பிற்குநின்புலவிக்குமன்றி
வணங்காமதிமுடியெங்கள்பிரானொற்றிவாணனுநின்
குணங்காதலித்துமெய்க்கூறுதந்தானெனக்கூறுவருன்
மணங்காதலித்ததறியார்வடிவுடைமாணிக்கமே. (சஅ)

பன்னும்பல்வேற்றண்டமெல்லாமவ்வண்டப்பரப்பினின்று
துன்னுஞ்சராசரம்யாவையுமீன்றதுசூழ்ந்துமுன்னே
யின்னுமிளந்தையழியாத்கன்னிகையென்பதென்னே
மன்னுஞ்சுகாநந்தவாழ்வேவடிவுடைமாணிக்கமே. (சகூ)

‡ மாசை, எ-து, பொன்.

சினங்கடந்தோருள்ளச்செந்தாமரையிற்செழித்துமற்றை
மனங்கடந்தோ தமவ்வாக்குங்கடந்தமறையன்னமே
தினங்கடந்தோர்புகழொற்றியெம்மானிடஞ்சேரமுதே
வனங்கடந்தோன்புகழ்மானேவடிவுடைமாணிக்கமே. (௫௦)

வல்லாரும்வல்லவரல்லாருமற்றைமனிதர்முத
லெல்லாருநின்செயலல்லாதணுவுமியக்கிலரே
யில்லாமையாலுழல்புல்லேன்செய்குற்றங்களேதுகண்டாய்
மல்லார்வயலொற்றிநல்லாய்வடிவுடைமாணிக்கமே. (௫௧)

எழுதாவெழிலுயிர்ச்சித்திரமேயின்னிசைப்பயனே
தொழுதாமென்பர்தமுட்களிப்பேசிற்சுகக்கடலே
செழுவார்மலர்ப்பொழிலொற்றியெம்மான்றன்றிருத்துணையே
வழுவாமறையின்பொருளேவடிவுடைமாணிக்கமே. (௫௨)

தெருட்பாலுறுமைங்கைச்செல்வர்க்குநல்லிளஞ்சேய்க்குமகிழ்ந்
தருட்பாலளிக்குந்தனத்தனமேயெம்மங்கலந்த
விருட்பாலகற்றுமிருஞ்சுடரேயொற்றியெந்தையுள்ள
மருட்பால்பயிலுமயிலேவடிவுடைமாணிக்கமே. (௫௩)

அயிலேந்தும்பிள்ளைநற்றாயேதிருவொற்றியையர்மலர்க்
† கயிலேந்தரும்பெறன்முத்தேயிசையிற்கனிந்தகுரற்
குயிலேகுயின்மென்குழற்பிடியேமலைக்கோன்பயந்த
மயிலேமதிமுகமானேவடிவுடைமாணிக்கமே. (௫௪)

செய்யகமோங்குந்திருவொற்றியூரிற்சிவபெருமான்
மெய்யகமோங்குநல்லன்பேநின்பாலன்புமேவுகின்றோர்
கையகமோங்குங்கனியேதனிமெய்க்கதிநெறியே
வையகமோங்குமருந்தேவடிவுடைமாணிக்கமே. (௫௫)

தரும்பேரருளொற்றியூருடையானிடஞ்சார்ந்தபசுங்
கரும்பேயினியகற்கண்டேமதுரக்கனிநறவே
யிரும்பேய்மனத்தினர்பாலின்சயாதவிளங்கிளியே
வரும்பேரொளிச்செஞ்சுடரேவடிவுடைமாணிக்கமே. (௫௬)

சேலேர்விழியருட்டேனேயடியருட்டித்திக்குஞ்செம்
பாலேமதுரச்செம்பாகேசொல்வேதப்பனுவன்முடி
மேலேவிளங்கும்விளக்கேயருளொற்றிவித்தகனார்
மாலேகொளுமெழின்மானேவடிவுடைமாணிக்கமே. (௫௭)

எம்பாலருள்வைத்தெழிலொற்றியூர்கொண்டிருக்குமிறைச்
செம்பால்கலந்தபைந்தேனேகதலிச்செழுங்கனியே
வெம்பாலைநெஞ்சருண்மேவாமலர்ப்பதமென்கொடியே
வம்பாலணிமுலைமானேவடிவுடைமாணிக்கமே. (௫௮)

† கையிலேந்தெனற்பாலது - கயிலேந்தெனப்போலியாயிற்று.

ஏமமுய்ப்போரெமக்கென்றேயிளைக்கிலெடுக்கவைத்த
சேமவைப்பேயன்பர்தேடுமெய்ஞ்ஞானத்திரவியமே
தாமமைக்கார்மலர்க்கூந்தற்பிடிமென்றனிநடையாய்
வாமநற்சீரொற்றிமானேவடிவுடைமாணிக்கமே. (ருகூ)

மன்னேர்மலையன்மனையுநற்காஞ்சனமாலையுநீ
யன்னேயெனத்திருவாயாலழைக்கப்பெற்றாரவர்தா
முன்னேயருந்தவமென்னேமுயன்றனர்முன்னுமொற்றி
வன்னேரிள்முலைமின்னேவடிவுடைமாணிக்கமே. (சூ0)

கணமொன்றிலேனுமென்னுள்ளக்கவலைக்கடல்கடந்தே
குணமொன்றிலேனெதுசெய்கேனின்னுள்ளக்குறிப்பறியேன்
பணமொன்றுபாம்பணியொற்றியெம்மானிடப்பாலிற்றெய்வ
மணமொன்றுபச்சைக்கொடியேவடிவுடைமாணிக்கமே. (சூக)

கருவேதனையறவென்னெஞ்சகத்திற்களிப்பொடொற்றிக்
குருவேயெனுநின்கணவனுநீயுங்குலவுமந்தத்
திருவேயருள்செந்திருவேமுதற்பணிசெய்யத்தந்த
மருவேமருவுமலரோவடிவுடைமாணிக்கமே. (சூஉ)

எண்ணியவெண்ணங்களெல்லாம்பலிக்கவென்க்குனருள்
பண்ணியவுள்ளங்கொளுள்ளும்புறம்பும்பரிமளிக்கும்
புண்ணியமல்லிகைப்போதேயெழிலொற்றிப்பூரணர்பான்
மண்ணியபச்சைமணியேவடிவுடைமாணிக்கமே. (சூந)

தீதுசெய்தாலுநின்னன்பர்கடம்முன்செருக்கிநின்று
வாதுசெய்தாலுநின்றாண்மறந்தாலுமதியிலியே
னேதுசெய்தாலும்பொறுத்தருள்வாயொற்றியின்னிடைப்பூ
மாதுசெய்தாழ்குழன்மானேவடிவுடைமாணிக்கமே. (சூச)

மருந்தினின்றாயொற்றியூர்வாழுநின்றன்மகிழ்நன்முன்னுந்
திருந்திநின்றார்புகழ்நின்முன்னுநல்லருட்டேன்விழைந்தே
விருந்தினின்றேன்சற்றுமுள்ளிரங்காதவிதத்தைக்கண்டு
வருந்திநின்றேனிதுநன்றோவடிவுடைமாணிக்கமே. (சூரு)

என்போற்குணத்திலிழிந்தவரில்லையெப்போதுமெங்கு
நின்போலருளிற்சிறந்தவரில்லையிந்நீர்மையினாற்
பொன்போலுநின்னருளன்னேயெனக்கும்புரிதிகண்டாய்
மன்போலுயரொற்றிவாழ்வேவடிவுடைமாணிக்கமே. (சூசூ)

துன்பேமிகுமிவ்வடியேன்மனத்தினின்றுய்யவரு
ளின்பேமிகுவதெந்நாளோவெழிலொற்றியெந்தையுயிர்க்
கன்பேமெய்த்தொண்டரறிவேசிவநெறிக்கன்பிலர்பால்
வன்பேமெய்ப்போதவடிவேவடிவுடைமாணிக்கமே. (சூஎ)

சற்றேயெனினுமென்னெஞ்சத்துயரந்தவிரவநின்
பொற்றேமலர்ப்பதம்போற்றவுமுள்ளம்புரிதிகண்டாய்
சொற்றேரறிஞர்புகழொற்றிமேவுந்துணைவர்தஞ்செம்
மற்றோர்புயத்தணைமானேவடிவுடைமாணிக்கமே. (சுஅ)

சந்தோடமாப்பிறரெல்லாமிருக்கவுஞ்சஞ்சலத்தா
லந்தோவொருதமியேன்மட்டும்வாடலருட்கழகோ
நந்தோடநீக்கியநங்காயெனத்திருநான்முகன்மால்
வந்தோதுமொற்றிமயிலேவடிவுடைமாணிக்கமே. (சுகூ)

அடியேன்மிசையெப்பிழையிருந்தாலுமவைபொறுத்துச்
செடியேதநீக்கிநற்சீரருள்வாய்திகழ்தெய்வமறைக்
கொடியேமரகதக்கொம்பேயெழிலொற்றிக்கோமளமே
வடியேரயில்விழிமானேவடிவுடைமாணிக்கமே. (எ0)

கண்ணப்பனேத்துநற்காளத்தியார்மங்கலங்கொளொற்றி
நண்ணப்பர்வேண்டுநலமேபரானந்தநன்னறவே
யெண்ணப்படாவெழிலோவியமேயெமையென்றுகொண்ட
வண்ணப்பசும்பொன்வடிவேவடிவுடைமாணிக்கமே. (எக)

கற்பேவிகற்பங்கடியுமொன்றேயெங்கள்கண்ணிறைந்த
பொற்பேமெய்த்தொண்டர்தம்புண்ணியமேயருட்போதவின்பே
சொற்பேரறிவுட்சுகப்பொருளேமெய்ச்சுயஞ்சுடரோ
மற்பேர்பெறுமொற்றிமானேவடிவுடைமாணிக்கமே. (எஉ)

மிகவேதுயர்க்கடல்வீழ்ந்தேனைநீகைவிடுதலருட்
டகவேயெனக்குநற்றாயேயகிலசராசரமுஞ்
சுகவேலைமூழ்கத்திருவொற்றியூரிடநீதுன்னிப்பெற்ற
மகவேயெனப்புரக்கின்றோய்வடிவுடைமாணிக்கமே. (எந)

வேதங்களாயொற்றிமேவுஞ்சிவத்தின்விளைவருளாய்ப்
பூதங்களாய்ப்பொறியாய்ப்புலனாகிப்புகல்கரண
பேதங்களாயுயிராகியநின்னையிப்பேதையென்வாய்
வாதங்களாலறிவேனோவடிவுடைமாணிக்கமே. (எச)

மதியேமதிமுகமானேயடியர்மனத்துவைத்த
நிதியேகருணைநிறைவேசுகாநந்தநீணிலையே
கதியேகதிவழிகாட்டுங்கண்ணேயொற்றிக்காவலர்பால்
வதியேரிளமடமானேவடிவுடைமாணிக்கமே. (எரு)

ஆறாத்துயரத்தழுந்துகின்றேனையிங்கஞ்சலென்றே
கூறாக்குறையென்குறையேயினிநின்குறிப்பறியேன்
றேறாச்சிறியர்க்கரிதாந்திருவொற்றித்தேவர்மகிழ்
மாறாக்கருணைமழையேவடிவுடைமாணிக்கமே. (எசு)

எற்றேநிலையொன் றுமில்லா துயங்குமெனக்கருளச்
சற்றேநின் னுள்ளந் திரும்பிலையான்செயத்தக்கதென்னே
சொற்றேனிறைம்மறைக்கொம்பேமெய்ஞ்ஞானச்சுடர்க்கொழுந்தே
மற்றேரணியொற்றிவாழ்வேவடிவுடைமாணிக்கமே. (எஎ)

செவ்வேலைவென் றகண்மின்னேநின்சித்தந் திரும்பியெனக்
கெவ்வேலைசெய்யென் றிடினுமவ்வேலையியற்றுவல்காண்
டெவ்வேலைவற்றச்செயவ்வேலையீன்றொற்றித்தேவர்நெஞ்சை
வ்வேலவார்குழன்மானேவடிவுடைமாணிக்கமே. (எஅ)

தாயேமிகவுந்தயவுடையாளெனச்சாற்றுவரிச்
சேயேன்படுந் துயர்நீக்கவென்னேயுளஞ்செய் திலையே
நாயேன்பிழையினிநாடா துநல்லருணல்கவரு
வாயேயெம்மொற்றிமயிலேவடிவுடைமாணிக்கமே. (எகூ)

நானேநினக்கடியேனென்பிழைகளைநாடியநீ
தானேயெனைவிடிலந்தோவினியெவர்தாங்குகின்றோர்
தேனேநல்வேதத்தெளிவேகதிக்குச்செலுநெறியே
வானோர்பொழிலொற்றிமானேவடிவுடைமாணிக்கமே. (அ0)

கல்லாரிடத் திலென்னில்லாமைசொல்லிக்கலங்கியிடா
நல்லாண்மையுண்டருள்வல்லாண்மையுண்டெனினல்குவையோ
வல்லாரெவர்கட்கும்வல்லார் திருவொற்றிவாணரொடு
மல்லார்பொழிலொற்றிவாழ்வோய்வடிவுடைமாணிக்கமே. (அக)

சுந்தரவாண்முகத்தோகாய்மறைகள்சொலும்பைங்கிள்ளாய்
கந்தரவார்குழற்பூவாய்கருணைக்கடைக்கணங்கா
யந்தரநேரிடைப்பாவாயருளொற்றியண்ணன்மகிழ்
மந்தரநேர்கொங்கைமங்காய்வடிவுடைமாணிக்கமே. (அஉ)

பத்தர்தம்முள்ளத்திருக்கோயின்மேவும்பரம்பரையே
சுத்தமெய்ஞ்ஞானவொளிப்பிழம்பேசிற்சுகானந்தமே
நித்தநின்சீர்சொலவெற்கருள்வாயொற்றிநின்மலருன்
மத்தர்தம்வாமமயிலேவடிவுடைமாணிக்கமே. (அ௩)

பூவாய்மலர்க்குழற்பூவாய்மெய்யன்பர்புனைந்ததமிழ்ப்
பாவாய்நிறைந்தபொற்பாவாய்செந்தேனிற்பகர்மொழியாய்
காவாயெனவயன்காவாய்ப்பவனுங்கருதுமலர்
மாவாயெழிலொற்றிவாழ்வேவடிவுடைமாணிக்கமே. (அச)

தாதார்வுணவுடைதாதர்வெனப்புல்லர்தம்மிடைப்போய்
மாதாகமுற்றவர்வன்னெஞ்சினின்னடிவைகுங்கொலோ
காதார்நெடுங்கட்கரும்பேநல்லொற்றிக்கருத்தர்நட
வாதாரிடம்வளர்மாதேவடிவுடைமாணிக்கமே. (அரு)

களந்திரும்பாவிக்கடையேனையாளக்கருணைகொண்டுன்
னுளந்திரும்பாமைக்கென்செய்கேன்றுயர்க்கடலூடலைந்தேன்
குளந்திரும்பாவிழிக்கோமானொடுநெந்தொண்டர்கூட்டமுற
வளந்திரும்பாவொற்றிவாழ்வோய்வடிவுடைமாணிக்கமே. (அசு)

ஆரணம்பூத்தவருட்கோமளக்கொடியந்தரிபூந்
தோரணம்பூத்தவெழிலொற்றியூர்மகிழ்சுந்தரிசற்
காரணம்பூத்தசிவைபார்ப்பதிநங்கௌரியென்னும்
வாரணம்பூத்ததனத்தாய்வடிவுடைமாணிக்கமே. (அஎ)

திருவல்லியேத்துமபிடேகவல்லியெஞ்சென்னியிடை
வருவல்லிகற்பகவல்லியொண்பச்சைமணிவல்லியெங்
கருவல்லிநீக்குங்கருணம்பகவல்லிகண்கொளொற்றி
மருவல்லியென்றுமறைதேர்வடிவுடைமாணிக்கமே. (அஅ)

உடையென்னவொண்புலித்தோலுடையார்கண்டுவக்குமிள
நடையன்னமேமலர்ப்பொன்முதலாம்பெண்கணுயகமே
படையன்னநீள்விழிமின்னேரிடைப்பொற்பசுங்கிளியே
மடைமன்னுநீரொற்றிவாழ்வேவடிவுடைமாணிக்கமே. (அகூ)

கற்பதுங்கேட்பதுமெல்லாநின்னற்புதக்கஞ்சமலர்ப்
பொற்பதங்காணும்பொருட்டெனவெண்ணுவர்புண்ணியரே
சொற்பதமாயவைக்கப்புறமாய்நின்றதூய்ச்சுடரே
மற்பதஞ்சேரொற்றிவாழ்வேவடிவுடைமாணிக்கமே. (கூ0)

நின்னலெனக்குளவெல்லாநலனுநினையடைந்த
வென்னலுனக்குளதென்னைகண்டாயெமையீன்றவளே
முன்னல்வருக்கருளொற்றியெம்மான்கண்முழுமணியே
மன்னன்மறையின்முடிவேவடிவுடைமாணிக்கமே. (கூக)

நன்றேசிவநெறிநாடுமெய்த்தொண்டர்க்குநன்மைசெய்து
நின்றேநின்சேவடிக்குற்றேவல்செய்யநினைத்தனனீ
தென்றேமுடிகுவதின்றேமுடியிலினிதுகண்டாய்
மன்றேமொழிலொற்றிவாழ்வேவடிவுடைமாணிக்கமே. (கூஉ)

அத்தனையொற்றிக்கிறைவனையம்பலத்தாடுகின்ற
முத்தனைச்சேர்ந்தவொண்முத்தேமதியமுகவமுதே
யித்தனையென்றளவேலாதகுற்றமிழைத்திடுமிம்
மத்தனையாளல்வழக்கோவடிவுடைமாணிக்கமே. (கூங)

கூறுதவாழ்க்கைச்சிறுமையைநோக்கிக்குறித்திடுமென்
றேறுதவிண்ணப்பஞ்சற்றேனுநின்றன்றிருச்செவியி
லேறுதவண்ணமென்னொற்றித்தியாகரிடப்புறத்தின்
மாறுதமர்ந்தமயிலேவடிவுடைமாணிக்கமே. (கூச)

ஓயாவிடர்கொண்டுலைவேனுக்கன்பர்க்குதவுதல்போ
லீயாவிடினுமோரெள்ளளவேனுமிரங்குகண்டாய்
சாயாவருட்டருந்தாயேயெழிலொற்றித்தற்பரையே
மாயாநலமருள்வாழ்வேவடிவுடைமாணிக்கமே. (கூரு)

பெரும்பேதையேன்சிறுவாழ்க்கைத்துயரெனும்பேரலையிற்
றுரும்பேயெனவலைகின்றேன்புணைநின்றுணைப்பதமே
கரும்பேகருணைக்கடலேயருண்முக்கனிநறவே
வரும்பேரருளொற்றிவாழ்வேவடிவுடைமாணிக்கமே. (கூசா)

காதரவாலுட்கலங்கிநின்றேனின்கடைக்கணரு
ளாதரவான்மகிழ்கின்றேனினியுன்னடைக்கலமே
சீதரனேத்துந்திருவொற்றிநாதர்தந்தேவியெழின்
மாதரசேயொற்றிவாழ்வேவடிவுடைமாணிக்கமே. (கூஎ)

பொன்னுடையாரன்றிப்போற்றுநற்கல்விப்பொருளுடையா
ரென்னுடையாரெனவேசுகின்றுவிஃதென்னையன்னே
மின்னுடையாய்மின்னிற்றுன்னிடையாயொற்றிமேவுமுக்கண்
மன்னுடையாயென்னுடையாய்வடிவுடைமாணிக்கமே. (கூஅ)

பொய்விட்டிடாதவன்னெஞ்சகத்தேனைப்புலம்பும்வண்ணங்
கைவிட்டிடாதின்னுங்காப்பாயதுநின்கடன்கரும்பே
மெய்விட்டிடாருள்விளையின்பமேயொற்றிவித்தகமே
மைவிட்டிடாவிழிமானேவடிவுடைமாணிக்கமே. (கூகூ)

நேயானுகூலமனமுடையாயினிநீயுமென்றன்
றாயாகில்யானுன்றனையனுமாகிலென்றன்னுளத்தி
லோயாதுறுந்துயரெல்லாந்தவிர்த்தருளொற்றியிற்செவ்
வாயாரமுதவடிவேவடிவுடைமாணிக்கமே. (க00)

வாழிநின்சேவடிபோற்றிநின்பூம்பதவாரிசங்கள்
வாழிநின்றண்மலர்போற்றிநின்றண்ணளிவாழிநின்சீர்
வாழியென்னுள்ளத்தினீயுநின்னொற்றிமகிழ்நருநீ
வாழியென்னுருயிர்வாழ்வேவடிவுடைமாணிக்கமே. (க0க)

திருச்சிற்றம்பலம்.

---

## வடிவுடைமாணிக்கமாலை.

முற்றிற்று.

உ

சிவமயம்.

சிவகணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# இங்கிதமாலை.



காப்பு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஒருமாமுகனையொருமாவையூர்வாகனமாயுறநோக்கித்
திருமான்முதலோர்சிறுமையெலாந்தீர்த்தெம்மிருகண்மணியாகிக்
கருமாலகற்றுங்கணபதியாங்கடவுளடியுங்களித்தவர்பின்
வருமாகருணைக்கடற்குமரவள்ளலடியும்வணங்குவாம்.

பாடாண்டிணை.

கடவுண்மாட்டு மானிடப்பெண்டிர் நயந்தபக்கம்.

(வினா வுத்தரம்.)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

திருவார்கமலத்தடம்பணைசூழ்செல்வப்பெருஞ்சீரொற்றியில்வாழ்
மருவார்கொன்றைச்சடைமுடிகொள்வள்ளலிவர்க்குப்பலிகொடுநா
னொருவாதடைந்தேனினிநமக்கிங்குதவவருந்தோறுன்முலைமே
லிருவாரிடுநீயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௧)

தண்ணார்மலனாமதிநதியைத்தாங்குஞ்சடையாரிவர்தமைநா
னண்ணாலொற்றியிருந்தவரேயையரேநீர்யாரென்றே
னண்ணாரிடத்துமம்பலத்துநடவாதவர்நாமென்றுசொலி
யெண்ணாதருகேவருகின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௨)

பிட்டினதிமண்சுமந்தவொற்றிப்பிச்சைத்தேவரிவர்தமைநான்
றட்டின்மலர்க்கையிடத்தெதுவோதனத்தைப்பிடியுமென்றுரைத்தேன்
மட்டினொருமூன்றுடனேழுமத்தர்தலையீதென்றுசொலி
யெட்டிமுலையைப்பிடிக்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩)

மடையிற்கயல்பாயொற்றிநகர்வள்ளலாகுமிவர்தமைநா
னடையிற்கனிவாற்பணியென்றேயருளீருரியீருடையென்றேன்
கடையிற்படுமோர்பணியென்றேகருதியுரைத்தேமென்றுரைத்தென்
னிடையிற்கலையையுரிகின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ச)

மன்றன்மணக்குமொற்றிநகர்வாணராகுமிவர்தமைநா
னின்றன்பொடுங்கையேந்தனத்தையேற்றோர்கலத்திற்கொளுமென்றே
னன்றன்புடையாயெண்கலத்திலுங்கொண்டிடுவேமென்றுசொலி
யென்றன்முலையைத்தொடுகின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ரு)

கோமாற்கருளுந்திருவொற்றிக்கோயிலுடையாரிவரைமத
மாமாற்றியநீரேகலவிமகிழ்ந்தின்றடியேன்மனையினிடைத்
தாமாற்றிடக்கொண்டேகுமென்றேன்றாவென்றார்தந்தாலென்னை
யேமாற்றினையேயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (சா)

அம்மாலயனுங்காண்பரியீர்க்கமரும்பதிதான்யாதென்றே
னிம்மாலுடையாயொற்றுதற்கோரெச்சமதுகண்டறியென்றார்
செம்மாலிஃதொன்றென்னென்றேன்றிருவேபுரிமேற்சேர்கின்ற
வெம்மான்மற்றொன்றென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (எ)

கண்கள்களிப்பவீண்டுநிற்குங்கள்வரிவரொற்றியதாம்
பண்களியன்றதிருவாயாற்பலிதாவென்றார்கொடுவந்தேன்
பெண்கட்டரலீதன்றென்றார்பேசப்பலியாதென்றேனின்
னெண்கண்பலித்ததென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (அ)

ஆராமகிழ்வுதருமொருபேரழகரிவரொற்றியதா
நேராய்விருந்துண்டோவென்றார்நீர்தான்வேறிங்கிலையென்றேன்
வாரார்முலையாய்வாயமுதுமலர்க்கையமுதுமனையமுது
மோராயுளவேயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கூ)

அடுத்தார்க்கருளுமொற்றிநகரையரிவர்தாமிகத்தாகங்
கடுத்தாமென்றார்கடிதடநீர்கண்டீரைய்ங்கொளுமென்றேன்
கொடுத்தாய்கண்டதிலையையங்கொள்ளுமிடஞ்சூழ்ந்திடுங்கலையை
யெடுத்தாற்காண்பேமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க0)

இந்தாரிதழியிலங்குசடையேந்தலிவரொற்றியதாம்
வந்தார்பெண்ணேயமுதென்றார்வரையின்சுவையிங்குண்டென்றே
னந்தார்குழலாய்பசிக்கினும்பெண்ணுணைவிடுமோவமுதின்றே
லெந்தாரந்தாவென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கக)

தன்னந்தனியாயிங்குநிற்குஞ்சாமியிவரொற்றியதா
மன்னந்தருவீரென்றார்நானழைத்தேனின்னையன்னமிட
முன்னம்பசிபோயிற்றென்றார்முன்னின்றகன்றேனிவ்வன்ன
மின்னந்தருவாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கஉ)

மாறுவழகோடிங்குநிற்கும்வள்ளலிவரூரொற்றியதாம்
வீறுமுணவீயென்றார்நீர்மேவாவுணவிங்குண்டென்றேன்
கூறுமகிழ்வேகொடுவென்றார்கொடுத்தாலிதுதானன்றென்றே
யேறுவழக்குத்தொடுக்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கரு)

வண்மையுடையார்திருவொற்றிவாணரிவர்தாம்பலியென்று
ருண்மையறிவீர்பலியெண்மையுணர்கிலீரென்னுழையென்றேன்
பெண்மைசிறந்தாய்நின்மனையிற்பேசும்பலிக்கென்றடைந்ததுநா
மெண்மையுணர்ந்தேயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கச)

திருவையளிக்குந்திருவொற்றித்தேவரீர்க்கென்விழைவென்றேன்
வெருவ்லுனதுபெயரிடையோர்மெய்நீக்கியநின்முகமென்றார்
தருவலதனைவெளிப்படையாற்சாற்றுமென்றேன்சாற்றுவனே
லிருவைமடவாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கரு)

முந்தைமறையோன்புகழொற்றிமுதல்வரிவர்தம்முகநோக்கிக்
கந்தையுடையீரொன்னென்றேன்கழியாவுன்றன்மொழியாலே
யிந்துமுகத்தாயெமக்கொன்றேயிருநான்குனக்குக்கந்தையுள
திந்தவியப்பென்னென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கசா)

துன்னலுடையாரிவர்தமைநீர்துன்னும்பதிதான்யாதென்றே
னென்னலிரவிலெமைத்தெளிவானின்றனதுபெயரென்று
ருன்னலுறுவீர்வெளிப்படவீதுரைப்பீரென்றேனுரைப்பேனே
லின்னலடைவாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கஎ)

சிமைக்கொள்சூலத்திருமலர்க்கைத்தேவர்நீரெங்கிருந்ததென்றே
னெமைக்கண்டளவின்மாதேநீயிருந்ததெனயாமிருந்ததென்று
ரமைக்குமொழியிங்கிதமென்றேனுன்மொழியிங்கிதமன்றே
யிமைக்குமிழையாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கஅ)

நடங்கொள்பதத்தீர்திருவொற்றிநங்கள்பெருமானீரன்றே
திடங்கொள்புகழ்க்கச்சூரிடஞ்சேர்ந்தீரென்றேனின்னடுநோக்காக்
குடஞ்சேர்ந்ததுமாங்கஃதென்றார்குடம்யாதென்றேனஃதறிதற்
கிடங்கர்நடுநீக்கென்றாரிதுதான்சேடியென்னேடீ. (கசு)

சங்கமருவுமொற்றியுளீர்சடைமேலிருந்ததென்னென்றேன்
மங்கைநினதுமுன்பருவம்மருவுமுதனீத்திருந்ததென்றார்
கங்கையிருந்ததேயென்றேன்கமலையனையாய்கழுக்கடையு
மெங்கையிருந்ததென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (உ0)

துதிசேரொற்றிவளர்தருமத்துரையேநீர்முன்னுடலுறும்
பதியாதென்றேனம்பெயர்முற்பகரீரெழுத்தைப்பறித்ததென்றார்
நிதிசேர்ந்திடுமப்பெயர்யாதுநிகழ்த்துமென்றேனீயிட்ட
தெதுவோவதுகாணென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (உக)

உடற்கச்சுயிராமொற்றியுளீருமது திருப்பேர்யாதென்றேன்
குடக்குச்சிவந்தபொழுதினைமுன்கொண்டவண்ணராமென்றார்
விடைக்குக்கருத்தாவாநீர்தாம்விளம்பன்மிகக்கற்றவரென்றே
னிடக்குப்புகன்றாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (உஉ)

மணங்கேதகைவான்செயுமொற்றிவள்ளலிவணாவல்விளைவேன்
பிணங்கேஞ்சிறிதுநில்லுமென்றேபிணங்காவிடினுநென்னலென
வணங்கேநினக்கொன்றினிற்பாதியதிலோர்பாதியாகுமிதற்
கிணங்கேஞ்சிறிதுமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (உங)

ஒற்றிநகராரிவர்தமைநீருவந்தேதறுவதிங்கியாதென்றேன்
மற்றுன்பருவத்தொருபங்கேமடவாயென்றார்மறைவிடையீ
திற்றென்றறிதற்கரிதென்றேனெம்மையறிவாரன்றியஃ
தெற்றென்றறிவாரென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (உச)

கண்ணின்மணிபோலிங்குநிற்குங்கள்வரிவரோரொற்றியதாம்
பண்ணின்மொழியாய்நின்பாலோர்பறவைப்பெயர்வேண்டினம்படைத்தான்
மண்ணின்மிசையோர்பறவையதாவாழ்வாயென்றாரொன்னென்றே
னெண்ணியறிநீயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (உரு)

சேடார்வளஞ்சூழொற்றிநகர்செல்வப்பெருமானிவர்தமைநா
னேடார்கரத்தீரெண்டோள்களுடையீரென்னென்றுரைத்தேனீ
கோடாகோடிமுகநூறுகோடாகோடிக்களமென்னே
யீட்டாயுடையாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (உசு)

துருமஞ்செழிக்கும்பொழிலொற்றித்தோன்றாலிங்குநீர்வந்த
கருமஞ்சொலுமென்றேனிவண்யாங்கடாதற்குன்பாலெம்முடைமைத்
தருமம்பெறக்கண்டாமென்றார்தருவலிருந்தாலென்றேனில்
லிருமந்தரமோவென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (உஎ)

ஒருகைமுகத்தோர்க்கையரெனுமொற்றித்தேவரிவர்தமைநான்
வருகையுவந்தீரென்றனைநீர்மருவியணைதல்வேண்டுமென்றேன்
றருகையுடனேயகங்காரந்தனையெம்மடியார்தமைமயக்கை
யிருகைவளைசிந்தென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (உஅ)

திருத்தமிகுஞ்சீரொற்றியில்வாழ்தேவரேயிங்கெதுவேண்டி
வருத்தமலர்க்காலுறநடந்துவந்தீரென்றேன்மாதேநீ
யருத்தந்தெளிந்தேநிருவாணமாகவுன்றனகத்தருட்க
ணிருத்தவடைந்தேமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (உகூ)

வளஞ்சேரொற்றிமாணிக்கவண்ணராகுமிவர்தமைநான்
குளஞ்சேர்ந்திருந்ததுமக்கொருகண்கோலச்சடையீரழகிதென்றேன்
களஞ்சேர்குளத்தினெழின்மூலக்கண்காணவோரைந்துனக்கழகீ
திளஞ்சேல்விழியாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩0)

பலஞ்சேரொற்றிப்பதியுடையீர்பதிவேறுண்டோநுமக்கென்றே
னுலஞ்சேர்வெண்பொன்மலையென்றாருண்டோநீண்டமலையென்றேன்
வலஞ்சேரிடைத்தவ்வருவித்தமலைகாணதனின்மம்முதல்சென்
றிலஞ்சேர்ந்ததுவுமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩க)

வயலாரொற்றிவாணரிவர்வந்தார்நின்றார்வாய்திறவார்
செயலார்விரல்கண்முடக்கியடிசேர்த்திரிதழ்கள்விரிவித்தார்
மயலாருளத்தோடென்னென்றேன்மறித்தோர்விரலாலென்னுடைய
வியலார்வடிவிற்சுட்டுகின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩உ)

பேர்வாழொற்றிவாணரிவர்பேசாமௌனயோகியராய்ச்
சீர்வாழ்நமதுமனையினிடைச்சேர்ந்தார்விழைவென்செப்புமென்றே
னோர்வாழடியுங்குழலணியுமொருநல்விரலாற்சுட்டியுந்தம்
மோர்வாழொருகைபார்க்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩௩)

பெருஞ்சீரொற்றிவாணரிவர்பேசாமௌனம்பிடித்திங்கே
விரிஞ்சீர்தரநின்றுடன்கீழுமேலுநோக்கிவிரைந்தார்யான்
வருஞ்சீருடையீர்மணிவார்த்தைவகுக்கவென்றேன்மார்பிடைக்கா
ழிருஞ்சீர்மணியைக்காட்டுகின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩௪)

வலந்தங்கியசீரொற்றிநகர்வள்ளலிவர்தாம்மௌனமொடு
கலந்திங்கிருந்தவண்டசத்தைக்காட்டிமூன்றுவிரனீட்டி
நலந்தங்குறப்பின்னடுமுடக்கிநண்ணுமிந்தநகத்தொடுவா
யிலந்தங்கரத்தாற்குறிக்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩௫)

தேனார்பொழிலாரொற்றியில்வாழ்தேவரிவர்வாய்திறவாராய்
மானார்கரத்தோர்நகந்தெறித்துவாளாநின்றார்நீளார்வந்
தானுருளத்தோடியாதென்றேன்றங்கைத்தலத்திற்றலையையடி
யேனுறவேகாட்டுகின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩௬)

செச்சையழகர்திருவொற்றித்தேவரிவர்வாய்திறவாராய்
மெச்சுமொருகாற்கரந்தொட்டுமீண்டுமிடற்றக்கரம்வைத்தார்
பிச்சரடிகேள்வேண்டுவதுபேசீரென்றேன்றமைக்காட்டி
யிச்சையெனையுங்குறிக்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩௭)

மன்றார்நிலையார்திருவொற்றிவாணரிவர்தாமௌனமொடு
நின்றாரிருகையொலியிசைத்தார்நிமிர்ந்தார்தவிசினிலைகுறைத்தார்
நன்றாமுதுசிறிதுமிழ்ந்தார்நடித்தாரியாவுமையமென்றே
னின்றாமரைக்கையேந்துகின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩அ)

வாராவிருந்தாய்வள்ளலிவர்வந்தார்மௌனமொடுநின்றார்
நீராரெங்கேயிருப்பதென்றேனீண்டசடையைக்குறிப்பித்தா
ரூராவைத்ததெதுவென்றேனெண்கையோடென்னிடத்தினில்வைத்
தேரார்கரத்தார்சுட்டுகின்றாரிதுதான்சேடியென்னேடி. (௩௯)

செங்கேழ்கங்கைச்சடையார்வாய்திறவாராகவீண்டடைந்தா
ரெங்கேயிருந்திங்கணைந்ததுகாணெங்கள்பெருமானென்றேனென்
னங்கேழருகினகன்றுபோயங்கேயிறைப்போதமர்ந்தெழுந்தே
யிங்கேநடந்துவருகின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௬௦)

கொடையாரொற்றிவாணரிவர்கூறுமௌனராகிநின்றார்
தொடையாரிதழிமதிச்சடையெந்துரையேவிழைவேதுமக்கென்றே
னுடையார்துன்னற்கந்தைதனையுற்றுநோக்கிநகைசெய்தே
யிடையாக்கழுமுட்காட்டுகின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௬௧)

பொன்னைக்கொடுத்தும்புணர்வரியபுனிதரிவரூரொற்றியதா
முன்னைத்தவத்தாலியாங்காணமுன்னேநின்றார்முகமலர்ந்து
மின்னிற்பொலியுஞ்சடையீரென்வேண்டுமென்றேனுணச்செய்யா
ளின்னச்சினங்காணென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௬௨)

வயலார்சோலையெழிலொற்றிவாணராகுமிவர்தமைநான்
செயலாரடியர்க்கருள்வீர்நுஞ்சிரத்துமுரத்துந்திகழ்கரத்தும்
வியலாய்க்கொண்டதென்னென்றேன்விளங்கும்பிறைகமலைமூன்று
மியலாற்காண்டியென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௬௩)

பொதுநின்றருள்வீரொற்றியுளீர்பூவுந்தியதென்விழியென்றே
னிதுவென்றறிநாமேறுகின்றதென்றாரேறுகின்றதுதா
னெதுவென்றுரைத்தேனெறுநடுவோரெழுத்திட்டறிநீயென்றுசொலி
யெதிர்நின்றுவந்துநகைக்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௬௪)

இட்டங்களித்ததொற்றியுளீரீண்டிவ்வேளையெவனென்றேன்
சுட்டுஞ்சுதனேயென்றார்நான்சுட்டியறியச்சொலுமென்றேன்
பட்டுண்மருங்குற்பாவாய்நீபரித்ததன்றேபாரென்றே
யெட்டுங்களிப்பாலுரைக்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௬௫)

பாற்றக்கணத்தாரிவர்காட்டுப்பள்ளித்தலைவரொற்றியினின்
றூற்றப்பசித்துவந்தார்மன்னமிடுமினென்றுரைத்தேன்
சோற்றுக்கிளைத்தோமாயினும்யாஞ்சொல்லுக்கிளையேங்கீழ்ப்பள்ளி
யேற்றுக்கிடந்தாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௬௬)

குருகாரொற்றிவாணர்பலிகொள்ளவகையுண்டோவென்றே
னொருகாலெடுத்தீண்டுரையென்றாரொருகாலெடுத்துக்காட்டுமென்றேன்
வருகாவிரிப்பொன்னம்பலத்தேவந்தாற்காட்டுகின்றாம்வீ
ழிருகாலுடையாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௬௭)

வேலைஞாலம்புகழொற்றிவிளங்குந்தேவரணிகின்ற
மாலையாதென்றேனயன்மான்மாலையகற்றுமாலையென்றார்
சோலைமலரன்றேயென்றேன்சோலையேநாந்தொடுப்பதென
வேலமுறுவல்புரிகின்றாரிதுதான்சேடியென்னேடீ (௬௮)

உயிருளுறைவீர் திருவொற்றியுடையீர்நீரென்மேற்பிடித்த
வயிரமதனைவிடுமென்றேன்வயிரியலநீமாதேயாஞ்
செயிரதகற்றுன்மூலயிடங்கொள்செல்வனலகாண்டெனியென்றே
யியல்கொண்முறுவல்புரிகின்றாரிதுதான்சேடியென்னேடீ. (சகூ)

தண்காவளஞ்சூழ்திருவொற்றித்தலத்திலமர்ந்தசாமிநுங்கை
யெண்கார்முகமாப்பொன்னென்றேனிடையிட்டறிதலரிதென்றார்
மண்காதலிக்கும்டென்றேன்மதிக்குங்கணைவில்லன்றென்றே
யெண்காணகைசெய்தருள்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ரு௦)

செய்காண்வளஞ்சூழொற்றியுளீர் திருமான்முதன்முத்தேவர்கட்கு
மைகாணீரென்றேனிதன்மேலணங்கேநீயேழடைதியென்றார்
மெய்காணதுதானென்னென்றேன் விளங்குஞ்சுட்டுப்பெயரென்றே
யெய்காணுறவேநகைக்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ருக)

விண்டுவணங்குமொற்றியுளீர்மென்பூவிருந்தும்வன்பூவில்
வண்டுவிழுந்ததென்றேனெம்மலர்க்கைவண்டும்விழுந்ததென்றார்
தொண்டர்க்கருள்வீர்மிகவென்றேன்றோகாய்நாமேதொண்டனென
வெண்டங்குறவேநகைக்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ருஉ)

மட்டார்மலர்க்காவொற்றியுளீர்மதிக்குங்கலேமேல்விழுமென்றே
னெட்டாமெழுத்தையெடுத்ததுநாமிசைத்தேமென்றாரெட்டாக
வுட்டாவுறுமவ்வெழுத்தறியவுரைப்பீரென்றேனந்தணரூர்க்
கிட்டார்நாமமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ருங)

ஒற்றிநகரீர்மனவசிதானுடையார்க்கருள்வீர்நீரென்றேன்
பற்றியிறுதிதொடங்கியதுபயிலுமவர்க்கேயருள்வதென்றார்
மற்றிதுணர்கிலேனென்றேன்வருந்தேலுள்ளவன்மையெலா
மெற்றிலுணர்தியென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ருச)

வான்றோய்பொழிற்சூழொற்றியுளீர்வருந்தாதணேவேனோவென்றே
னூன்றோயுடற்கென்றார்தெரியவுரைப்பீரென்றேனோவிதுதான்
சான்றோருமதுமரபோர்ந்துதரித்தபெயர்க்குத்தகாதென்றே
யேன்றோர்மொழிதந்தருள்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ருரு)

தீதுதவிர்க்குமொற்றியுளீர்செல்லலறுப்பதென்றென்றே
னீதுநமக்குத்தெரிந்ததென்றாரிறையாமோவிங்கிதுவென்றே
ஞேதுமடியார்மனக்கங்குலோட்டுநாமேயுணரன்றி
யேதுமிறையன்றென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ருசு)

ஒண்கைமழுவோடனலுடையீரொற்றிநகர்வாழுத்தமர்நீர்
வண்கையொருமைநாதரென்றேன்வண்கைப்பன்மைநாதரென்று
ரெண்கணடங்காவதிசயங்காணென்றேன்பொருளன்றிவையதற்கென்
றெண்சொன்மணிதந்தருள்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ருஎ)

ஒருவரெனவாழொற்றியுளீருமக்கம்மனையுண்டோவென்றே
னிருவரொருபேருடையவர்காணென்றாரென்னென்றேனெம்பேர்
மருவுமீறற்றயலகரம்வயங்குமிகரமானதென்றே
யிருவுமொழிதந்தருள்கின்றாரிது தான்சேடியென்னேடீ. (ருஅ)

பேராரொற்றியீரும்மைப்பெற்றாரெவரென்றேனவர்தம்
மேரர்பெயரின்முன்பினிரண்டிரண்டாமெழுத்தாரென்றாரென்
னேராயுணைப்பீரென்றேனீநெஞ்சநெகிழ்ந்தாலுணைப்பாமென்
றேராயுணைசெய்தருள்கின்றாரிது தான்சேடியென்னேடீ. (ருகூ)

தளிநான்மறையீரொற்றிநகர்தழைக்கவாழ்வீர்தனிஞான
வொளிநாவரசையைந்தெழுத்தாலுவரிகடத்தினீரென்றேன்
களிநாவலனையீரெழுத்தாற்கடலில்வீழ்த்தினேமென்றே
யெளியேற்குவப்பின்மொழிகின்றாரிது தான்சேடியென்னேடீ. (சூ0)

ஒமூன்றுளத்தீரொற்றியுளீருற்றோர்க்களிப்பீரோவென்றேன்
றாமூன்றென்பார்க்கயன்மூன்றுந்தருவேமென்றாரம்மமிகத்
தேமூன்றினநும்மொழியென்றேன்செவ்வாயுறுமுன்னகையென்றே
யேமூன்றுறவேநகைக்கின்றாரிது தான்சேடியென்னேடீ. (சூக)

மன்னிவிளங்குமொற்றியுளீர்மடவாரிரக்கும்வகையதுதான்
முன்னிலொருதாவாமென்றேன்முத்தாவெனலேமுறையென்றா
ரொன்னிலிதுதானையமென்றேனெமக்குந்தெரியுமெனத்திருவா
யின்னலமுதமுகுக்கின்றாரிது தான்சேடியென்னேடீ. (சூஉ)

வளஞ்சேரொற்றியீரெனக்குமாலையணிவீரோவென்றேன்
குளஞ்சேர்மொழிப்பெண்பாவாய்நின்கோலமனைக்கணுமகிழ்வா
லுளஞ்சேர்ந்தடைந்தபோதேநின்னுளத்திலணிந்தேமுணரென்றே
யிளஞ்சீர்நகைசெய்தருள்கின்றாரிது தான்சேடியென்னேடீ. (சூங)

வீற்றாரொற்றிநகரமர்ந்தீர்விளங்கும்லரேவிளம்புநெடு
மாற்றாரென்றேனிலைகாணெம்மாலைமுடிமேற்பாரென்றார்
சாற்றாச்சலமேயீதென்றேன்சடையின்முடிமேலன்றென்றே
யேற்றாதரவான்மொழிகின்றாரிது தான்சேடியென்னேடீ. (சூச)

புயப்பாலொற்றியீரச்சம்போமோவென்றேனுமென்றார்
வயப்பாவலருக்கிறையானீர்வஞ்சிப்பாவிங்குரைத்ததென்றேன்
வியப்பாநகையப்பாவெனும்பாவெண்பாகலிப்பாவுரைத்துமென்றே
யியற்பான்மொழிதந்தருள்கின்றாரிது தான்சேடியென்னேடீ. (சூரு)

தண்ணம்பொழில்சூழொற்றியுளீர்சங்கங்கையிற்சேர்த்திடுமென்றேன்
றிண்ணம்பலமேல்வருங்கையிற்சேர்த்தோமுன்னர்தெரியென்றார்
வண்ணம்பலவிம்மொழிக்கென்றேன்மடவாயுனதுமொழிக்கென்றே
யெண்ணங்கொளநின்றுரைக்கின்றாரிது தான்சேடியென்னேடீ. (சூசூ)

உகஞ்சேரொற்றியூருடையீரொருமாதவரோநீரென்றேன்
முகஞ்சேர்வடிவேலிரண்டுடையாய்மும்மாதவர்நாமென்றுரைத்தார்
சுகஞ்சேர்ந்திடுநும்மொழிக்கென்றேன்றோகாயுனதுமொழிக்கென்றே
யிகஞ்சேர்நயப்பாலுரைக்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (சுஎ)

ஊராமொற்றியீராசையுடையேனென்றேனெமக்கலது
நேராவழக்குத்தொடுக்கின்றாய்நினக்கேதென்றார்நீரெனக்குச்
சேராவணமீதென்றேன்முன்சேர்த்தீதெழுதித்தந்தவர்தாம்
யாரார்மடவாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (சுஅ)

வருத்தந்தவிரீரொற்றியுளீர்மனத்திலகாதமுண்டென்றே
னிருத்தந்தொழுநம்மடியவரைநினைக்கின்றோரைக்காணினது
வுருத்தன்பெயர்முன்னெழுத்திலக்கமுற்றேமற்றவெல்லையகன்
றிருத்தலறியாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (சுகூ)

மையலகற்றீரொற்றியுளீர்வாவென்றுரைப்பீரோவென்றேன்
செய்யவதன்மேற்சிகரம்வைத்துச்செவ்வனுரைத்தாலிருவாவென்
றுய்யவுரைப்பேமென்றார்நும்முரையென்னுரையென்றேனிங்கே
யெய்யுன்னுரையையென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (எ0)

தாவென்றருளுமொற்றியுளீர்தமியேன்மோகதாகமற
வாவென்றருள்வீரென்றேனவ்வாவின்பின்னர்வருமெழுத்தை
மேவென்றதனிற்சேர்த்ததிங்கேமேவினன்றோவாவென்பே
மேவென்றிடுகெண்ணென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (எக)

என்மேலருள்கூர்ந்தொற்றியுளீரென்னையணைவானினைவீரேற்
பொன்மேல்வெள்ளியாமென்றேன்பொன்மேற்பச்சையாங்கதன்மே
லன்மேற்குழலாய்சேயதன்மேலலவனதன்மேஞாயிறஃ
தின்மேலொன்றின்றென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (எஉ)

வயலாரொற்றிமேவுபிடிவாதர்நாமமியாதென்றேன்
மயலாயிடுமிப்பெயர்ப்பின்னர்வந்தவிளையநாமமென்றார்
செயலார்காலமறிந்தென்னைச்சேர்வீரென்றேன்சிரித்துனக்கிங்
கியலாரயலாரென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (எங)

நாலாரணஞ்சூழொற்றியுளீர்நாகம்வாங்கலென்னென்றேன்
காலாங்கிரண்டிற்கட்டவென்றார்கலைத்தோல்வல்லீர்நீரென்றேன்
வேலார்விழிமாப்புலித்தோலும்வேழத்தோலும்வல்லேமென்
றேலாவமுதமுருக்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (எச)

முடியாவளஞ்சூழொற்றியுளீர்முடிமேலிருந்ததென்னென்றேன்
கடியாவுள்ளங்கையின்முதலைக்கடிந்ததென்றார்கமலமென
வடிவார்கரத்திலென்னென்றேன்வளைந்தவதனீறகன்றதென்றே
யிடியாநயத்தினகைக்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (எரு)

ஒன்றும்பெருஞ்சீரொற்றிநகருடையீர்யார்க்குமுணர்வரியீ
ரென்றும்பெரியீர்நீர்வருதற்கென்னநிமித்தமென்றேன்யான்
றுன்றும்விசும்பேகாணென்றார்சூதாமுமதுசொல்லென்றே
னின்றுமுலைதானென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (எசு)

வானோர்வணங்குமொற்றியுளீர்மதிவாழ்சடையீர்மரபிடைநீர்
தானோரென்றேனளிப்பள்ளித்தலைவரெனவேசாற்றினர்கா
ணானொற்றியிருமென்றேனுண்டேயிருந்துவந்தனஞ்சே
யீனாதவணீயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (எஎ)

பற்றுமுடித்தோர்புகழொற்றிப்பதியீர்நுமதுபசுவினிடைக்
கற்றுமுடித்ததென்னிருகைக்கன்றுமுழுதுங்காணென்றேன்
மற்றுமுடித்தமாலையொடுன்மருங்குற்கலையுங்கற்றுமுடிந்
திற்றுமுடித்ததென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (எஅ)

வானங்கொடுப்பீர்திருவொற்றிவாழ்வீரன்றுவந்தெனது
மானங்கெடுத்தீரென்றுரைத்தேன்மாநன்றிஃதுன்மானன்றே
யூனங்கலிக்குந்தவர்விட்டாருலகமறியுங்கேட்டறிந்தே
யீனந்தவிர்ப்பாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (எகூ)

ஞானம்படைத்தயோகியர்வாழ்நகராமொற்றிநலத்தீர்மா
லேனம்புடைத்தீரணையென்பீரென்னையுவந்திப்பொழுதென்றே
னூனந்தவிர்த்தமலர்வாயினுள்ளேநகைசெய்திஃதுரைக்கே
மீனம்புகன்றாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (அ0)

கருமையளவும்பொழிலொற்றிக்கணத்தீர்முனிவர்கலக்கமறப்
பெருமைநடத்தினீரென்றேன்பிள்ளைநடத்தினானென்றார்
தருமமலவிவ்விடையென்றேன்றருமவிடையுமுண்டெம்பா
விருமைவிழியாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (அக)

ஒசியவிடுகுமிடையாரையொற்றியிருந்தேமயக்குகின்ற
வசியர்மிகநீரென்றேனெம்மகன்காணென்றார்வளர்காமப்
பசியதொடையுற்றேனென்றேன்பட்டமவிழ்த்துக்காட்டுதியே
விசையக்காண்பேமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (அஉ)

கலையாளுடையீரொற்றிநின்றீர்காமமளித்தீர்களித்தணைவீர்
மலையாளுமதுமனையென்றேன்மருவின்மலையாளல்லளென்று
ரலையாண்மற்றையவளென்றேனறியினலையாளல்லளுனை
யிலையாமணைவதென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (அங)

சிலம்படைத்தீர்திருவொற்றித்தியாகரேநீர்திண்மையிலோர்
சூலம்படைத்தீரென்னென்றேன்றோன்றுமுலகுய்ந்திடவென்று
ராலங்களத்தீரென்றேனீயாலம்வயிற்றாயன்றோநல்
லேலங்குழலாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (அச)

ஞாலநிகழும்புகழொற்றிநடத்தீர்நீர்தானுட்டமுறும்
பாலரலவோவென்றேனெம்பாலர்பாலைப்பருவத்திற்
சாலமயல்கொண்டிடவருமோர்தனிமைப்பாலரியாமென்றே
யேலமுறுவல்புரிகின்றாரிதுதான்சேடியென்னேடீ. (அரு)

வண்மைதருவீரொற்றிநகர்வாழ்வீரொன்னைமருவீரெ
னுண்மையறியீரென்றேனியாமுணர்ந்தேயகலநின்றதென்றார்
கண்மையிலரோநீரென்றேன்களமையுடையேங்கண்மையுற
லெண்மைநீயேயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (அசு)

தவந்தங்கியசீரொற்றிநகர்தனைப்போனினைத்தென்மனையடைந்தி
ருவந்தென்மீதிற்றேவர்திருவுள்ளந்திரும்பிற்றோவென்றேன்
சிவந்தங்கிடநின்னுள்ளமெம்மேற்றிரும்பிற்றதனைத்தேர்ந்தன்றே
யிவர்ந்திங்கணைந்தாமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (அஎ)

ஒன்னார்புரமூன்றெரிசெய்தீரொற்றியுடையீரும்முடைய
பொன்னார்சடைமேல்வெள்ளெருக்கம்பூவைமிலைந்தீரென்னென்றே
னின்னாரளகத்தணங்கேநீநெட்டிமிலைந்தாயிலதுகீ
ழென்னாருலகரென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (அஅ)

கனிமானிதழிமுலைச்சுவகெளித்தீரொற்றிக்காதலர்நீர்
தனிமானேந்தியாமென்றேனடங்கண்மடந்தாய்நின்முகமும்
பனிமானேந்தியாமென்றார்பாைமான்மருவினீரென்றே
னினிமான்மருவியென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ (அகூ)

சிறியேன்றவமோவெனைப்பெற்றார்செய்ததவமோவீண்டடைந்தி
ரறியேனொற்றியடிகேளிங்கடைந்தவாறென்னினைத்தென்றேன்
பொறிநேருனதுபொற்கலையைப்பூவார்கலையாக்குறநினைத்தே
யெறிவேல்விழியாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கூ0)

அளிக்குங்குணத்தீர்திருவொற்றியழகரேநீரணிவேணி
வெளிக்கொண்முடிமேலணிந்ததுதான்விளியாவிளம்பத்திரமென்றேன்
விளிக்குமிளம்பத்திரமுமுடிமேலேமிலைந்தாம்விளங்கிழைநீ
யெளிக்கொண்டீயேலென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கூக)

வாசங்கமழுமலர்ப்பூங்காவனஞ்சூழொற்றிமாநகரீர்
நேசங்குறிப்பதென்னென்றேனீயோவமோவுரையென்றார்
தேசம்புகழ்வீர்யானென்றேன்றிகழ்தைத்திரிதித்திரியேயா
மேசங்குறிப்பதென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கூஉ)

பேசுங்கமலப்பெண்புகழும்பெண்மையுடையபெண்களெல்லாங்
கூசும்படியிப்படியொற்றிக்கோவேவந்ததென்னென்றேன்
மாசுந்தரிநீயிப்படிக்குமயங்கும்படிக்குமாதருனை
யேசும்படிக்குமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கூங

கொடியாலெயில்சூழொற்றியிடங்கொண்டீரடிகள்குருவுருவாம்
படியாலடியிலிருந்தமறைப்பண்பையுரைப்பீரென்றேனின்
மடியாலடியிலிருந்தமறைமாண்பைவகுத்தாயெனிலதுநா
மிடியாதுரைப்பேமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கூச)

என்னேருளத்தினமர்ந்தீர்நல்லெழிலாரொற்றியிடையிருந்தீ
ரென்னேயடிகள்பலியேற்றலேழ்மையுடையீர்போலுமென்றே
னின்னேகடலினிடைநீபத்தேழ்மையுடையாய்போலுமென
வின்னேயங்கொண்டுரைக்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (சு௫)

நல்லார்மதிக்குமொற்றியுளீர்நண்ணுமுயிர்கடொறுநின்றீ
ரெல்லாமறிவீரென்னுடையவிச்சையறியீர்போலுமென்றேன்
வல்லாயறிவின்மட்டொன்றுமனமட்டொன்றுவாய்மட்டொன்
றெல்லாமறிந்தேமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கூசு)

மறிநீர்ச்சடையீர்சித்தெல்லாம்வல்லீரொற்றிமாநகரீர்
பொறிசேருமதுபுகழ்பலவிற்பொருந்துங்குணமேவேண்டுமென்றேன்
குறிநேரெமதுவிற்குணத்தின்குணத்தாயதனால்வேண்டுற்று
யெறிவேல்விழியாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கூஎ)

ஊரூரிருப்பீரொற்றிவைத்தீரூர்தான்வேறுண்டோவென்றே
னேரூர்வழக்கிற்கரியையிறையுன்னிவினவுமூரொன்றே
பேரூர்தில்லையூர்பெரும்புலியூர்பிடவூர்கடவூர்முதலாக
வேரூரனந்தமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கூஅ)

விழியொண்ணுதலீரொற்றியுளீர்வேதம்பிறவியிலரென்றே
மொழியுநுமைத்தான்வேயீன்றமுத்தரெனவிங்கென்னென்றேன்
பழியன்றணங்கேயவ்வேய்க்குப்படுமுத்தொருவித்தன்றதனு
விழியும்பிறப்போவென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கூகூ)

விண்ணார்பொழில்சூழொற்றியுளீர்விளங்குந்தாமமிருவாசத்
தண்ணார்மலர்வேதனையொழிக்கத்தருதல்வேண்டுமெனக்கென்றேன்
பண்ணார்மொழியாயுபகாரம்பண்ணுப்பகைவரேனுமிதை
யெண்ணாரெண்ணரென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க00)

செம்பான்மொழியார்முன்னரெனைச்சேர்வீரென்கோதிருவொற்றி
யம்பார்சடையீருமதாடலறியேனருளல்வேண்டுமென்றேன்
வம்பார்முலையாய்காட்டுகின்றுமன்னும்பொன்னரம்பலத்தே
யெம்பால்வாவென்றுரைக்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க0க)

மைக்கொண்மிடற்றீரொற்றிவைத்தீருண்டோமனையென்றேன்
கைக்கணிறைந்ததனத்தினுந்தங்கண்ணிறைந்தகணவனையே
துய்க்குமடவார்விழைவரெனச்சொல்லும்வழக்கீதறிந்திலையோ
வெய்க்குமிடையாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க0உ)

ஆறுமுகத்தார்தமையீன்றவைந்துமுகத்தாரிவர்சமைநான்
மாறுமுகத்தார்போலொற்றிவைத்தீர்பதியையென்னென்றே
னூறுமலர்ப்பூங்குழனீயோகாமோவைத்ததுன்மொழிமன்
றேறுமொழியன்றென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க0ரு)

வள்ளன்மதியோர்புகழொற்றிவள்ளாலுமதுமணிச்சடையின்
வெள்ளமகண்மேற்பிள்ளைமதிவிளங்கலழகீதென்றேனின்
னுள்ளமுகத்தும்பிள்ளைமதியொளிகொண்முகத்தும்பிள்ளைமதி
யெள்ளலுடையாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க0சு)

உள்ளத்தணையேபோலன்பருவக்குந்திருவாழொற்றியுளீர்
கள்ளத்தவர்போலிவணிற்குங்கருமமென்னீரின்றென்றேன்
மெள்ளக்கரவுசெயவோநாம்வேடமெடுத்தோநின்சொனினை
யெள்ளப்புரிந்ததென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க0ஞு)

அச்சையடக்குந்திருவொற்றியவர்க்கோர்பிச்சைக்கொடுமென்றேன்
விச்சையடக்கும்படிநம்பான்மேவினோர்க்கிவ்வகிலநடைப்
பிச்சையெடுப்பேமலதுன்போற்பிச்சைக்கொடுப்பேமலவென்றே
யிச்சையெடுப்பாயுனைக்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க0சு)

அள்ளற்பழனத்திருவொற்றியழகரிவர்தம்முகநோக்கி
வெள்ளச்சடையீருள்ளத்தேவிருப்பேதுரைத்தாற்றருவலென்றேன்
கொள்ளக்கிடையாவலர்குமுதங்கொண்டவமுதங்கொணர்ந்தின்னு
மெள்ளத்தனைதாவென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க0எ)

விஞ்சுநெறியீரொற்றியுளீர்வியந்தீர்வியப்பென்னிவணென்றேன்
கஞ்சமிரண்டுநமையங்கேகண்டுகுவிந்தவிரிந்திங்கே
வஞ்சவிருதாமரைமுகையைமறைக்கின்றனநின்பால்வியந்தா
மெஞ்சலறநாமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க0அ)

அளியாரொற்றியுடையாருக்கன்னநிரம்பவிடுமென்றே
னளியார்குழலாய்பிடியன்னமளித்தாற்போதுவாங்கதுநின்
றெளியார்சிலம்புசூழ்கமலத்துளதாற்சடசஞ்சூழ்கமலத்
தெளியார்க்கிடுநீயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க0கூ)

விச்சைப்பெருமானெனுமொற்றிவிடங்கப்பெருமானீர்முன்னம்
பிச்சைப்பெருமானின்றுமணப்பிள்ளைப்பெருமானுமென்றே
னச்சைப்பெறுநீயம்மணப்பெண்ணாகியிடையிலையங்கொள்
ளிச்சைப்பெறும்பெண்ணென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கக0)

படையம்புயத்தோன்புகழொற்றிப்பதியீரரவப்பணிசுமந்தீர்
புடையம்புயத்திலென்றேன்செம்பொன்னேகொடையம்புயத்தினுநன்
னடையம்புயத்துஞ்சுமந்தனைநீநாணுவரவப்பணிமற்று
மிடையம்பகத்துமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ககக)

கூம்பமவொற்றியூருடையீர்கொடும்பாம்பணிந்தீரென்னென்றே
னோம்பாதுனைக்கிற்பார்த்திடினுள்ளுன்னில்விடமேற்றுன்னிடைக்கீழ்ப்
பாம்பாவதுவேகொடும்பாம்பெம்பணிப்பாம்பதுபோற்பாம்பலவென்
றேம்பாசிற்பவிசைக்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ககஉ)

புயல்சூழொற்றியுடையீரென்புடையென்குறித்தோபோந்ததென்றேன்
கயல்சூழ்விழியாய்தனத்தவனைக்காணவிரப்போரெதற்கென்றார்
மயல்சூழ்தனமிங்கிலையென்றேன்மறையாதெதிர்வைத்திலையென்ற
லியல்சூழறமன்றென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ககங)

நடவாழ்வொற்றியுடையீர்நீர்நாகமணிந்ததழகென்றேன்
மடவாயதுநீர்நாகமெனமதியேலயன்மான்மனனடங்க
விடவாயுமிழும்படநாகம்வேண்டிற்காண்டியென்றேயென்
னிடவாயருகேவருகின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ககச)

கோடாவொற்றியுடையீர்நுங்குலந்தான்யாதோகூறுமென்றேன்
வீடார்பிரமகுலந்தேவர்வேந்தர்குலநல்வினைவசியப்
பாடார்குலமோர்சக்கரத்தான்பள்ளிக்குலமெல்லாமுடையே
மேடார்குழலாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ககரு)

நலமாமொற்றியுடையீர்நீர்நல்லவழகரானாலுங்
குலமேதுமக்குமாலையிடக்கூடாதென்றேனின்குலம்போ
லுலகோதுறுநங்குலமொன்றோவோராயிரத்தெட்டியர்குலமிங்
கிலகாநின்றதென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ககசு)

மதிலொற்றியினீர்நும்மனையாண்மலையின்குலநும்மைந்தருளோர்
புதல்வர்க்கானைப்பெருங்குலமோர்புதல்வர்க்கிசையம்புலிகுலமா
மெதிரற்றருள்வீர்நுங்குலமிங்கெதுவோவென்றேன்மனைவியருள்
ளிதுமற்றொருத்திக்கென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ககஎ)

தேமாம்பொழில்சூழொற்றியுளீர்திகழுந்தகரக்காற்குலத்தைப்
பூமானிலத்தில்விழைந்துற்றீர்புதுமையிஃதும்புகழென்றே
னுமாகுலத்திலனைக்குளத்துள்ளணைந்தேபுறமற்றனைக்குலங்கொண்
டேமாந்தனைநீயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ககஅ)

அனஞ்சூழொற்றிப்பதியுடையீரகிலமறியமன்றகத்தே
மனஞ்சூழ்தகரக்கால்கொண்டீர்வனப்பாமென்றேனுலகறியத்
தனஞ்சூழகத்தேயணங்கேநீதானுந்தகரத்தலைகொண்டா
யினஞ்சூழழகாமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (ககக)

பங்கேருகப்பூம்பணையொற்றிப்பதியீர்நடவெம்பரமென்னு
மங்கேயாட்டுக்காலெடுத்தீரழகென்றேனவ்வம்பரமே
லிங்கேயாட்டுத்தோலெடுத்தாயாமொன்றிரண்டுநீயென்றா
லெங்கேநின்சொல்லென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கஉ0)

மாணப்புகழ்சேரொற்றியுளீர்மன்றார்தகரவித்தைதனைக்
காணற்கினிநான்செயலென்னேகருதியுரைத்தல்வேண்டுமென்றேன்
வேணச்சுறுமெல்லியலேயாம்விளம்புமொழியவ்வித்தையுனக்
கேணப்புகலுமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கஉக)

நல்லாரொற்றியுடையீர்யானடக்கோவெறும்பூவணையணைய
வல்லாலவனும்முடன்வருகோவணையாதவலத்துயர்துய்க்கோ
செல்லாவென்சொன்னடவாதோதிருக்கூத்தெதுவோவெனவிடைக
ளெல்லாநடவாதென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கஉஉ)

ஆட்டுத்தலைவர்நீரொற்றியழகீரதனாற்சிறுவிதிக்கோ
ராட்டுத்தலைதந்தீரென்றேனன்றாலறவோரறம்புகல
வாட்டுத்தலைமுன்கொண்டதனாலஃதேபின்னரளித்தாமென்
றீட்டுத்தரமீந்தருள்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கஉங)

ஒற்றிப்பெருமானுமைவிழைந்தாரூரில்வியப்பொன்றுண்டிரவிற்
கொற்றக்கமலம்விரிந்தொருகீழ்க்குளத்தேகுமுதங்குவிந்ததென்றேன்
பொற்றைத்தனத்தீர்நுமைவிழைந்தார்புரத்தேமதியந்தேய்கின்ற
தெற்றைத்தினத்துமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கஉச)

இடஞ்சேரொற்றியுடையீர்நீரென்னசாதியினரென்றேன்
தடஞ்சேர்முலையாய்நாந்திறலாண்சாதிநீபெண்சாதியென்றார்
விடஞ்சேர்களத்தீர்நும்மொழிதான்வியப்பாமென்றேனயப்பாநின்
னிடஞ்சேர்மொழிதானென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கஉரு)

உடையாரொன்பாருமையொற்றியுடையீர்பணந்தானுடையீரோ
நடையாயேற்கின்றீரொன்றேனங்காய்நின்போலொருபணத்தைக்
கடையாரெனக்கீழ்வைத்தருமைகாட்டேம்பணிகொள்பணங்கோடி
யிடையாதுடையேமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கஉசா)

என்னாருயிர்க்குப்பெருந்துணையாமெங்கள்பெருமானீரிருக்கு
நன்னாடொற்றியன்றோதானவிலவேண்டுமென்றுரைத்தேன்
முன்னாளொற்றியெனினுமதுமொழிதலழகோதாழ்தலுயர்
விந்நானிலத்துண்டென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கஉஎ)

பெருந்தாரணியோர்புகழொற்றிப்பெருமானிவர்தம்முகநோக்கி
யருந்தாவமுதமனையீரிங்கடுத்தபரிசேதறையுமென்றேன்
வருந்தாதிங்கேயருந்தமுதமனையளாகவாழ்வினொடு
மிருந்தாயடைந்தேமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கஉஅ)

செம்மைவளஞ்சூழொற்றியுளீர்திகழாக்கரித்தோலுடுத்தீரே
யும்மைவிழைந்தமடவார்களுடுக்கக்கலையுண்டோவென்றே
னெம்மையறியாயொருகலையோவிரண்டோவனந்தங்கலைமெய்யி
லிம்மையுடையேமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கஉகூ)

கற்றைச்சடையீர் திருவொற்றிக்காவலுடையீரிங்கடைந்தீ
ரிற்றைப்பகலேநன்றென்றேனிற்றையிரவேநன்றெமக்குப்
பொற்றைத்தனத்தாய்கையமுதம்பொழியாதலர்வாய்ப்புத்தமுத
மிற்றைக்களித்தாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩௯௦)

கற்றீரொற்றீர்முன்பொருவான்காட்டிற்கவர்ந்தோர்நாட்டில்வளை
விற்றீரின்றென்வளைகொண்டீர்விற்கத்துணிந்தீரோவென்றேன்
மற்றீர்ங்குழலாய்நீயெம்மோர்மனையின்வளையைக்கவர்ந்துகளத்
திற்றீதணிந்தாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩௯௧)

உடுக்கும்புகழாரொற்றியுளாருடைதாவென்றார் திகையெட்டு
முடுக்கும்பெரியீரேதுகண்டோவுரைத்தீரென்றேன்றிகைமுழுது
முடுக்கும்பெரியவரைச்சிறியவொருமுன்றானையான்மூடி
யெடுக்குந்திறங்கண்டென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩௯௨)

காவாயொற்றிப்பதியுடையீர்கல்லானைக்குக்கரும்பன்று
தேவாய்மதுரையிடத்தளித்தசித்தரலவோநீரென்றேன்
பாவாயிருகல்லானைக்குப்பரிவிற்கரும்பிங்கிரண்டொருநீ
யீவாயிதுசித்தென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩௯௩)

ஊட்டுந்திருவாமொற்றியுளீருயிரையுடலாஞ்செப்பிடைவைத்
தாட்டுந்திறத்தீர்நீரென்றேனணங்கேயிருசெப்பிடையாட்டுந்
தீட்டும்புகழன்றியுமுலகைச்சிறிதோர்செப்பிலாட்டுகின்றா
யீட்டுந்திறத்தாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩௯௪)

கந்தவனஞ்சூழொற்றியுளீர்கண்மூன்றுடையீர்வியப்பென்றேன்
வந்தவெமைத்தான்பிரிபோதுமற்றையவரைக்காண்போதுஞ்
சந்தமிருங்கண்ணிருமூன்றுந்தருநான்கொன்றுந்தானடைந்தா
யிந்தவியப்பென்னென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩௯௫)

ஆழிவிடையீர்திருவொற்றியமர்ந்தீரிருவர்க்ககமகிழ்வான்
வீழியதனிற்படிக்காசுவேண்டியளித்தீராமென்றேன்
வீழியதனிற்படிக்காசுவேண்டாதளித்தாயளவொன்றை
யேழிலகற்றியென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩௯௬)

உற்றவிடத்தேபெருந்துணையாமொற்றிப்பெருமானும்புகழைக்
கற்றவிடத்தேமுக்கனியுங்கரும்புமமுதுங்கயவாவோ
மற்றவிடச்சீரென்னென்றேன்மற்றையுபயவிடமுமுத
லெற்றவிடமேயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩௯௭)

யான்செய்தவத்தின்பெரும்பயனேயென்னாரமுதேயென்றுணையே
வான்செயரசேதிருவொற்றிவள்ளால்வந்ததென்னென்றேன்
மான்செய்விழிப்பெண்ணேநீயாண்வடிவானதுகேட்டுள்ளம்வியந்
தேன்கண்டிடவேயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௩௯௮)

கருணைக்கடலேயென்னிரண்டுகண்ணேமுக்கட்கரும்பேசெவ்
வருணப்பொருப்பேவளரொற்றிவள்ளன்மணியேமகிழ்ந்தணையத்
தருணப்பருவமிஃதென்றேன்றவிரன்றெனக்காட்டியதுன்ற
னிருணச்சளகமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௧௩௯)

காவிக்களங்கொள்கனியேயென்கண்ணுண்மணியேயணியேயென்
னாவித்துணையேதிருவொற்றியரசேயடைந்ததென்னென்றேன்
பூவிற்பொலியுங்குழலாய்நீபொன்னினுயர்ந்தாயெனக்கேட்டுன்
னீவைக்கருதியென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௧௪௦)

கண்ணுமனமுங்களிக்குமெழிற்கண்மூன்றுடையீர்கலையுடையீர்
நண்ணுந்திருவாழொற்றியுளீர்நடஞ்செய்வல்லீர்நீரென்றேன்
வண்ணமுடையாய்நின்றனைப்போன்மலர்வாய்நடஞ்செய்வல்லோமோ
வெண்ணவியப்பாமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௧௪௧)

தாங்கும்விடைமேலழகீரொன்றன்னைக்கலந்துந்திருவொற்றி
யோங்குந்தளியிலொளித்தீர்நீரொளிப்பில்வல்லராமென்றேன்
வாங்குநுதலாய்நீயுமெனைமருவிக்கலந்துமலர்த்தளியி
லீங்கின்றொளித்தாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௧௪௨)

அம்மையடுத்ததிருமேனியழகீரொற்றியணிநகரீ
ரும்மையடுத்தோர்மிகவாட்டமுறுதலழகோவென்றுரைத்தேன்
நம்மையடுத்தாய்நமையடுத்தோர்நம்போலுறுவரன்றெனிலே
தெம்மையடுத்ததென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௧௪௩)

உண்கண்மகிழ்வாலளிமிழற்றுமொற்றிநகரீரொருமூன்று
கண்களுடையீரென்காதல்கண்டுமிரங்கீரென்னென்றேன்
பண்கொண்மொழியாய்நின்காதல்பன்னாண்சுவைசெய்பழம்போலு
மெண்கொண்டிருந்ததென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௧௪௪)

வணங்கேழிலங்குஞ்செஞ்சடையீர்வளஞ்சேரொற்றிமாநகரீர்
குணங்கேழ்மிடற்றோர்பாலிருளைக்கொண்டீர்கொள்கையென்னென்றே
னணங்கேயொருபாலன்றிநின்போலெம்பாலிருள்கொண்டிடச்சற்று
மிணங்கேமிணங்கேமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௧௪௫)

கரும்பிலினியீரென்னிரண்டுகண்களனையீர்கறைமிடற்றீர்
பெரும்பையணியீர்திருவொற்றிப்பெரியீரெதுநும்பெயரென்றே
னரும்பண்முலையாய்பிறர்கேட்கவறைந்தாலளிப்பீரெனச்சூழ்வ
ரிரும்பொனிலையேயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௧௪௬)

நிலையைத்தவறார்தொழுமொற்றிநிமலப்பெருமானீர்முன்ன
மலையைச்சிலையாக்கொண்டீர்நும்மாவல்லபமற்புதமென்றேன்
வலையத்தறியாச்சிறுவர்களுமலையைச்சிலையாக்கொள்வர்களி
திலையற்புதந்தானென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (௧௪௭)

உதயச்சுடரேயனையீர்கல்லொற்றியுடையீரென்னுடைய
விதயத்தமர்ந்தீரென்னேயென்னெண்ணமறியீரோவென்றேன்
சுதையிற்றிகழ்வாயறிந்தன்றோதுறந்துவெளிப்பட்டெதிரடைந்தா
மிதையுற்றறிநீயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க௪௮)

புரக்குங்குணத்தீர்திருவொற்றிப்புனிதரோநீர்போர்க்களிற்றை
யுரக்குங்கலக்கம்பெறவுரித்தீருள்ளத்திரக்கமென்னென்றேன்
கரக்குமிடையாய்நீகளிற்றின்கன்றைக்கலக்கம்புரிந்தனைநின்
னிரக்கமிதுவோவென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ: (க௪௯)

பதங்கூறொற்றிப்பதியீர்நீர்பசுவிலேறும்பரிசதுதான்
விதங்கூறறத்தின்விதிதானோவிலக்கோவிளம்பல்வேண்டுமென்றே
னிதங்கூறிடுநற்பசுங்கன்றைநீயுமேறியிடுகின்றா
யிதங்கூறிடுகவென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க௫0)

யோகமுடையார்புகழொற்றியூரிற்பரமயோகியராந்
தாகமுடையாரிவர்தமக்குத்தண்ணீர்தரநின்றனையழைத்தேன்
போகமுடையாய்புறத்தண்ணீர்புரிந்துவிரும்பாமகத்தண்ணீ
ரீகமகிழ்வினென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க௫க)

வளநீரொற்றிவாணரிவர்வந்தார்நின்றார்மாதேநா
முளநீர்த்தாகமாற்றுறநீருதவவேண்டுமென்றார்நான்
குளநீரொன்றேயுளதென்றேன்கொள்ளேமிடைமேற்கொளுமிந்த
விளநீர்தருகவென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க௫௨)

மெய்ந்நீரொற்றிவாணரிவர்வெம்மையுளநீர்வேண்டுமென்றா
ரந்நீரிலைநீர்தண்ணீர்தானருந்திலாகாதோவென்றேன்
முந்நீர்தனையையனையீரிம்முதுநீருண்டுதலைக்கேறிற்
றிந்நீர்காண்டியென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க௫௩)

சீலஞ்சேர்ந்தவொற்றியுளீர்சிறிதாம்பஞ்சகாலத்துங்
கோலஞ்சார்ந்துபிச்சைகொளக்குறித்துவருவீரென்னென்றேன்
காலம்போகும்வார்த்தைநிற்குங்கண்டாயிதுசொற்கடனுமோ
வேலங்குழலாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க௫௪)

ஊற்றார்சடையீரொற்றியுளீருருரிரக்கத்துணிவுற்றீர்.
நீற்றால்விளங்குந்திருமேனிநேர்ந்திங்கிளைத்தீர்நீரென்றேன்
சோற்றாலிளைத்தேமன்றம்துசொல்லாலிளைத்தேமின்றினிநா
மேற்றாலிகழ்வேயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க௫௫)

நீரை விழுங்குஞ்சடையுடையீருளதுநுமக்குநீருருந்
தேரைவிழுங்கும்பசுவென்றேன்செறிநின்கலைக்குளொன்றுளது
காரைவிழுங்குமெமதுபசுக்கன்றின்றேரைநீர்த்தேரை
யீரவிழுங்குமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (க௫௬)

பொன்னேர்மணிமன் றுடையீர்நீர்புரிந்ததெதுவெம்புடையென்றே
னின்னேயுரைத்தற்கஞ்சுதுமென்றுரொன்னென்றேனியம்புதுமேன்
மின்னேநினதுநடைப்பகையாமிருகம்பறவைதமைக்குறிக்கு
மென்னேயுரைப்பதென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கருஎ)

அடையார்புரஞ்செற்றம்பலத்தேயாடுமழகீரெண்பதிற்றுக்
கடையாமுடலின்றலைகொண்டீர்கரமொன்றினிலற்புதமென்றே
னுடையாத்தலைமேற்றலையாகவுன்கையீரைஞ்ஞூறுகொண்ட
திடையாவளைக்கேயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கருஅ)

தேவர்க்கரியவானந்தத்திருத்தாண்டவஞ்செய்பெருமானீர்
மேவக்குருகுகுருகுவணிவேணியுடையீராமென்றேன்
தாவக்குருகுகுருகுகுத்தாமேயைந்துவிளங்கவணி
யேவற்குணத்தாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கருகூ)

கொன்றைச்சடையீர்கொடுங்கோளூர்குறித்தீர்வருதற்கஞ்சுவல்யா
ஞென்றப்பெருங்கோளென்மீதுமுறைப்பாருண்டென்றுணர்ந்தென்றேன்
நன்றப்படியேற்கோளிலியாநகருமுடையேநங்காய்நீ
யின்றச்சுறலென்னென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கசா0)

புரியுஞ்சடையீரமர்ந்திடமூர்புலியூரெனிலெம்போல்வார்க்கு
மூரியும்புலித்தோலுடையீர்போலுறுதற்கியலுமோவென்றேன்
றிரியும்புலியூரன்றுநின்போற்றெரிவையரைக்கண்டிடிற்பயந்தே
யிரியும்புலியூரென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கசாக)

தெவ்வூர்பொடிக்குஞ்சிறுநகையித்தேவர்தமைநானீரிருத்த
லெவ்வூரென்றேனகைத்தணங்கேயேழூர்நாலூரொன்றூர்பின்
னவ்வூர்த்தொகையினிருத்தலரிதாமென்றேன்மற்றதிலொவ்வூ
ரிவ்வூரொடுத்தாயென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கசா௨)

மணங்கொளிதழிச்சடையீர்நீர்வாழும்பதியாதென்றேனின்
குணங்கொண்மொழிகேட்டோரளவுகுறைந்தருயிலாம்பதியென்று
ரணங்கின்மறையூராமென்றேனஃதன்றருளோத்தூரிஃது
மிணங்கவுடையேமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கசாங)

ஆற்றுச்சடையாரிவர்பலியென்றடைந்தார்நுமதூரியாதென்றேன்
சோற்றுத்துறையென்றார்நுடக்குச்சோற்றுக்கருப்பேன்சொலுமென்றேன்
றேற்றுத்திரிவேமன்றுநின்போற்சொல்லுங்கருப்பென்றலகியம்ப
வேற்றுத்திரியேமென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கசாச)

ஓங்குஞ்சடையீர்நெல்வாயலுடையேமென்றீருடையீரேற்
றூங்கும்புகழ்நும்மிடைச்சிறுமைசார்ந்ததெவனீர்சாற்றுமென்றே
னேங்கும்படிநும்மிடைச்சிறுமையெய்திற்றலதீண்டெமக்கின்று
லீங்குங்காண்டிரென்கின்றாரிதுதான்சேடியென்னேடீ. (கசாரு)

திருச்சிற்றம்பலம்.

---

## இங்கிதமாலை முற்றிற்று.

முதற்றிருமுறை முற்றிற்று.

---

உ

சிவமயம்.

சிவகணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பா.

# இரண்டாவது திருமுறை.

## புண்ணியவிளக்கம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பாடற்கினியவாக்களிக்கும்பாலுஞ்சோறும்புரிந்தளிக்குங்
கூடற்கினியவடியவர்தங்கூட்டமளிக்குங்குணமளிக்கு
மாடற்கினியநெஞ்சேநீயஞ்சேலென்மேலாணைகண்டாய்
தேடற்கினியசீரளிக்குஞ்சிவாயநமவென்றிடுநீறே. (க)

கருமாலகற்றும்பிறப்பதனைக்களையுநெறியுங்காட்டுவிக்கும்
பெருமாலதனுண்மயக்குகின்றபேதைமடவார்நசையறுக்கு
மறுமாலுழந்தநெஞ்சேநீயஞ்சேலென்மேலாணைகண்டாய்
திருமாலயனுந்தொழுதேத்துஞ்சிவாயநமவென்றிடுநீறே. (உ)

வெய்யவினையின்வேரறுக்குமெய்ம்மைஞானவீட்டிலடைந்
துய்யவமலநெறிகாட்டுமுன்னற்கரியவுணர்வளிக்கு
மையமடைந்தநெஞ்சேநீயஞ்சேலென்மேலாணைகண்டாய்
செய்யமலர்க்கண்மால்போற்றுஞ்சிவாயநமவென்றிடுநீறே. (ங)

கோலமலர்த்தாட்டுணைவழுத்துங்குலத்தொண்டடையக்கூட்டுவிக்கு
நீலமணிகண்டப்பெருமானிலையையறிவித்தருளளிக்கு
மாலவினையானெஞ்சேநீயஞ்சேலென்மேலாணைகண்டாய்
சீலமளிக்குந்திருவளிக்குஞ்சிவாயநமவென்றிடுநீறே. (ச)

வஞ்சப்புலக்காடெறியவருள்வாளுமளிக்குமகிழ்வளிக்குங்
கஞ்சத்தவனுங்கரியவனுங்காணற்கரியகழலளிக்கு
மஞ்சிற்புகுந்தநெஞ்சேநீயஞ்சேலென்மேலாணைகண்டாய்
செஞ்சொற்புலவர்புகழ்ந்தேத்துஞ்சிவாயநமவென்றிடுநீறே. (ரு)

கண்கொண்மணியைமுக்கனியைக்கரும்பைக்கரும்பின்கட்டிதனை
விண்கொளமுதைநம்மரசைவிடைமேனமக்குத்தோற்றுவிக்கு
மண்கொள்வினையாநெஞ்செநீயஞ்சேலென்மேலாணைகண்டாய்
திண்கொண்முனிவர்சுரர்புகழுஞ்சிவாயநமவென்றிடுநீறே. (சு)

நோயையறுக்கும்பெருமருந்தைநோக்கற்கரியநுண்மைதனைத்
தூயவிடைமேல்வருநமதுசொந்தத்துணையைத்தோற்றுவிக்கு
மாயவினையானெஞ்சேநீயஞ்சேலென்மேலாணைகண்டாய்
சேயவயன்மாறைடரிதாஞ்சிவாயநமவென்றிடுநீறே. (எ)

எண்ணவினியவின்னமுதையின்பக்கருணைப்பெருங்கடலை
யுண்ணமுடியாச்செழுந்தேனையொருமால்விடைமேற்காட்டுவிக்கு
மண்ணவினையானெஞ்சேநீயஞ்சேலென்மேலாணைகண்டாய்
திண்ணமளிக்குந்திறமளிக்குஞ்சிவாயநமவென்றிடுநீறே. (அ)

சிந்தாமணியைநாம்பலநாடேடியெடுத்தசெல்வமதை
யிந்தார்வேணிமுடிக்கனியையின்றேவிடைமேல்வரச்செயுங்கா
ணங்தோவினையானெஞ்சேநீயஞ்சேலென்மேலாணைகண்டாய்
செந்தாமரையோன்றொழுதேத்துஞ்சிவாயநமவென்றிடுநீறே. (கூ)

உள்ளத்தெழுந்தமகிழ்வைநமக்குற்றதுணையையுள்ளுறவைக்
கொள்ளக்கிடையாமாணிக்கக்கொழுந்தைவிடைமேற்கூட்டுவிக்கு
மள்ளற்றுயரானெஞ்சேநீயஞ்சேலென்மேலாணைகண்டாய்
தெள்ளக்கடலான்புகழ்ந்தேத்துஞ்சிவாயநமவென்றிடுநீறே. (கo)

உற்றவிடத்திலுதவநமக்குடையோர்வைத்தவைப்பதனைக்
கற்றமனத்திற்புகுங்கருணைக்கனியைவிடைமேற்காட்டுவிக்கு
மற்றமடைந்தநெஞ்சேநீயஞ்சேலென்மேலாணைகண்டாய்
செற்றமகற்றித்திறலளிக்குஞ்சிவாயநமவென்றிடுநீறே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

# அருணமவிளக்கம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வாங்குவின்னுதன்மங்கையர்விழியான்மயங்கிவஞ்சர்பால்வருந்திநாடோறு
மேங்குகின்றதிலென்பயன்கண்டாயெழில்கொளொற்றியூர்க்கென்னுடன்போந்து
தேங்குலாவுசெங்கரும்பினுமினிதாய்த்தித்தித்தன்பர்தஞ்சித்தத்துள்ளூறி
யோங்குமோஞ்சிவசண்முகசிவவோமோஞ்சிவாயவென்றுன்னுதிமனனே. (க)

தவமதின்றிவன்மங்கையர்முயக்காற்றருமமின்றுவஞ்சகர்கடுஞ்சார்வா
லிவகையான்மிகவருந்துறிலென்னுமெழில்களொற்றியூர்க்கென்னுடன்போந்து
பவமதோட்டிநல்லானந்தவுருவாம்பாங்குகாட்டிநற்பதந்தருமடியா
ருவகையோஞ்சிவசண்முகசிவவோமோஞ்சிவாயவென்றுன்னுதிமனனே. (உ)

மின்னுநுண்ணிடைப்பெண்பெரும்பேய்கள்வெய்யநீர்க்குழிவிழுந்ததுபோக
வின்னும்வீழ்கலையுனக்கொன்றுசொல்வேனெழில்கொளொற்றியூர்க்கென்னுடன்போ
பொன்னுலாவியபுயமுடையானும்புகழுலாவியபூவுடையானு [ந்து
முன்னுமோஞ்சிவசண்முகசிவவோமோஞ்சிவாயவென்றன்னுதிமனனே. (ங)

பொன்றும்வாழ்க்கையைநிலையெனநினைத்தேபுலையமங்கையர்புழுநெளியளற்றி
லென்றும்வீழ்ந்துழன் மடமையைவிடுத்தேயெழில்களொற்றியூர்க்கென்னுடன்
துன்றுதீம்பலாச்சுளையினுமினிப்பாய்த்தொண்டர்தங்கணுச்சுவைபெறவூறி [போந்து
யொன்றுமோஞ்சிவசண்முகசிவவோமோஞ்சிவாய்வென்றன்னுதிமனனே. (ச)

வளைக்குநேர்முலைமங்கையர்மயலான்மயங்கிவஞ்சரால்வருத்தமுற்றனுரா
மிளைக்குமாக்கடலிடைவிழுந்தயரேலெழில்கொளொற்றியூர்க்கென்னுடன்போந்து
களைக்குந்தெள்ளியவமுதமோதேனேகனிகொலோவெனக்கனிவுடனுயர்ந்தோ
ருளைக்குமோஞ்சிவசண்முகசிவவோமோஞ்சிவாயவென்றன்னுதிமனனே. (ரு)

வாதுசெய்ம்மடவார்தமைவிழைந்தாய்மறலிவந்துனைவாவெனவழைக்கி
லேதுசெய்வையோவேழைநீயந்தோவெழில்கொளொற்றியூர்க்கென்னுடன்போந்து
போதுவைகியநான்முகன்மகவான்புணரிவைகியபூமகள்கொழுந
னேதுமோஞ்சிவசண்முகசிவவோமோஞ்சிவாயவென்றன்னுதிமனனே. (சா)

நண்ணுமங்கையர்புழுமலக்குழியினுளும்வீழ்வுற்றுநலிந்திடேனிதமா
யெண்ணுமென்மொழிகுருமொழியாகவெண்ணியொற்றியூர்க்கென்னுடன்போந்து
பண்ணுமின்சுவையமுதினுமினிதாய்ப்பத்தர்நாவொறுஞ்சித்தமுள்ளூற
வுண்ணுமோஞ்சிவசண்முகசிவவோமோஞ்சிவாயவென்றன்னுதிமனனே. (எ)

பந்தவண்ணமாமடந்தையர்மயக்காற்பசையினெஞ்சராற்பரிவுறுகின்ற
யெந்தவண்ணநீயுய்வணமந்தோவெழில்கொளொற்றியூர்க்கென்னுடன்போந்து
சந்தமாம்புகழடியரிற்கூடிச்சனனமென்னுமோர்சாகரநீந்தி
யுந்தவோஞ்சிவசண்முகசிவவோமோஞ்சிவாயவென்றன்னுதிமனனே. (அ)

மட்டின்மங்கையர்கொங்கையைவிழைந்தாய்மட்டிலாததோர்வன்றுயரடைந்தா
யெட்டியன்னர்பாலிரந்தலைகின்றுயெழில்கொளொற்றியூர்க்கென்னுடன்போந்து
தட்டிலாதநற்றவத்தவர்வானோர்சார்ந்துங்காண்கிலாத்தற்பரம்பொருளை
யொட்டியோஞ்சிவசண்முகசிவவோமோஞ்சிவாயவென்றன்னுதிமனனே. (கூ)

நிலவுமொண்மதிமுகத்தியர்க்குழன்றுய்நீசநெஞ்சர்தநெடுங்கடைதனிற்போ
யிலவுகாத்தனையென்னைநின்மதியோவெழில்கொளொற்றியூர்க்கென்னுடன்போந்து
பலவுமாய்ந்துநன்குண்மையையுணர்ந்தபத்தருள்ளகப்பதுமங்கடோறு
முலவுமோஞ்சிவசண்முகசிவவோமோஞ்சிவாயவென்றன்னுதிமனனே. (கo)

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீசிவசண்முகநாமஸங்கீர்த்தனலகரி.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பழுதுநேர்கின்றவஞ்சகர்கடைவாய்ப்பற்றிநின்றதிற்பயனெதுகண்டாய்
பொழுதுபோகின்றதெழுதியென்னெஞ்சேபொழிகளொற்றியம்புரிதனக்கேகித்
தொழுதுசண்முகசிவசிவவெனநந்தோன்றலார்தமைத்துதித்தவர்திருமுன்
பழுதுசொல்லுதுமையுறலென்மேலாணைகாணவரருள்பெறலாமே. (க)

சூதுநேர்கின்றமுலைச்சியர்பொருட்டாச்சுற்றிநின்றதிற்சுகமெதுகண்டாய்
போதுபோகின்றதெழுதியென்னெஞ்சேபொழில்கொளொற்றியம்புரிதனக்கேகி
யோதுசண்முகசிவசிவவெனவேயுன்னிநெக்குவிட்டுருகிநந்துயரா
மீதுசொல்லுதுமையுறலென்மேலாணைகாணவரருள்பெறலாமே. (உ)

ஞாலஞ்செல்கின்றவஞ்சகர்கடைவாய்நண்ணிநின்றதினலமெதுகண்டாய்
காலஞ்செல்கின்றதெழுதியென்னெஞ்சேகருதுமொற்றியங்கடிநகர்க்கேகிக்
கோலஞ்செய்யருட்சண்முகசிவவோங்குழகவோவெனக்கூவிநந்துயரா
மாலஞ்சொல்லுதுமையுறலென்மேலாணைகாணவரருள்பெறலாமே. (ங)

மருட்டிவஞ்சகமதித்திடுங்கொடியார்வாயல்காத்தின்னும்வருந்திலென்பயனே
விருட்டிப்போகின்றதெழுதியென்னெஞ்சேயெழில்கொளொற்றியூரொனுந்தலத்தேகித்
தெருட்டிறஞ்செயுஞ்சண்முகசிவவோஞ்சிவநமாவெனச்செப்பிநந்துயரா
மரிட்டையோதுதுமையுறலென்மேலாணைகாணவரருள்பெறலாமே. (ச)

இல்லையென்பதேபொருளெனக்கொண்டோரீனவாயிலிலிடர்ப்படுகின்று
யெல்லைசெல்கின்றதெழுதியென்னெஞ்சேயெழில்கொளொற்றியூரொனுந்தலத்தேகித்
தொல்லையோஞ்சிவசண்முகசிவவோந்தூயவென்றடிதொழுதுநாமுற்ற
வல்லலோதுதுமையுறலென்மேலாணைகாணவரருள்பெறலாமே. (ரு)

கரவுநெஞ்சினர்கடைத்தலைக்குழன்றுய்கலங்கியின்னுநீகலுழ்ந்திடிற்கடிதே
யிரவுபோந்திடுமெழுதியென்னெஞ்சேயெழில்கொளொற்றியூரொனுந்தலத்தேகிப்
பரவுசண்முகசிவசிவசிவவோம்பரசுயம்புசங்கரசம்புநமவோ
மரவென்றேத்துதுமையுறலென்மேலாணைகாணவரருள்பெறலாமே. (சா)

எய்ந்துவஞ்சகர்கடைத்தலைவருந்தியிருக்கின்றுயினியிச்சிறுபொழுதுஞ்
சாய்ந்துபோகின்றதெழுதியென்னெஞ்சேதகைகொளொற்றியந்தலத்தினுக்கேகி
வாய்ந்துசண்முகநமசிவசிவவோம்வரசுயம்புசங்கரசம்புவெனவெ
யாய்ந்துபோற்றுதுமையுறலென்மேலாணைகாணவரருள்பெறலாமே. (எ)

ஈர்ந்தநெஞ்சினரிடந்தனிலிருந்தேயிடர்கொண்டாயினியிச்சிறுபொழுதும்
பேர்ந்துபோகின்றதெழுதியென்னெஞ்சேபிறங்குமொற்றியம்பெருநகர்க்கேகி
யோர்ந்துசண்முகசரவணபவவோமோஞ்சுயம்புசங்கரசம்புவெனவே
யார்ந்துபோற்றுதுமையுறலென்மேலாணைகாணவரருள்பெறலாமே. (அ)

கமைப்பினீகிலாவஞ்சகர்கடையைக்காத்திருக்கலைகடுகியிப்பொழுது
மிமைப்பிற்போகின்றதெழுதியென்னெஞ்சேயெழில்கொளொற்றியூரெனுந்தலத்தேகி
யெமைப்புரந்தசண்முகசிவசிவவோமிறைவசங்கரவரகரவெனவே
யமைப்பினேத்துதுமையுறலென்மேலாணைகாணவரருள்பெறலாமே. (கூ)

உறைந்துவஞ்சர்பால்குறையிரந்தவமேயுழல்கின்றாயினியுரைக்குமிப்பொழுதுங்
குறைந்துபோகின்றதெழுதியென்னெஞ்சேகுலவுமொற்றியங்கோநகர்க்கேகி
நிறைந்தசண்முககுருநமசிவவோநிமலசிற்பரவரகரவெனவே
யறைந்துபோற்றுதுமையுறலென்மேலாணைகாணவரருள்பெறலாமே. (கo)

திருச்சிற்றம்பலம்.

## நமச்சிவாயஸங்கீர்த்தனலகிரி.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

சொல்லவாவியதொண்டர்தம்மனத்திற்சுதந்தரங்கொடுதோன்றியதுணையைக்
கல்லவாவியவேழையேனெஞ்சுங்கரைந்துவந்திடக்கலந்திடுங்களிப்பைச்
செல்லவாவியபொழிற்றிருவொற்றித்தேனைத்தில்லைச்சிற்றம்பலத்தாடு
நல்லவாழ்வினைநான்மறைப்பொருளைநமச்சிவாயத்தைநான்மறவேனே. (க)

அட்டமூர்த்தமதாகியபொருளையண்டராதியோரறிகிலாத்திறத்தை
விட்டவேட்கையர்க்கங்கையிற்கனியைவேதமூலத்தைவித்தகவிளைவை
யெட்டரும்பரமானந்தநிறைவையெங்குமாகிநின்றிலங்கியவொளியை
நட்டமாடியநடனநாயகத்தைநமச்சிவாயத்தைநான்மறவேனே. (உ)

உம்பர்வான்றுயரொழித்தருள்சிவத்தையுலகெலாம்புகழுத்தமப்பொருளைத்
தம்பமாயகிலாண்டமுந்தாங்குஞ்சம்புவைச்சிவதருமத்தின்பயனைப்
பம்புசீரருள்பொழிதருமுகிலைப்பரமஞானத்தைப்பரமசிற்சுகத்தை
நம்பினோர்களைவாழ்விக்குநலத்தைநமச்சிவாயத்தைநான்மறவேனே. (ந)

மாலினுச்சிமேல்வதிந்தமாமணியைவழுத்துநாவகமணக்குநன்மலரைப்
பாலினுள்ளினித்தோங்கியசுவையைப்பத்தர்தம்முளம்பரிசிக்கும்பழத்தை
யாலினோங்கியவானந்தக்கடலையம்பலத்திலாமமுதைவேதங்க
ளாலினொற்றியூரமர்ந்திடுஞ்சிவத்தைநமச்சிவாயத்தைநான்மறவேனே. (ச)

உண்ணிறைந்தெனையொளித்திடுமொளியையுண்ணவுண்ணமேலுவட்டுறாநறவைக்
கண்ணிறைந்ததோர்காட்சியையாவுங்கடந்தமேலவர்கலந்திடுமுறவை
யெண்ணிறைந்தமாலயன்முதற்றேவர்யாருங்காண்கிலாவின்பத்தினிறைவை
நண்ணியொற்றியூரமர்ந்தருள்சிவத்தைநமச்சிவாயத்தைநான்மறவேனே. (ரு)

திக்குமாறினுமெழுகடற்புவிமேற்சென்றுமாறினுஞ்சேண்விளங்கொளிக
ளுக்குமாறினும்பெயலின்றியுலகினுணவுமாறினும்புவிசகளோரேழு
மிக்குமாறினுமண்டங்களெல்லாம்விழுந்துமாறினும்வேதங்களுணரா
நக்கனெம்பிரானருட்டிருப்பெயராநமச்சிவாயத்தைநான்மறவேனே. (சு)

பெற்றதாய்தனைமகமறந்தாலும்பிள்ளையைப்பெறுந்தாய்மறந்தாலு
முற்றதேகத்தையுயிர்மறந்தாலுமுயிரைமேவியவுடன்மறந்தாலுங்
கற்றநெஞ்சகங்கலைமறந்தாலுங்கண்கணின்றிமைப்பதுமறந்தாலு
நற்றவத்தவருள்ளிருந்தோங்குநமச்சிவாயத்தைநான்மறவேனே. (எ)

உடையுடுத்திடவிடைமறந்தாலுமுலகுளோர்பசிக்குணமறந்தாலும்
படையெடுத்தவர்படைமறந்தாலும்பரவைதானலைப்பதுமறந்தாலும்
புடையடுத்தவர்தமைமறந்தாலும்பொன்னைவைத்தவப்புதைமறந்தாலு
நடையடுத்தவர்வழிமறந்தாலுநமச்சிவாயத்தைநான்மறவேனே. (அ)

வன்மைசெய்திடும்வறுமைவந்தாலுமகிழ்வுசெய்பெருவாழ்வுவந்தாலும்
புன்மைமங்கையர்புணர்ச்சிநேர்ந்தாலும்பொருந்திணுநின்றாலுஞ்சென்றாலுந்
தன்மையில்லவர்சார்பிருந்தாலுஞ்சான்றமேலவர்தமையடைந்தாலு
நன்மையென்பனயாவையுமளிக்குநமச்சிவாயத்தைநான்மறவேனே. (கூ)

இன்னும்பற்பலநாளிருந்தாலுமிக்கணந்தனிலேயிறந்தாலுந்
துன்னும்வான்கதிக்கேபுகுந்தாலுஞ்சோர்ந்துமாநரகத்துழன்றாலு
மென்னமேலுமிங்கெனக்குவந்தாலுமெம்பிரானெனக்கியாதுசெய்தாலு
நன்னர்நெஞ்சகநாடிநின்றோங்குநமச்சிவாயத்தைநான்மறவேனே. (க0)

திருச்சிற்றம்பலம்.

# நற்றுணைவிளக்கம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

எஞ்சவேண்டியவைம்புலப்பகையாலிடர்கொண்டோய்ந்தனையென்னினுமினிநீ
யஞ்சவேண்டியதென்னையென்னெஞ்சேயஞ்சலஞ்சல்காணருமறைநான்கு
மிஞ்சவேண்டியுமாலவன்மலரோன்விளங்கவேண்டியுமிடற்றின்கணமுதா
நஞ்சைவேண்டியநாதன்றன்னுமைநமச்சிவாயங்காணும்பெறுந்துணையே. (க)

காவின்மன்னவனெதிர்க்கினுங்காமன்கணைகளேவினுங்காலனேவரினும்
பூவின்மன்னவன்சீறினுந்திருமால்போர்க்குநேரினும்பொருளலநெஞ்சே
யோவின்மாதுயரொற்றினுக்கடைந்தாயொன்றுமஞ்சனீயுளவறிந்திலையோ
நாவின்மன்னரைக்கரைதனிற்சேர்த்தநமச்சிவாயங்காணும்பெறுந்துணையே. (உ)

நீட்டமுற்றதோர்வஞ்சகமடவார்நெடுங்கண்வேல்படநிலையதுகலங்கி
வாட்டமுற்றனையாயினுமஞ்சேல்வாழிநெஞ்சமேமலர்க்கணைதொடுப்பான்
கோட்டமுற்றதோர்நிலையொடுநின்றகொடியகாமனைக்கொளுவியநுதற்றீ
நாட்டமுற்றதோர்நாதன்றன்னுமைநமச்சிவாயங்காணும்பெறுந்துணையே. (ந)

எம்மைவாட்டுமிப்பசியினுக்கெவர்பாலேகுவோமெனவெண்ணலைநெஞ்சே
யம்மவொன்றுநீயறிந்திலைபோலுமாலக்கோயிலுளன்றுசுந்தரர்க்காய்ச்
செம்மைமாமலர்ப்பதங்கணொந்திடவேசென்றுசோறிரந்தளித்தருள்செய்தோ
னம்மையாளுடைநாதன்றன்னுமைநமச்சிவாயங்காணும்பெறுந்துணையே. (ச)

ஓடுகின்றனன்கதிரவனவன்பின்னோடுகின்றனவொவ்வொருநாளாய்
வீடுகின்றனவென்செய்வோமினியவ்வெய்யகூற்றுவன்வெகுண்டிடிலென்றே
வாடுகின்றனையஞ்சலைநெஞ்சேமார்க்கண்டேயர்தம்மாண்பறிந்திலையோ
நாடுகின்றவர்நாதன்றன்னுமநமச்சிவாயங்காணும்பெறுந்துணையே. (ரு)

மலங்குமாலுடற்பிணிகளைநீக்கமருந்துவேண்டினைவாழியென்னெஞ்சே
கலங்குறேலருட்டிருவெண்ணீறெனதுகரத்திருந்ததுகண்டிலைபோலும்
விலங்குறுப்பெருங்காமநோய்தவிர்க்கவிரும்பியேங்கினைவெம்புறேலழியா
நலங்கொள்செஞ்சடைநாதன்றன்னுமநமச்சிவாயங்காணும்பெறுந்துணையே. (சா)

மாலுந்துஞ்சுவான்மலரவனிறப்பான்மற்றைவானவர்முற்றிலுமழிவா
ரோலுநற்றுணையார்நமக்கென்றேயெண்ணிநிற்றியோவேழைநீநெஞ்சே
கோலுமாயிரங்கோடியண்டங்கள்குலையநீக்கியுமாக்கியுமளிக்கு
நாலுமாமறைப்பரம்பொருணமநமச்சிவாயங்காணும்பெறுந்துணையே. (எ)

கந்தவண்ணமாங்கமலன்மான்முதலோர்கண்டிலாவொளிற்கைலையம்பதியை
யெந்தவண்ணநாங்காண்குவதென்றேயெண்ணியெண்ணிநீயேங்கினைநெஞ்சே
யந்தவண்ணவெள்ளானைமேனம்பியமர்ந்துசென்றதையறிந்திலைபோலு
நந்தம்வண்ணமாநாதன்றன்னுமநமச்சிவாயங்காணும்பெறுந்துணையே. (அ)

வீரமாந்தருமுனிவருஞ்சுரருமேவுதற்கொணுவெள்ளியங்கிரியைச்
சேரநாஞ்சென்றுவணங்கும்வாறெதுவோசெப்பென்றேயெனைநச்சியநெஞ்சே
யூரனுடன்சேரனுர்துரங்கமூர்ந்துசென்றவவ்வுளவறிந்திலையோ
நாரமார்மதிச்சடையவனுமநமச்சிவாயங்காணும்பெறுந்துணையே. (கூ)

தலங்கடோறுஞ்சென்றவ்விடையமர்ந்ததம்பிரான்றிருத்தாளிணைவணங்கி
வலங்கொளும்படியென்னையுங்கூடவாவென்கின்றனைவாழியென்னெஞ்சே
யிலங்கடோறுஞ்சென்றிரந்திடுமவனேயென்னையுன்னையுமீர்க்குவனதற்கு
நலங்கொளுந்துணையாதெனிற்கேட்டிநமச்சிவாயங்காணும்பெறுந்துணையே. (கo)

திருச்சிற்றம்பலம்.

# திருவருள்வழக்கவிளக்கம்.

கட்டளைக்கலித்துறை.

**திருச்சிற்றம்பலம்.**

தோடுடையார்புலித்தோலுடையார்கடற்றூங்குமொரு
மாடுடையார்மழுமானுடையார்பிரமன்றலையா
மோடுடையாரொற்றியூருடையார்புகழோங்கியவெண்
காடுடையார்நெற்றிக்கண்ணுடையாரெங்கடவுளரே. (க)

வண்ணப்பன்மாமலர்மாற்றும்படிக்குமகிழ்ந்தெமது
திண்ணப்பர்சாத்துஞ்செருப்படிமேற்கொண்டுதீஞ்சுவைத்தா
யுண்ணப்பரிந்துநல்லூன்றரவுண்டுகண்ணொத்தக்கண்டே
கண்ணப்பநிற்கவெனக்கைதொட்டாரெங்கடவுளரே. (உ)

செல்லிடிக்குங்குரற்கார்மதவேழச்சினவுரியார்
வல்லடிக்குங்கொங்கைமாதொருபாகர்வடப்பொன்வெற்பாம்
வில்லெடுக்குங்கையர்சாக்கியரன் றுவிரைந்தெறிந்த
கல்லடிக்குங்கதிகாட்டினர்காணெங்கடவுளரே. (௩)

ஏழியற்பண்பெற்றமுதோடளாவியிலங்குதமிழ்க்
கேழியற்சம்பந்தரந்தணர்வேண்டக்கிளர்ந்தநற்சீர்
வீழியிற்றம்பதிக்கேவிடைகேட்கவெற்பாளுடனே
காழியிற்றன்னுருக்காட்டினராலெங்கடவுளரே. (௪)

நாட்டிற்புகழ்பெற்றநாவுக்கரசர்முன்னாட்பதிகப்
பாட்டிற்கிரக்கமில்லீரெம்பிரானெனப்பாடவன்றே
யாட்டிற்கிசைந்தமலர்வாழ்த்திவேதமமைத்தமறைக்
காட்டிற்கதவந்திறந்தனராலெங்கடவுளரே. (௫)

பைச்சூரரவப்படநடத்தானயன்பற்பலநா
ளெய்ச்சூர்தவஞ்செய்யினுங்கிடையாப்பதமேய்ந்துமண்மேல்
வைச்சூரன்வன்றொண்டன்சுந்தரனென்னுநம்வள்ளலுக்குக்
கச்சூரிற்சோறிரந்தூட்டினராலெங்கடவுளரே. (௬)

ஏணப்பரிசெஞ்சடைமுதலானவெல்லாமறைத்துச்
சேணப்பரிகணடத்திடுகின்றநற்சேவகன்போன்
மாணப்பரிபவநீக்கியமாணிக்கவாசர்க்காய்க்
காணப்பரிமிசைவந்தனராலெங்கடவுளரே. (௭)

எல்லாஞ்செயவல்லசித்தரின்மேவியெழின்மதுரை
வல்லாரின்வல்லவரொன்றறியாமுடிமன்னன்முன்னே
பல்லாயிரவண்டமும்பயமெய்தப்பராக்கிரமித்துக்
கல்லானைதின்னக்கரும்பளித்தாரெங்கடவுளரே. (௮)

மாலெடுத்தோங்கியமாலயனாதியவானவரு
மாலடுத்தோங்கியவந்தணனேயென்றடைந்திரண்டு
பாலெடுத்தேத்தநம்பார்ப்பதிகாணப்பகர்செய்மன்றிற்
காலெடுத்தாடுங்கருத்தர்கண்டீரெங்கடவுளரே. (௯)

மாற்பதஞ்சென்றபினிந்திரர்நான்முகர்வாமனர்மான்
மேற்பதங்கொண்டவுருத்திரர்விண்ணவர்மேன்மற்றுள்ளோ
ராற்பதங்கொண்டபல்லாயிரங்கோடியண்டங்களெல்லாங்
காற்பதமொன்றிலொடுக்கிநிற்பாரெங்கடவுளரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# சிவபுண்ணியத்தேற்றம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கடவுணீறிடாக்கடையரைக்கண்காள்கனவிலேனுநீர்காணுதலொழிக
வடவுண்மாசுதீர்த்தருடிருநீற்றையணியுந்தொண்டரையன்புடன்காண்க
தடவுமின்னிசைவீணைகேட்டரக்கன்றனக்குவாளொடுநாள்கொடுத்தவனை
நடவுமால்விடையொற்றியூருடையநாதன்றன்னைநாநண்ணுதற்பொருட்டே. (க)

போற்றிநீறிடாப்புலையரைக்கண்டாற்போகபோகநீர்புலமிழந்தவமே
நீற்றின்மேனியர்தங்களைக்கண்டானிற்கநிற்கவந்நிமலரைக்காண்க
சாற்றினன்னெறியீதுகாண்கண்காடமனியப்பெருந்தனுவெடுத்தெயிலைக்
காற்றினின்றநங்கண்ணுதற்கரும்பைக்கைலையாளனைக்காணுதற்பொருட்டே. (உ)

தெய்வநீறிடாச்சிறியரைக்கண்டாற்சீறுபாம்புகண்டெனவொளித்தேக
சைவநீறிடுந்தலைவரைக்கண்காள்சார்ந்துநின்றுநீர்தனிவிருந்துண்க
செய்பவன்செயலும்மவையுடனேசெய்விப்பானுமாய்த்தில்லையம்பலத்து
ளுய்வதேதரக்கூத்துகந்தாடுமொருவனம்முளமுற்றிடற்பொருட்டே. (ங)

தூயநீறிடாப்பேயர்களொன்றுசொல்லுவாரொனிற்புல்லெனவடைக்க
தாயநீறிடுநேயரொன்றுரைத்தாற்றழுவியேயதைமுழுவதுங்கேட்க
சேயநன்னெறியணித்ததுசெவிகாள்சேரமானிடைத்திருமுகங்கொடுத்து
வாயபாணற்குப்பொன்பெறவருளுமையர்சேவடியடைகுதற்பொருட்டே. (ச)

நல்லநீறிடாநாய்களின்றேகநாற்றநேர்ந்திடினண்ணுயிர்ப்படக்க
வல்லநீறிடும்வல்லவரெழின்மெய்வாசநேரிடின்மகிழ்வுடன்மூகர்க
சொல்லரும்பரிமளந்தருமூக்கேசொல்லும்வண்ணமித்தூய்நெறியொன்று
மல்லனீக்கிநல்லருட்கடலாடியையர்சேவடியடைகுதற்பொருட்டே. (ரு)

அருள்செய்நீறிடாரமுதுனக்கிடினுமம்மலத்தினையருந்துதலொழிக
தெருள்கொணீறிடுஞ்செல்வர்கூழிடினுஞ்சேர்ந்துவாழ்த்தியத்திருவமுதுண்க
விருள்செய்துன்பநீத்தென்னுடைநாவேயின்பநல்லமுதினிதிருந்தருந்தி
மருள்செய்யானையின்றோலுடுத்தென்னுள்வதியுமீசன்பால்வாழுதற்பொருட்டே.

முத்திநீறிடார்முன்கையாற்றொடினுமுள்ளுறுத்தல்போன்முனிவுடனடங்க
பத்திநீறிடும்பத்தர்கள்காலாற்பாய்ந்துதைக்கினும்பரிந்ததைமகிழ்க
புத்தியீதுகாணென்னுடையுடம்பேபோற்றலார்புரம்பொடிபடநகைத்தோன்
சத்திவேற்கரத்தனயனைமகிழ்வோன்றன்னைநாமென்றுஞ்சார்ந்திடற்பொருட்டே.(எ)

இனியநீறிடாவீனநாய்ப்புலையர்க்கெள்ளிற்பாதியுமீகுதலொழிக
வினியநீறிடுஞ்சிவனடியவர்களெம்மைக்கேட்கினுமெடுத்தவர்க்கீக
வினியநன்னெறியீதுகாண்கரங்காளீசனம்முடையிறையவன்றுதிப்போர்க் [டே
கினியமால்விடையேறிவந்தருள்வோனிடங்கொண்டெம்முளேயிசைகுதற்பொருட்

நாடநீறிடாமூடர்கள்கிடக்குநரகவில்லிடைநடப்பதையொழிக
வூடனீக்கும்வெண்ணீறிடுமெவர்களுலவும்வீட்டிடையோடியுநடக்க
கூடநன்னெறியீ துகாண்கால்காள்குமரன்றந்தையெங்குடிமுழுதாள்வோ
னூடவம்பலத்தமர்ந்தவனவன்றனருட்கடற்படிந்தாடுதற்பொருட்டே. (கூ)

நிலைகொணீறிடாப்புலையனாமறந்தும்நினைப்பதென்பதைநெஞ்சமேயொழிக
கலைகொணீறிடுங்கருத்தனைநாளுங்கருதிநின்றுளேகனிந்துநெக்குருக
மலைகொள்வில்லினன்மால்விடையுடையான்மலரயன்றலைமன்னியகரத்தா
னலைகொணஞ்சமுதாக்கியமிடற்றானவனைநாமகிழ்ந்தடைகுதற்பொருட்டே. (க0)

திருச்சிற்றம்பலம்.

# முத்தியுபாயம்.

திருவொற்றியூர்.

வஞ்சித்துறை.

திருச்சிற்றம்பலம்.

ஒற்றியூரனைப்
பற்றிநெஞ்சமே
நிற்றிநீயருட்
பெற்றிசேரவே. (க)

சேரநெஞ்சமே
தூரமன்றுகாண்
வாரம்வைத்தியேற்
சாருமுத்தியே. (உ)

முத்திவேண்டுமேற்
பத்திவேண்டுமாற்
சத்தியம்மிது
புத்திநெஞ்சமே. (ந)

நெஞ்சமேயிது
வஞ்சமேயல
பிஞ்சகன்பதந்
தஞ்சமென்பதே. (ச)

என்பதேற்றவ
னன்பதேற்றுநீ
வன்புமாற்றுதி
யின்பமூற்றவே. (ரு)

ஊற்றமுற்றவெண்
ணீற்றனொற்றியூர்
போற்றநீங்குமா
லாற்றநோய்களே. (சு)

நோய்கள்கொண்டிடும்
பேய்கள்பற்பலர்
தாய்தனொற்றியூர்க்
கேய்தலில்லையே. (எ)

இல்லையில்லகா
ணெல்லையொற்றியூ
ரொல்லைசேரவே
யல்லலென்பதே. (அ)

அல்லலென்பதேன்
றொல்லைநெஞ்சமே
மல்லலொற்றியூ
ரொல்லைசென்றுமே. (கூ)

சென்றுவாழ்த்துதி
நன்றுநெஞ்சமே
யென்றுநல்வள
மொன்றுமொற்றியே. (க0)

திருச்சிற்றம்பலம்.

# அவலத்தழுங்கல்.

திருவொற்றியூர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஊதியம்பெறுவொதியனேன்மதிபோயுழலும்பாவியேனுண்மையொன்றறியேன்
வாதியம்புறும்வஞ்சகருடனேவாயிழுக்குறவன்மைகள்பேசி
யாதியெம்பெருமானுனைமறந்தேனன்பிலாதவென்வன்பினைநினைக்கி
நீதியம்பியநஞ்சமுங்கலங்குந்திகழுமொற்றியூர்த்தியாகமாமணியே. (க)

கல்லிகந்தவன்னெஞ்சகக்கொடியேன்கயவர்தங்களுட்கலந்துநாடோறு
மல்லிகந்தவாய்வாதமிட்டலறிவருந்துகின்றதுன்மார்க்கத்தைநினைக்கி
லில்லிகந்தவென்மீதெனக்கேதானிகலுங்கோபமுமிருக்கின்றதானு
றில்லையாயுன்றனுளத்துக்கென்னுமோதிகழுமொற்றியூர்த்தியாகமாமணியே. (உ)

கைதவத்தர்தங்களிப்பினிற்களித்தேகாலம்போக்கினேன்களைகண்மற்றறியேன்
செய்தவத்தர்தந்திறஞ்சிறிதுணரேன்செய்வதென்னைநின்றிருவருள்பெறவே
யெய்தவத்திருவருளெனக்கிரங்கியீயிலுண்டுமற்றின்றெனிலின்றே
செய்தவத்திருமடந்தையர்நடனந்திகழுமொற்றியூர்த்தியாகமாமணியே. (ங)

அழுதபிள்ளைக்கேபாலுணவளிப்பாளன்னையென்பர்களழவலியில்லாக்
கொழுதுநேர்சிறுகுழவிக்குங்கொடுப்பாள்குற்றமன்றதுமற்றவள்செயலே
தொழுதுநின்னடிதுதிக்கின்றோர்க்கெனவே டூட்டனேனுக்குஞ்சூழ்ந்தருள்செயலாஞ்
செழுதுமாதவிமலர்திசைமணக்கத்திகழுமொற்றியூர்த்தியாகமாமணியே. (ச)

உள்ளியோவெனவலறிநின்றேத்தியுருகிநெக்கிலாவுளத்தன்யானெனினும்
வள்ளியோயுனைமறக்கவுமாட்டேன்மற்றைத்தேவரைமதிக்கவுமாட்டேன்
வெள்ளியோவெனப்பொன்மகிழ்சிறக்கவிரைந்தூழும்மதிள்வில்வளைத்தெரித்தோய்
தெள்ளியோர்புகழ்ந்தரகரவென்னத்திகழுமொற்றியூர்த்தியாகமாமணியே. (ரு)

விருப்பிலேன்றிருமாலயன்பதவிவேண்டிக்கொள்கெனவிளம்பினுங்கொள்ளேன்
மருப்பின்மாவுரியாயுன்றனடியார்மதிக்கும்வாழ்வையேமனங்கொடுநின்றே
னெருப்படாதவிவ்வென்னளவினியுன்னுள்ளமெப்படியப்படியறியேன்
றிருப்புயாசலமன்னர்மாதவத்தோர்திகழுமொற்றியூர்த்தியாகமாமணியே. (சு)

நிலையிலாவுலகியற்படுமெனத்தைநிறுத்திலேனொருநியமுமறியேன்
விலையிலாமணியேவுனைவாழ்த்திவீட்டுநென்னெறிக்கூட்டெனவிளம்பே
னலையிலார்ந்தெழுந்துரும்பெனவலைந்தேனப்பனேன்றிருவருளடைவேனே
சிலையிலாரழற்கணைதொடுத்தவனேதிகழுமொற்றியூர்த்தியாகமாமணியே. (எ)

காயமென்பதாகாயமென்றறியேன்கலங்கினேனொருகளைகணுமில்லேன்
சேயநன்னெறியணித்தெனக்காட்டுந்தெய்வநின்னருட்டிறஞ்சிறிதடையேன்
றூயநின்னடியவருடன்கூடித்தொழும்புசெய்வதேசுகமெனத்துணியேன்
றீயனேன்றனையாள்வதெவ்வாறோதிகழுமொற்றியூர்த்தியாகமாமணியே. (அ)

புன்னுனிப்படுந் துளியினுஞ்சிறியபோகம்வேட்டுநின் பொன்னடிமறந்தே
னென்னினிப்படும்வணமஃதறியேனென்செய்கேனெனையென் செயப்புகுகேன்
மின்னினிற்பொலிவேணியம்பெருமான்வேறலேனெனைவிரும்பலுன்கடனே
தென்னனிப்படுஞ்சோலைசூழ்ந்தோங்கித்திகழுமொற்றியூர்த்தியாகமாமணியே. (கூ)

அடியனேனலனென்னினுமடியேனுகநின் றனனம்மையிம்மையினுங்
கடியனேன்பிழையாவையும்பொறுக்கக்கடனுனக்கலாற்கண்டிலனையா
பொடிகொண்மேனியெம்புண்ணியமுதலேபுன்னையஞ்சடைப்புங்கவரோறே
செடியர்தேடுருத்திவ்வியவொளியே திகழுமொற்றியூர்த்தியாகமாமணியே. (க0)

திருச்சிற்றம்பலம்.

# பழமொழிமேல்வைத்துப்பரிவுகூர்தல்.

திருவொற்றியூர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

வானைநோக்கிமண்வழிநடப்பவன்போல்வயங்குநின்னருள்வழியிடைநடப்பா
னூனைநோக்கினேனுயினுமடியேனுய்யும்வண்ணநீயுவந்தருள்புரிவாய்
மானைநோக்கியனேக்குடைமலையாண்மகிழமன்றிடைமாநடம்புரிவோய்
தேனைநோக்கியகொன்றையஞ்சடையோய்திகழுமொற்றியூர்த்தியாகநாயகனே. (க)

வாயிலான்பெருவழக்குரைப்பதுபோல்வள்ளலுன்னடிமலர்களுக்கன்பாந்
தூயிலாதுநின்னருள்பெறவிழைந்தேன்றுட்டனேனருட்சுகம்பெறநினைவாய்
கோயிலாகநல்லன்பர்தம்முளத்தைக்கொண்டமர்ந்திடுங்குணப்பெருங்குன்றே
தேயிலாதபல்வளஞ்செறிந்தோங்கித்திகழுமொற்றியூர்த்தியாகநாயகனே. (உ)

வித்தையின்றியேவிளைத்திடுபவன்போன்மெய்யநின்னிருமென்மலர்ப்பதத்திற்
பத்தியின்றியேமுத்தியைவிழைந்தேன்பாவியேனருட்பண்புறநினைவாய்
மித்தையின்றியேவிளங்கியவடியார்விழைந்தயாவையுந்தழைந்திடவருள்வோய்
சித்திவேண்டியமுனிவரர்பரவித்திகழுமொற்றியூர்த்தியாகநாயகனே. (ங)

கலமிலாதுவான்கடல்கடப்பவன்போற்கடவுணின்னடிக்கமலங்கள்வழுத்து
நலமிலாதுநின்னருள்பெறவிழைந்தநாயினேன்செயுநவைபொறுத்தருள்வாய்
மலமிலாதநல்வழியிடைநடப்போர்மனத்துண்மேவியமாமணிச்சுடரே
சிலமிலாஞ்சமாதியதருப்பொழில்கடிகழுமொற்றியூர்த்தியாகநாயகனே. (ச)

போர்க்கும்வெள்ளத்திற்பொன்புதைப்பவன்போற்புலையநெஞ்சிடைப்புனிதநின்னடியைச்
சேர்க்கும்வண்ணமேநினைக்கின்றேனெனினுஞ்சிறியனேனுக்குன்றிருவருள்புரிவாய்
கூர்க்குநெட்டிலைவேற்படைக்கரங்கொள்குமரன்றந்தையேகொடியதீவினையைத்
தீர்க்குந்தெய்வமேசைவவைதிகங்கடிகழுமொற்றியூர்த்தியாகநாயகனே. (ரு)

ஓடவுன்னியேயுறங்குகின்றவன்போலோங்குமுத்தமவுன்னருட்கடலி
லாடவுன்னியேமங்கையர்மயலிலழுந்துகின்றவெற்கருள்செயநினைவாய்
நாடவுன்னியேமாலயனேங்கநாயினேனுளநண்ணியபொருளே
தேடவுன்னியமாதவமுனிவர்திகழுமொற்றியூர்த்தியாகநாயகனே. (சு)

முதலிலாமலூ தியம்பெறவிழையுமூடனென்னநின்மொய்கழற்பதமேத்
துதலிலாதுநின்னருள்பெறவிழைந்தேன் றுட்டனேனருட்சுகம்பெறுவேனோ
நுதலிலாரழற்கண்ணுடையவனேநோக்குமன்பர்கடேக்குமின்னமுதே
சிதலிலாவளமோங்கியென் னுளுந்திகழுமொற்றியூர்த்தியாகநாயகனே. (எ)

கல்லையுந்திவானதிகடப் பவர்போற்காமமுந்தியநாமநெஞ்சகத்தா
லெல்லையுந்தியபவக்கடல்கடப்பாணெண்ணுகின் றனனெனக்கருள்வாயோ
வல்லையுந்தியவொண்சுடர்க்குன்றேயகிலகோடிகட்கருள்செயுமொன்றே
தில்லைநின்றொளிர்மன் றிடையமுதே திகழுமொற்றியூர்த்தியாகநாயகனே. (அ)

நெய்யினுற்சுடுநெருப்பவிப்பவன்போனெடியதுன்பமாங்கொடியவைநிறைந்த
பொய்யினுற்பவம்போக்கிடநினைத்தேன் புல்லனேனுக்குன்னல்லருள்வருமோ
கையினுற்றொழுமன்பர்தம்முள்ளக்கமலமேவியவிமலவித்தகனே
செய்யினுற்பொலிந்தோங்கிநல்வளங்கடிகழுமொற்றியூர்த்தியாகநாயகனே. (கூ)

நீர்சொரிந்தொளிவிளக்கெரிப்பவன்போனித்தநின்னிடைநேசம்வைத்திடுவான்
பார்சொறிந்திடும்பவநெறிமுயன்றேன்பாவியேன் றனைக்கூவிநின்றருள்வாய்
கார்சொரிந்தெனக்கருணையீந்தன்பர்களித்தநெஞ்சிடையொளித்திருப்பவனே
தேர்சொரிந்தமாமணித்திருவீதித்திகழுமொற்றியூர்த்தியாகநாயகனே. (கo)

திருச்சிற்றம்பலம்.

# அபராதத்தாற்றுமை.

திருவொற்றியூர்.
எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.
**திருச்சிற்றம்பலம்.**

துச்சிலைவிரும்பித்துயர்கொளுங்கொடியேன் றுட்டனேன் றூய்மையொன்றில்லா
வெச்சிலையனையேன்பாவியேனென்னையென்செய்தாற்றீருமோவறியேன்
பச்சிலையிடுவார்பக்கமேமருவும்பரமனேயெம்பசுபதியே
யச்சிலைவிரும்புமவருளத்தமுதேயையனேயொற்றியூரரசே. (க)

தூங்கினேன்சோம்பற்குறைவிடமானேன்றோகையர்மயக்கிடையழுந்தி
யேங்கினேனவமேயிருந்தனனென்னையென்செய்தாற்றீருமோவறியேன்
வாங்கிமேருவினைவளைத்திடும்பவளமாமணிக்குன்றமேமருந்தே
வோங்கிவானளவும்பொழிற்செறியொற்றியூர்வருமென்னுடையுயிரே. (உ)

கரப்பவர்க்கெல்லாமுற்படுங்கொடியகடையனேன்விடையமேயுடையே
னிரப்பவர்க்கணுவுமீந்திலேனென்னையென்செய்தாற்றீருமோவறியேன்
றிரப்படுங்கருணைச்செல்வமேசிவமேதெய்வமேதெய்வநாயகமே
யுரப்படுமன்பருள்ளொளிவிளக்கேயொற்றியூர்வாழுமென்னுவப்பே. (ங)

இல்லையென்பதனுக்கஞ்சிடேனுய்க்குமிணையிலேனிழிவினேன் றுயர்க்கோ
ரெல்லைமற்றறியேனேதியனேனென்னையென்செய்தாற்றீருமோவறியேன்
கல்லைவில்லாக்குங்கருணைவாரிதியேகண்ணுதலுடையசெங்கனியே
தில்லைவாழரசேதெய்வமாமணியேதிருவொற்றியூர்வருந்தேவே. (ச)

மண்ணிலேமயங்குமனத்தினைமீட்டேன்மலரடிவழுத்திடச்சிறிது
மெண்ணிலேன்கொடியவேழையேனென்னையென்செய்தாற்றீருமோவறியேன்
விண்ணிலேவிளங்குமொளியினுள்ளொளியேவிடையில்வந்தருள்விழிவிருந்தே
கண்ணிலேவிளங்குமரும்பெறன்மணியேகாட்சியேயொற்றியங்கரும்பே. (ரு)

முட்டியேமடவார்முலைத்தலையுழக்குமூடனேன்முழுப்புலைமுறியே
னெட்டியேயனையேன்பாவியேனென்னையென்செய்தாற்றீருமோவறியே
ளொட்டியேயன்பருளத்தெழுங்களிப்பேயொளிக்குளாஞ்சோதியேகரும்பின்
கட்டியேதேனேசடையுடைக்கனியேகாலமுங்கடந்தவர்கருத்தே. (சா)

கருதெனவடியார்காட்டியுந்தேறாக்கன்மனக்குரங்கனேனுதவா
வெருதெனநின்றேன்பாவியேனென்னையென்செய்தாற்றீருமோவறியேன்
மருதிடைநின்றமாணிக்கமணியேவன்பவந்தீர்த்திடுமருந்தே
வொருதிறமுடையோருள்ளத்துளொளியேயொற்றியூர்மேவுமென்னுறவே. (எ)

வைதிலேன்வணங்காதிகழ்பவர்தம்மைவஞ்சனேனின்னடியவர்பா
லெய்திலேன்பேயேனேழையேனென்னையென்செய்தாற்றீருமோவறியேன்
கொய்துமாமலரிட்டருச்சனைபுரிவோர்கோலநெஞ்சொளிர்குணக்குன்றே
வுய்திறமுடையோர்பரவுநல்லொற்றியூரகத்தமர்ந்தருளொன்றே. (அ)

தெவ்வணமடவார்சிக்குழிவிழுந்தேன்றீயனேன்பேயனேன்சிறியே
னெவ்வணமுய்வேனென்செய்வேனென்னையென்செய்தாற்றீருமோவறியே
னெவ்வணப்பொருப்பேயென்னிருகண்ணேயிடையிடாப்பசியசெம்பொன்னே
செவ்வணமணியேதிகழ்குணக்கடலேதிருவொற்றியூர்ச்செழுந்தேனே. (கூ)

வாதமேபுரிவேன்கொடும்புலியனையேன்வஞ்சகமனத்தினேன்பொல்லா
வேதமேயுடையேனென்செய்வேனென்னையென்செய்தாற்றீருமோவறியேன்
போதமேயைந்தாம்பூதமேயொழியாப்புனிதமேபுதுமணப்பூவே
பாதமேசரணஞ்சரணமென்றன்னைப்பாதுகாத்தளிப்பதுன்பரமே. (க0)

திருச்சிற்றம்பலம்.

# அருளியல்விணுவல்.

திருமுல்லைவாயில்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

தேனெனவினிக்குந்திருவருட்கடலேதெள்ளியவமுதமேசிவமே
வானெனநிற்குந்தெய்வமேமுல்லைவாயில்வாழ்மாசிலாமணியே
யூனெனநின்றவுணர்விலேனெனினுமுன்றிருக்கோயில்வந்தடைந்தா
லேனெனக்கேளாதிருந்தனையையாவீதுநின்றிருவருட்கியல்போ. (க)

பூங்கொடியிடையைப்புணர்ந்தசெந்தேனேபுத்தமுதேமறைப்பொருளே
வாங்கொடிவிடைகொளண்ணலேமுல்லைவாயில்வாழ்மாசிலாமணியே
தீங்கொடியாதவினையனேனெனினுஞ்செல்வநின்கோயில்வந்தடைந்தா
லீங்கொடியாதவருட்கணுற்றேக்கியேனெனுதிருப்பதுமியல்போ. (உ)

துப்பநேரிதழிமகிழ்ந்தகல்யாணசுந்தராசுந்தரன்றூதா
மைப்பொதிமிடற்றாய்வளர்திருமுல்லைவாயில்வாழ்மாசிலாமணியே
யப்பனேயுன்னைவிடவேனுவடியேனறிவிலேனெனினுநின்கோயிற்
கெய்ப்புடன்வந்தால்வாவெனவுளாயாதிருப்பதுன்றிருவருட்கியல்போ. (௩)

கங்கையஞ்சடைகொண்டோங்குசெங்கனியேகண்கண்மூன்றேங்குசெங்கரும்பே
மங்கலில்லாதவண்மையேமுல்லைவாயில்வாழ்மாசிலாமணியே
துங்கநின்னடியைத்துதித்திடேனெனினுந்தொண்டனேன்கோயில்வந்தடைந்தா
லெங்குவந்தாய்நீயாரெனவேனுமியம்பிடாதிருப்பதுமியல்போ. (௪)

நன்றுவந்தருளுநம்பனேயார்க்குநல்லவனேதிருத்தில்லை
மன்றுவந்தாடும்வள்ளலேமுல்லைவாயில்வாழ்மாசிலாமணியே
துன்றுநின்னடிபைத்துதித்திடேனெனினுந்தொண்டனேன்கோயில்வந்தடைந்தா
லென்றுவந்தாயென்றொருசொலுஞ்சொல்லாதிருப்பதுன்றிருவருட்கியல்போ. (௫)

பண்ணினுளிசையேபாலினுட்சுவையேபத்தர்கட்கருள்செயும்பரமே
மண்ணினிலோங்கிவளம்பெறுமுல்லைவாயில்வாழ்மாசிலாமணியே
பெண்ணினும்பேதைமதியினேனெனினும்பெருமநின்னருள்பெறலாமென்
றெண்ணிவந்தடைந்தாற்கேள்வியில்லாமலிருப்பதுன்றிருவருட்கியல்போ. (௬)

முன்னியமறையின்முடிவினுட்பொருளேமுக்கணுமூவர்க்குமுதல்வா
மன்னியகருணைவாரியேமுல்லைவாயில்வாழ்மாசிலாமணியே
யன்னியனல்லேன்றொண்டனேனுன்றனருட்பெருங்கோயில்வந்தடைந்தா
லென்னிதுசிவனேபகைவரைப்போற்பார்த்திருப்பதுன்றிருவருட்கியல்போ. (௭)

நல்லவர்பெறுநற்செல்வமேமன்றுண்ஞானநாடகம்புரிநலமே
வல்லவர்மதிக்குந்தெய்வமேமுல்லைவாயில்வாழ்மாசிலாமணியே
புல்லவனெனினுமடியனேனையாபொய்யலவுலகறிந்ததுநீ
யில்லையென்றாலும்விடவேனுசும்மாவிருப்பதுன்றிருவருட்கியல்போ. (௮)

பொதுவினின்றருளுமுதற்றனிப்பொருளேபுண்ணியம்விளைகின்றபுலமே
மதுவினின்றேங்கும்பொழிற்றிருமுல்லைவாயில்வாழ்மாசிலாமணியே
புதுமையனல்லேன்றொன்றுதொட்டுனதுபூங்கழற்கன்புபூண்டவன்கா
ணெதுநினைந்தடைந்தாயென்றுகேளாமலிருப்பதுன்றிருவருட்கியல்போ. (௯)

பொன்னையுற்றவனுமயனுநின்றறியாப்புண்ணியாகண்ணுதற்கரும்பே
மன்னனேமருந்தேவளர்திருமுல்லைவாயில்வாழ்மாசிலாமணியே
யுன்னைநான்கனவினிடத்தும்விட்டொழியேனுன்றிருவடித்துணையறிய
வென்னைநீன்றவனேமுகமறியார்போலிருப்பதுன்றிருவருட்கியல்போ. (௧0)

திருச்சிற்றம்பலம்.

# திருவிண்ணப்பம்.

## திருமுல்லைவாயில்.

### கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தாயின்மேவியதற்பரமேமுல்லை
வாயின்மேவியமாமணியேயுன்றன்
கோயின்மேவிநின்கோமலர்த்தாடொழா
தேயின்மேவியிருந்தனனென்னையே. (க)

தில்லைவாய்ந்தசெழுங்கனியேதிரு
முல்லைவாயின்முதற்சிவமூர்த்தியே
தொல்லையேனுன்றன்றூய்திருக்கோயிலி
னெல்லைசேரவின்றெத்தவஞ்செய்ததே. (உ)

வளங்கொளுமுல்லைவாயிலின்மேவிய
குளங்கொளுங்கட்குருமணியேயுனை
யுளங்கொளும்படியுன்றிருக்கோயிலிக்
களங்கொணெஞ்சினன்கண்டதுங்கண்டதே. (ங)

மலைவிலாமுல்லைவாயிலின்மேவிய
விலையிலாமணியேவிளக்கேசற்றுங்
கொலையிலாதவர்கூடுநின்கோயிலின்
றலைநிலாவத்தவமென்கொல்செய்ததே. (ச)

சீர்சிறக்குந்திருமுல்லைவாயிலி
லேர்சிறக்குமியன்மணியேகொன்றைத்
தார்சிறக்குஞ்சடைக்கனியேயுன்ற
னூர்சிறக்கவுறுவதெவ்வண்ணமே. (ரு)

சேற்கொள்பொய்கைத்திருமுல்லைவாயிற்
பாற்கொள்வண்ணப்பரஞ்சுடரோவிடை
மேற்கொள்சங்கரனேவிமலாவுன்றன்
காற்கொளன்பர்கலங்குதனன்றதோ. (சு)

வண்ணமாமுல்லைவாயிலின்மேவிய
வண்ணலேயமுதேயரசேநுதற்
கண்ணனேயுனைக்காணவந்தோர்க்கெலா
நண்ணருந்துயர்நல்குதனன்றதோ. (எ)

மண்ணினோங்கிவளர்முல்லைவாயில்வாழ்
கண்ணுண்மாமணியேகரும்பேயுனை
யெண்ணுமன்பரிழிவடைந்தாலது
பண்ணுநின்னருள்பாரிடைவாழ்கவே. (அ)

தீதிலாத திருமுல்லைவாயில்வாழ்
கோதிலாதகுணப்பெருங்குன் றமே
வாதிலா துனைவாழ்த் தவந்தோர்தமை
யேதிலாரென்றிருப்ப துமென்கொலோ. (௯)

தேசுலாவியசீர்முல்லைவாயில்வாழ்
மாசிலாமணியேமருந்தேசற்றுங்
கூசிடாமனின்கோயில்வந்துன்புகழ்
பேசிடாதபிழைபொறுத்தாள்வையே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

# காட்சிப்பெருமிதம்.

## திருவலிதாயம்.

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

திரைபடாதசெழுங்கடலேசற்று
முரைபடாமலொளிசெய்பொன்னேபுகழ்
வரைபடாதுவளர்வல்லிகேசநீ
தரைபடாக்கந்தைசாத்தியதென்கொலோ. (௧)

சிந்தைநின் றசிவாநந்தச்செல்வமே
யெந்தையேயெமையாட்கொண்டதெய்வமே
தந்தையேவலிதாயத்தலைவநீ
கந்தைசுற்றுங்கணக்கதுவென்கொலோ. (௨)

வேலைகொண்டவிடமுண்டகண்டனே
மாலைகொண்டவளர்வல்லிகேசனே
பாலைகொண்டபராபரநீபழஞ்
சேலைகொண்டதிறமிதுவென்கொலோ. (௩)

பன்னுவார்க்கருளும்பரமேட்டியே
மன்னுமாமணியேவல்லிகேசனே
வுன்னநீயிங்குடுத்தியகந்தையைத்
துன்னுவாரிலையோபரஞ்சோதியே. (௪)

கடுத்ததும்பியகண்டவகண்டனே
மடுத்தநற்புகழ்வாழ்வல்லிகேசநீ
தொடுத்தகந்தையைநீக்கித்துணிந்தொன்றை
யுடுத்துவாரிலையோவிவ்வுலகிலே. (௫)

ஆலடுத்தவரும்பொருளேதிரு
மாலடுத்துமகிழ்வல்லிகேசநீ
பாலுடுத்தபழங்கந்தையைவிடத்
தோலுடுப்பதுவேமிகத்தூய்மையே. (௬)

துன்னுமாமருந்தேசுடரோயருண்
மன்னுமாணிக்கமேவல்லிகேசரோ
துன்னுகந்தையைச்சுற்றிநிற்பீரொனி
லென்னநீரொமக்கீயும்பரிசதே. (எ)

மாசில்சோதிமணிவிளக்கேமறை
வாசிமேவிவரும்வல்லிகேசநீர்
தூசில்கந்தையைச்சுற்றியையோபர
தேசிபோலிருந்தீரென்கொல்செய்வனே. (அ)

தேருநற்றவர்சிந்தையெனுந்தலஞ்
சாருநற்பொருளாம்வலிதாயநீர்
பாருமற்றிப்பழங்கந்தைசாத்தினீர்
யாருமற்றவரோசொலுமையரோ. (கூ)

மெல்லிதாயவிரைமலர்ப்பாதனே
வல்லிதாயமருவியநாதனே
புல்லிதாயவிக்கந்தையைப்போர்த்திறுற்
கல்லிதாயநெஞ்சங்கரைகின்றதே. (க0)

திருச்சிற்றம்பலம்.

# கொடைமடப்புகழ்ச்சி.

## திருவொற்றியூர்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

திரப்படுந்திருமாலயன்வாழ்த்தத்தியாகரென்னுமோர்திருப்பெயரடைந்தீர்
வரப்படுந்திறத்திருமையடைந்தால்வாய்திறந்தொருவார்த்தையுஞ்சொல்லீ
ரிரப்பவர்க்கொன்றுமீகிலீராலுல்யாதுக்கையநீரிப்பெயரொடுத்தீ
ருரப்படுந்தவத்தோர்துதித்தோங்கவோங்குசீரொற்றியூருடையீரே. (க)

வெள்ளிமாமலைவீடெனவுடையீர்விளங்கும்பொன்மலைவில்லெனக்கொண்டீர்
வள்ளியீரெனநும்மைவந்தடைந்தால்வாய்திறந்தொருவார்த்தையுஞ்சொல்லீ
ரொள்ளிலெண்ணெய்போலெங்கணுநின்றீரேழையேன்குறையேனறியீரோ
வொள்ளியீருமையன்றியொன்றறியேனேங்குசீரொற்றியூருடையீரே. (உ)

கள்ளமற்றவாக்கரசும்புத்திரருங்களிக்கவேபடிக்காசளித்தருளும்
வள்ளலென்றுமைவந்தடைந்தேற்றால்வாய்திறந்தொருவார்த்தையுஞ்சொல்லீ
ரொள்ளரும்புகழ்த்தியாகரென்றொருபேரேன்கொண்டீரிரப்போர்க்கிடவன்றோ
வுள்ளமிங்கறிவீரெனையாள்வீரோங்குசீரொற்றியூருடையீரே. (ந)

அண்மையாகுஞ்சுந்தரர்க்கன்றுகச்சூராலக்கோயிலிற்சோறிரந்தளித்த
வண்மைகேட்டிங்குவந்தடைந்தேற்றால்வாய்திறந்தொருவார்த்தையுஞ்சொல்லீர்
திண்மைசேர்திருமால்விடையூர்வீர்தேவரீருக்குச்சிறுமையுமுண்டோ
வுண்மையானுமையன்றிமற்றறியேனேங்குசீரொற்றியூருடையீரே. (ச)

சிந்தைநொந்துலகிற்பிறர்தம்மைச்சேர்ந்திடாதுநுந்திருப்பெயர்கேட்டு
வந்தடைந்தவெற்குண்டிலையெனவேவாய்திறந்தொருவார்த்தையுஞ்சொல்லீ
ரிந்தவண்ணநீரிருந்திடுவீரேலென்சொலாருமையிவ்வுளகத்தா
ருந்திவந்தவனோடரியேத்தவோங்குசீரொற்றியூருடையீரோ. (௫)

கல்லையும்பசும்பொன்னெனப்புரிந்தகருணைகேட்டுமைக்காதலித்திங்கு
வல்லைவந்துநின்றேற்றிடிற்சிறிதும்வாய்திறந்தொருவார்த்தையுஞ்சொல்லீ
ரில்லைநீர்பிச்சையெடுக்கின்றீரேனுமிரக்கின்றோர்களுமிட்டுண்பர்கண்டீ
ரொல்லையிங்கெனதுளங்கொண்டதறிவீரோங்குசீரொற்றியூருடையீரோ. (௬)

துளிக்குங்கண்ணுடன்சோர்வுறநெஞ்சந்தோன்றலேயுமைத்துணையெனநம்பி
வளிக்குட்பஞ்சனையேனடைந்தேற்றால்வாய்திறந்தொருவார்த்தையுஞ்சொல்லீ
ரளிக்குந்தன்மையீர்வாழ்ந்திவணிருக்கவடியனேனலைகின்றதுமழகோ
வொளிக்குந்தன்மைதானுமக்குமுண்டேயோவோங்குசீரொற்றியூருடையீரோ. (௭)

குற்றமெத்தனையத்தனையெல்லாங்குணமெனக்கொளுங்குணக்கடலென்றே
மற்றுநானம்பியிங்குவந்தேற்றால்வாய்திறந்தொருவார்த்தையுஞ்சொல்லீர்
கற்றநற்றவர்க்கேயருள்வீரேல்கடையனேனெந்தக்கடைத்தலைச்செல்கே
னுற்றநற்றுணையுமையன்றியறியேனோங்குசீரொற்றியூருடையீரோ. (௮)

பொய்யிலார்க்குமுன்பொற்கிழியளித்தபுலவரேறெனப்புகழ்ந்திடக்கேட்டு
மையல்கொண்டிடுமனத்தொடும்வந்தால்வாய்திறந்தொருவார்த்தையுஞ்சொல்லீ
ராயநும்மடியன்றியோர்துணையுமறிந்திலேனிஃதறிந்தருளீரோ
லுய்யும்வண்ணமெவ்வண்ணமென்செய்கேனோங்குசீரொற்றியூருடையீரோ. (௯)

தாயிலாரெனநெஞ்சகந்தளர்ந்தேன்றந்தையுந்திருச்சந்நிதியடைந்தேன்
வாயிலாரெனவிருக்கின்றீரல்லால்வாய்திறந்தொருவார்த்தையுஞ்சொல்லீர்
கோயிலாகவென்னெஞ்சகத்தமர்ந்தகுணத்தினீரொன்றன்குறையறியீரோ
வோயிலாதுநற்றொண்டருக்கருள்வானோங்குசீரொற்றியூருடையீரோ. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

# திருவருள்வேட்கை.

திருவொற்றியூர்.

கொச்சகக்கலிப்பா.

**திருச்சிற்றம்பலம்.**

மன்னமுதாமுன்றாள்வழுத்துகின்றநல்லோர்க்கே
யின்னமுதமோர்பொழுதுமிட்டறியேனாயிடினும்
முன்னமுதாவுண்டகளமுன்னிமுன்னிவாடுகின்றே
னென்னமுதேயின்னுமிரக்கந்தான்றோன்றாதோ. (௧)

தோன்றாத்துணையாகுஞ்சோதியேநின்னடிக்கே
யான்றார்த்தவன்போடகங்குழையேனாயிடினு
மூன்றார்த்தரித்ததனையுன்னியுன்னிவாடுகின்றேன்
றேன்றார்ச்சடையாயுன்சித்தமிரங்காதோ. (௨)

காதார்கடுவிழியார்காமவலைக்குள்ளாகி
யாதாரமின்றியலைதந்தேனாயிடினும்
போதார்நினதுகழற்பொன்னடியேபோற்றுகின்றே
னீதாவோவுன்னுடையநெஞ்சமிரங்காதோ. (௩)

இலைவேட்டமாதர்தமதீனநலமேவிழைந்து
கொலைவேட்டுழலுங்கொடியனேனாயிடினு
நிலைவேட்டநின்னருட்கேநின்றுநின்றுவாடுகின்றேன்
கலைவேட்டவேணியனேகருணைசற்றுங்கொண்டிலையே. (௪)

கொண்டனிறத்தோனுங்குணிக்கரியநின்னடிக்கே
தொண்டறிந்துசெய்யாததுட்டனேனாயிடினு
மெண்டகநின்பொன்னருளையெண்ணியெண்ணிவாடுகின்றேன்
றண்டலைசூழொற்றியுளாய்தயவுசற்றுஞ்சார்ந்திலையே. (௫)

சாராவறுஞ்சார்பிற்சார்ந்தரசேவுன்னுடைய
தாரார்மலரடியைத்தாழ்ந்தேத்தேனாயிடினு
நேராய்நின்சந்நிதிக்கணின்றுநின்றுவாடுகின்றே
னோராயோசற்றேனுமொற்றியூருத்தமனே. (௬)

ஊர்மதிக்கவீணிலுளறுகின்றதல்லதுநின்
சீர்மதிக்கநின்னடியைத்தோர்ந்தேத்தேனாயிடினுங்
கார்மதிக்குநஞ்சமுண்டகண்டநினைந்துள்குகின்றே
னேர்மதிக்குமொற்றியூரெந்தையளியெய்தாயோ. (௭)

தாய்க்குமினிதாகுமுன்றன்றாண்மலரையேத்தாது
நாய்க்குங்கடையாய்நலிகின்றேனாயிடினும்
வாய்க்குமுன்றன்சந்நிதிக்கண்வந்துவந்துவாடுகின்றேன்
றாய்க்குமரன்றந்தாயென்சோர்வறிந்துதீராயோ. (௮)

அறியாப்பருவத்தடியேனையாட்கொண்ட
நெறியாங்கருணைநினைந்துருகேனாயிடினுங்
குறியாப்பொருளேயுன்கோயிலிடைவந்துநின்றும்
:.!றியாப்பிணியேன்பரதவிப்பைப்பார்த்திலையே. (௯)

பார்நடையாங்கானிற்பரிந்துழல்வதல்லதுநின்
சீர்நடையாநன்னெறியிற்சேர்ந்திலேனாயிடினு
நேர்நடையாநின்கோயினின்றுநின்றுவாடுகின்றேன்
வார்நடையார்காணுவளரொற்றிமன்னமுதே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# அபராதவிண்ணப்பம்.

திருவொற்றியூர்.
எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.
திருச்சிற்றம்பலம்.

தேவியலறியாச்சிறியனேன்பிழையைத்திருவுளத்தெண்ணிநீகோப
மேவியிங்கையோகைவிடிற்சிவனேவேறுநான்யாதுசெய்வேனே
மூவிருமுகஞ்சேர்முத்தினையளித்தமுழுச்சுவைமுதிர்ந்தசெங்கரும்பே
சேவின்மேலோங்குஞ்செழுமணிக்குன்றேதிருவொற்றியூர்மகிழ்தேவே. (க)

உய்யவொன்றறியாவொதியனேன்பிழையையுன்றிருவுள்ளத்திற்கொண்டே
வெய்யனென்றையோகைவிடிற்சிவனேவேறுநான்யாதுசெய்வேனே
செய்யநெட்டிலைவேற்சேய்தனையளித்ததெய்வமேயாநந்தத்திரட்டே
மையலற்றவர்தம்மனத்தொளிர்விளக்கேவளம்பெறுமொற்றியூர்மணியே. (உ)

கழல்கொளுன்னருமைத்திருவடிமலரைக்கருதிடாப்பிழைதனைக்குறித்தே
விழலனென்றையோகைவிடிற்சிவனேவேறுநான்யாதுசெய்வேனே
யழலயிற்கரத்தெம்மையனையீன்றவப்பனேயயனுமாலறியாத்
தழனிறப்பவளக்குன்றமேயொற்றித்தனிநகரமர்ந்தருட்கையே. (ங)

வாடனக்குறமும்வடக்கணர்க்குருகும்வஞ்சனேன்பிழைதனைக்குறித்தே
வேடனென்றையோகைவிடிற்சிவனேவேறுநான்யாதுசெய்வேனே
நீடயிற்படைசேர்கரத்தனையளித்தநிருத்தனேநித்தனேநிமலா
வேடகத்தமர்ந்தவீசனேதில்லையெந்தையேயொற்றியூரிறையே. (ச)

நாணமொன்றில்லாநாயினேன்பிழையைநாடிநின்றிருவுளத்தடைத்தே
வீணனென்றையோகைவிடிற்சிவனேவேறுநான்யாதுசெய்வேனே
காணநின்றடியர்க்கருடரும்பொருளேகடிமதிலொல்றியூர்க்கரசே
பூணயிற்கரத்தோர்புத்தமுதெழுந்தபுண்ணியப்புனிதவாரிதியே. (ரு)

அஞ்செழுத்தோதியுய்ந்திடாப்பிழையையகநின்றிருவுளத்தெண்ணி
வெஞ்சனென்றையோகைவிடிற்சிவனேவேறுநான்யாதுசெய்வேனே
கஞ்சன்மான்முதலோருயிர்பெறவிடத்தைக்களத்திருத்தியவருட்கடலே
சஞ்சிதமறுக்குஞ்சண்முகமுடையோன்றந்தையேயொற்றியெந்தவமே. (சு)

நம்பினேனின்றன்றிருவடிமலரைநாயினேன்பிழைதனைக்குறியேல்
வெம்பினேனையோகைவிடிற்சிவனேவேறுநான்யாதுசெய்வேனே
தும்பிமாமுகனைவேலனையீன்றதோன்றலேவச்சிரத்தூணே
யம்பிகாபதியேயண்ணலேமுக்கணத்தனேயொற்றியூரமுதே. (எ)

சூழ்ந்தவஞ்சகனேன்பிழைதனைக்குறியேற்றுன்பசாகரந்தனிலழுந்தி
வீழ்ந்தனனையோகைவிடிற்சிவனேவேறுநான்யாதுசெய்வேனே
வாழ்ந்தமாதவர்கண்மனத்தொளிரொளியேவள்ளலேமழவிடையவனே
போழ்ந்தவேற்படைகொள்புனிதனையளித்தபூரணவொற்றியூர்ப்பொருளே. (அ)

துரும்பினேன்பிழையைத்திருவுளத்தடையேற்றுய்யநின்னருட்கடலாட
விரும்பினேனையோகைவிடிற்சிவனேவேறுநான்யாதுசெய்வேனே
கரும்பினேர்மொழியாரிருவராமணக்குங்கனிதனையளித்தகற்பகமே
யிரும்பினேர்நெஞ்சரொனினுமென்போல்வார்க்கின்னருடருமொற்றியிறையே. (௯)

கட்டினேன்பாபக்கொடுஞ்சுமையெடுப்பேன்கடும்பிழைகருதிடேனின்னை
விட்டிலேனையோகைவிடிற்சிவனேவேறுநான்யாதுசெய்வேனே
சுட்டிலாப்பொருளேசுகப்பெருங்கடலேதூய்த்திருவொற்றியூர்த்துணையே
தட்டிலாக்குணத்தோர்புகழ்செயுங்குகனைத்தந்தருட்டருந்தயாநிதியே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# அறிவரும்பெருமை.

## திருவொற்றியூர்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

நாயினுங்கடையேனென்செய்வேன்பிணியானலிகின்றநலிவினையறிந்துந்
தாயினுமினியாயின்னுநீவரவுதாழ்த்தனையென்கொலென்றறியேன்
மாயினுமல்லால்வாழினுநினதுமலரடியன்றியொன்றேத்தேன்
காயினுமென்னைக்கனியினுநின்னைக்கனவினும்விட்டிடேன்காணே. (௧)

காண்பதுகருதிமாலொடுமலர்வாழ்கடவுளரிருவருந்தங்கண்
மாண்பதுமாறிவேறுருவெடுத்தும்வள்ளனின்னுருவறிந்திலரோ
கோண்பதர்நெஞ்சக்கொடியனேனெந்தக்கொள்கைகொண்டறிகுவதையா
பூண்பதுபணியாய்பொதுவினின்றாடும்புனிதநின்னருளலாதின்றே. (௨)

இன்றுவந்தெனைநீயடிமைகொள்ளாயேலெவ்வுலகத்தருந்தூற்ற
நன்றுநின்றன்மேற்பழிவருமென்மேற்பழியிலைநவின்றனனையா
வன்றுவந்தொருசேய்க்கருள்புரிந்தாண்டவண்ணலேயொற்றியூரரசே
நின்றுசிற்சபைக்குணடஞ்செயுங்கருணைநிலயமேநின்மலச்சுடரே. (௩)

சுடர்கொளுமணிப்பூண்முலைமடவியர்தந்தொடக்கினிற்பட்டழன்றேயா
விடர்கொளுமெனைநீயாட்கொளுநாடானெந்தநாளந்தநாளுரையாய்
படர்கொளும்வானோரமுதுணநஞ்சைப்பரிந்துண்டகருணையம்பரமே
குடர்கொளுஞ்சூலப்படையுடையவனேகோதையோர்கூறுடையவனே. (௪)

உடைமைவைத்தெனக்கின்றருள்செயாவிடினுமொப்பிலாய்நின்னடிக்கெனையே
யடைமைவைத்தேனுநின்னருட்பொருளிங்களித்திடவேண்டுமின்றெவைக்குங்
கடைமையேன்வேறோர்தேவரையறியேன்கடவுணின்றிருவடியறிக
படைமைசேர்கரத்தெம்பசுபதிநீயேயென்னுளம்பார்த்துநின்றாயே. (௫)

பார்த்துநிற்கின்றாயாவையுமெளியேன்பரதவித்துறுகணுனெஞ்சம்
வேர்த்துநிற்கின்றேன்கண்டிலைகொல்லோவிடமுண்டகண்டனீயன்றே
வார்த்துநிற்கின்றாணாம்புலவேடரவர்க்கிலக்காவனேதமியே
னோர்த்துநிற்கின்றார்பரவுநல்லொற்றியூரில்வாழெண்ணுறவினனே. (௬)

உறவனேயுன்னையுள்கிநெஞ்சழலினுறுமிழுதெனக்கசிந்துருகா
மறவனேன்றன்னையாட்கொளாவிடில்யான்வருந்துவதன்றியென்செய்கே
னிறவனேவெள்ளைநீறணிபவனேநெற்றிமேற்கண்ணுடையவனே
யறவனேதில்லையம்பலத்தாடுமெப்பனேயொற்றியூர்க்கரசே. (எ)

களைபடாவஞ்சப்பவக்கடலுழக்குங்கடையனேனின்றிருவடிக்கு
விளைபடாமலர்போலிருந்துழல்கின்றேன்வெற்றனேனென்செயவிளைகேன்
றிளைபடாக்கருணைச்செல்வவாரிதியேதிருவொற்றியூர்வளர்தேனே
வுளைபடாப்பொன்னேபுளைபடாமணியேயுண்ணுதற்கினியநல்லமுதே. (அ)

நல்லமுதனையார்நின்றிருவடிக்கேநண்புவைத்துருகுகின்றனராற்
புல்லமுதனையேனென்செய்வான்பிறந்தேன்புண்ணியமென்பதொன்றறியேன்
சொல்லமுதனையதோகையோர்பாகந்துன்னியதோன்றலேகனியாக்
கல்லமுதாக்குங்கடனுனக்கன்றோகடையனேன்கழறுவதென்னே. (கூ)

என்னைநின்னவனுக்கொண்டுநின்கருணையென்னுநன்னீரினுலாட்டி
யன்னையப்பனுமாய்ப்பரிவுகொண்டாண்டவண்ணலேநண்ணரும்பொருளே
வுன்னருந்தெய்வநாயகமணியேயொற்றியூர்மேவுமென்னுறவே
நன்னர்செய்கின்றேயென்செய்வேனிதற்குநன்குகைம்மாறுநாயேனே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

# அருள்விடைவேட்கை.

## திருவொற்றியூர்.

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

போகங்கொண்டபுணர்முலைமாதொரு
பாகங்கொண்டபடம்பக்கநாதரோ
மாகங்கொண்டவளம்பொழிலொற்றியின்
மோகங்கொண்டவெம்முன்னின்றருளிரோ. (க)

தவளநீற்றுமெய்ச்சாந்தவினோதரே
பவளமேனிப்படம்பக்கநாதரே
கவளவீற்றுக்கரியுரிபோர்த்தநீ
ரிவளையொற்றிவிட்டெங்ஙனஞ்சென்றிரோ. (உ)

சீலமேவித்திகழனற்கண்ணொன்று
பாலமேவும்படம்பக்கநாதரே
ஞாலமேவுநவையயகற்றமுன்
னாலமுண்டவரல்லிர்கொலையரே. (ந)

உடைகொள்கோவணத்துற்றவழகரே
படைகொள்சூலப்படம்பக்கநாதரே
கடைகொள்நஞ்சுண்டகண்டங்கறுத்தநீ
ரிடையிலொற்றிவிட்டெங்ஙனஞ்சென்றிரோ. (ச)

நிறையவாழ்தொண்டர்நீடுறவன்பவம்
பறையநின்றபடம்பக்கநாதரே
வுறையமாணிக்குயிரளித்திட்டநீர்
குறையிலாவொற்றிச்கோயிற்கணுள்ளிரோ. (ரு)

வணங்கொளுகமணித்தலையைந்துடைப்
பணங்கொள்செல்வப்படம்பக்கநாதரே
கணங்கொள்காமனைக்காய்ந்துயிரீந்தநீர்
வணங்குவார்க்கென்கொல்வாய்திறவாததே. (சு)

நாடநல்லிசைநல்கியமூவர்தம்
பாடல்கேட்கும்படம்பக்கநாதரே
வாடலென்றொருமாணிக்களித்தநீ
ரீடிலென்னளவெங்கொளித்திட்டிரோ. (எ)

சுலவுகாற்றனறாயமண்விண்புனல்
பலவுமாகும்படம்பக்கநாதரே
நிலவுதண்மதிநீள்முடிவைத்தநீர்
குலவுமென்றன்குறைதவிர்க்கீர்கொலோ. (அ)

அடியர்நெஞ்சத்தருட்பெருஞ்சோதியோர்
படிவமாகும்படம்பக்கநாதரே
நெடியமாலுக்குநேமியளித்தநீர்
மிடியனேனருண்மேவவிரும்பிரோ. (கூ)

மதிகொளன்பர்மனமெனுந்திவ்வியப்
பதிகொள்செல்வப்படம்பக்கநாதரே
விதிகொடுன்பத்தைவீட்டியளித்தநீர்
துதிகொள்வீரொன்றுயனைத்துரத்துமே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

# எழுத்தறிபெருமான்மாலை.

திருவொற்றியூர்.

கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

சிந்தைமயங்கித்தியங்குகின்றநாயேனை
முந்தைவினைதொலைத்துன்மொய்கழற்காளாக்காதே
நிந்தையுறுநோயானிகழவைத்தனீதியதோ
வெந்தைநீயொற்றியெழுத்தறியும்பெருமானே. (க)

மத்தனைவன்னெஞ்சகனைவஞ்சகனைவன்பிணிகொள்
பித்தனைவீணுட்போக்கும்பேயேனைநாயேனை
முத்தனையாயுன்றன்முளரித்தாட்காளாக்க
வெத்தனைநாட்செல்லுமெழுத்தறியும்பெருமானே. (உ)

நன்னெறிசேரன்பர்தமைநாடிடவுநின்புகழின்
சென்னெறியைச்சேர்ந்திடவுஞ்செய்தாயெனக்குனக்கு
முன்னறியேன்பின்னறியேன்மூடனேன்கைமாறிங்
கென்னறிவேனையாவெழுத்தறியும்பெருமானே. (௩)

மைப்படியுங்கண்ணார்மயலுழக்கச்செய்வாயோ
கைப்படியவுன்றன்கழல்கருதச்செய்வாயோ
விப்படியென்றப்படியென்றென்னறிவேனுன்சித்த
மெப்படியோவையாவெழுத்தறியும்பெருமானே. (௪)

நில்லாவுடம்பைநிலையென்றேநேசிக்கும்
பொல்லாதநெஞ்சப்புலையனேனிவ்வுலகிற்
சொல்லாமனனோயாற்சோர்வுற்றலையுமல்ல
லெல்லாமறிவாயெழுத்தறியும்பெருமானே. (௫)

தீதறிவேனன்கணுவுஞ்செய்யேன்வீணாட்போக்கும்
வாதறிவேன்வஞ்சகனேன்வல்வினையேன்வாய்மையிலேன்
சூதறிவேன்மாலயனுஞ்சொல்லரியநின்பெருமை
யார்தறிவேனையாவெழுத்தறியும்பெருமானே. (௬)

மாறாதவன்பிணியான்மாழாந்துநெஞ்சயர்ந்தே
கூறாததுன்பக்கொடுங்கடற்குள்வீழ்ந்தடியே
னாறாதரற்றியழுகின்றேனின்செவியி
லேறாதோவையாவெழுத்தறியும்பெருமானே. (௭)

உண்ணாடும்வல்வினையாலோயாப்பிணியுழந்து
புண்ணாகநெஞ்சம்புழுங்குகின்றேன்புண்ணியனே
கண்ணாளாவுன்றன்கருணையெனக்களிக்க
வெண்ணாயோவையாவெழுத்தறியும்பெருமானே. (௮)

புன்செய்கைமாறாப்புலையமடமங்கையர்தம்
வன்செய்கையாலேமயங்குகின்றவஞ்சகனேன்
கொன்செய்கைமாறாதகூற்றன்வருவானே
லென்செய்வேனையாவெழுத்தறியும்பெருமானே. (௯)

சங்குடையான்றாமரையாண்டாண்முடியுங்காண்பரிதாங்
கொங்குடையகொன்றைக்குளிர்சடையாய்கோதையொரு
பங்குடையாயேழைமுகம்பாராதுதள்ளிவிட்டா
லெங்கடைவேனையாவெழுத்தறியும்பெருமானே. (௧௦)

மன்றினிடைநடஞ்செய்மாணிக்கமாமலையே
வென்றிமழுக்கையுடையவித்தகனேயென்றென்று
கன்றினயர்ந்தழுமென்கண்ணீர்துடைத்தருள
வென்றுவருவாயெழுத்தறியும்பெருமானே. (௧௧)

மன்னளவிற்சோதிமணிபோல்வாய்மாதவத்தோர்
தென்னளவும்வேணிச்சிவனேயெனவொருகாற்
சொன்னளவிற்சொன்னவர்தந்துன்பொழிப்பாயென்பரது
வென்னளவிற்காணேனெழுத்தறியும்பெருமானே. (க௨)

மின்போல்வாரிச்சையினல்வெம்புகின்றேனனலுந்
தன்போல்வாயென்னீன்றதாய்போல்வாய்சார்ந்துனையாப்
பொன்போல்வாய்நின்னருளிப்போதடியேன்பெற்றேனே
லென்போல்வாரில்லையெழுத்தறியும்பெருமானே. (க௩)

பூமாந்தும்வண்டெனநின்பொன்னருளைப்புண்ணியர்க
டாமாந்திநின்னடிக்கீழ்ச்சார்ந்துநின்றாரையோநான்
காமாந்தகாரமெனுங்கள்ளுண்கெண்மூடி
யேமாந்தேனெற்றியெழுத்தறியும்பெருமானே. (க௪)

பன்னருமிப்பார்நடையிற்பாடுழன்றபாதகனேன்
றுன்னியநின்பொன்னடியைச்சூழாதேனயிடினும்
புன்னிகரோன்குற்றம்பொறுக்கப்பொறுப்புனக்கே
யென்னருமைத்தாய்நீயெழுத்தறியும்பெருமானே. (க௫)

வீட்டுக்கடங்காவிளையாட்டுப்பிள்ளையெனத்
தேட்டுக்கடங்காதீமனத்தாலாந்துயரம்
பாட்டுக்கடங்காநின்பத்தரடிப்புகழ்போ
லேட்டுக்கடங்காதெழுத்தறியும்பெருமானே. (க௬)

பன்னுமனத்தாற்பரிசிழந்தபாதகனேன்
றுன்னுமலவெங்கதிரோன்சூழ்கின்றசோடையினு
னின்னருணீர்வேட்டுநிலைகலங்கிவாடுகின்றே
னின்னுமறியாயோவெழுத்தறியும்பெருமானே. (க௭)

கல்லைநிகராங்கடைமனம்போங்கானெறியிற்
புல்லைமதித்தையோமைம்பூவிழந்தபொய்யடியே
னெல்லைபடுகின்றவொறுவேதனைதனக்கோ
ரெல்லையறியேனெழுத்தறியும்பெருமானே. (க௮)

பொன்னைமதித்தையாநின்பொன்னடியைப்போற்றாத
கன்னிகருநெஞ்சாற்கலங்குகின்றகைதவனே
னின்னலுழக்கின்றவேழைகட்குமேழைகண்டா
யென்னைவிடாதேயெழுத்தறியும்பெருமானே. (க௯)

மாசுவரோயென்னுமலக்கடலில்வீழ்ந்துலகோ
ராசுவரோயென்னவலைவேனையாளாயேல்
கூசுவரோகைகொட்டிக்கூடிச்சிரித்தடியா
ரேசுவரோயொற்றியெழுத்தறியும்பெருமானே. (௨0)

ஊர்சொல்வேன்பேர்சொல்வேனுத்தமனேநின்றிருத்தாட்
சீர்சொல்வேனென்றனைநீசேர்க்காதகற்றுவையே
னேர்சொல்வாயுன்றனக்குநீதியீதல்லவென்றே
யார்சொல்வாராயாவெழுத்தறியும்பெருமானே. (உக)

நீக்கமிலாமெய்யடியர்நேசமிலாப்பொய்யடியே
னூக்கமிலாநெஞ்சத்தினோட்டகலச்செய்வாயே
றாக்கமிலாவானந்தத்தூக்கமன்றிமற்றுமிங்கோ
ரேக்கமிலேனொற்றியெழுத்தறியும்பெருமானே. (உஉ)

போகின்றவஞ்சகரைப்போக்கியுன்றன்பொன்னடிக்கா
ளாகின்றமேலோரடிவழுத்தாநாயேற்குப்
பாகின்றனிச்சுவையிற்பாங்காகுநின்னருளை
யீகின்றதென்றோவெழுத்தறியும்பெருமானே. (உங)

ஊழையகற்றவுளவறியாப்பொய்யனிவன்
பீழைமனநம்மைப்பெறுதம்மனங்கொடிய
தாழையெனவெண்ணியென்னைத்தள்ளிவிட்டாலென்செய்வே
னேழைநானொற்றியெழுத்தறியும்பெருமானே. (உச)

மடுக்கமுடியாமலவிருட்டிற்சென்றுமனங்
கடுக்கமுடியாப்புலனாற்கட்டிச்சுமக்கவைத்த
தொடுக்கமுடியாததுன்பச்சுமையையினி
யெடுக்கமுடியாதேயெழுத்தறியும்பெருமானே. (உரு)

முள்ளளவுநெஞ்சமுழுப்புலையமாதர்களாங்
கள்ளளவுநாயிற்கடைப்பட்டவென்றனக்கு
வுள்ளளவுமன்பர்க்குதவுமுன்றாட்கன்பொருசிற்
றெள்ளளவுமுண்டோவெழுத்தறியும்பெருமானே. (உசா)

பண்ணமுடியாப்பரிபவங்கொண்டிவ்வுலகி
னண்ணமுடியாநலங்கருதிவாடுகின்றே
னுண்ணமுடியாவமுதாமுன்னையன்றியெவ்வெவர்க்கு
மெண்ணமுடியாதேயெழுத்தறியும்பெருமானே. (உஎ)

வெங்கொளித்தேள்போன்றவினையால்வெதும்பிமன
மங்கொளிக்காதுன்னையழைத்தழுதுவாடுகின்றே
னிங்கொளிக்காநஞ்சமுண்டவென்னருமையப்பாநீ
யெங்கொளித்தாயொற்றியெழுத்தறியும்பெருமானே. (உஅ)

பித்தனைக்குங்காமப்பெரும்பேய்மயக்குமயல்
வித்தனைத்தாமாணவம்பொய்வீறுமழுக்காறுசினங்
கொத்தனைத்தாம்வஞ்சங்கொலைமுதலாம்பாவங்க
ளித்தனைக்குநான்காணெழுத்தறியும்பெருமானே. (உகூ)

ஒல்லையோநஞ்சனைத்துமுண்டதயாநிதிநீ
யல்லையோநின்றிங்கயர்வேன்முன்வந்தொருசொற்
சொல்லையோவொற்றியூர்த்தூயதிருக்கோயிலுணீ
யில்லையோவையாவெழுத்தறியும்பெருமானே. (௩௦)

நினையுடையாய்நீயன்றிநேடிலெங்குமில்லாதாய்
மனையுடையார்மக்களெனும்வாழ்க்கையிடைப்பட்டவமே
யினையுடையானென்றிங்கெனையாள்வதுன்கடனே
யெனையுடையாயொற்றியெழுத்தறியும்பெருமானே. (௩௧)

திருச்சிற்றம்பலம்.

# நெஞ்சொடுநேர்தல்.

திருவெற்றியூர்.

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஒக்கநெஞ்சமேயொற்றியூர்ப்பட்டம்
பக்கநாதனைப்பணிந்துவாழ்த்தினன்
மிக்ககாமத்தின்வெம்மையால்வருந்
துக்கமியாவையுந்தூரவோடுமே. (௧)

ஓடுநெஞ்சமேயொன்றுகேட்டிநீ
நீடுமொற்றியூர்நிமலன்மூவர்கள்
பாடுமெம்படம்பக்கநாதன்று
ணுடுநாடிடிணுடுநெம்மதே. (௨)

நம்புநெஞ்சமேநன்மையெய்துமா
லம்புயன்புகழண்ணலொற்றியூர்ப்
பம்புசீர்ப்படம்பக்கனென்னலார்
தம்புரஞ்சுடுந்தம்பிரானையே. (௩)

தம்பலம்பெறுந்தையலார்களால்
வெம்பலந்தரும்வெய்யநெஞ்சமே
யம்பலத்திநிலமுதையொற்றியூர்ச்
செம்பலத்தைநீசிந்தைசெய்வையே. (௪)

செய்யும்வண்ணநீதேறிநெஞ்சமே
யுய்யும்வண்ணமாமொற்றியூர்க்குளே
மெய்யும்வண்ணமாணிக்கவெற்பருள்
பெய்யும்வண்ணமேபெறுதல்வேண்டுமே. (௫)

வேண்டுநெஞ்சமேமேவியொற்றியூ
ராண்டுநின்றருளரசின்பொற்பதம்
பூண்டுகொண்டுளேபோற்றிநிற்பையேல்
யாண்டுந்துன்பநீயடைதலில்லையே. (௬)

இல்லையுண்டெனவெய்தியையுறுங்
கல்லையொத்தவென்கன்மநெஞ்சமே
யொல்லையொற்றியூருற்றுவாழ்தியே
னல்லைநல்லைநீநட்பின்மேலையே. (எ)

மேலையந்தகன்வெய்யதூதுவ
ரோலைகாட்டுமுன்னொற்றியூரில்வாழ்
பாலைசேர்படம்பக்கநாதர்தங்
காலைநாடிநற்கதியினிற்பையே. (அ)

நிற்பதென்றுநீநீலநெஞ்சமே
யற்பமாதர்தம்மவலநீங்கியே
சிற்பரன்றிருத்தில்லையம்பலப்
பொற்பனொற்றியிற்புகுந்துபோற்றியே. (கூ)

போற்றியொற்றியூர்ப்புண்ணியன்றிரு
நீற்றினன்றனைநினைந்துநிற்பையே
ளேற்றரும்பரஞ்சோதிநல்லரு
ளூற்றெழுங்கடலொக்கநெஞ்சமே. (க0)

திருச்சிற்றம்பலம்.

# திருப்புகழ்விலாசம்.

## திருவொற்றியூர்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

துங்கவெண்பொடியணிந்துநின்கோயிற்றொழும்புசெய்துநின்றுணைப்பதமேத்திச்
செங்கண்மாலயன்றேடியுங்காணுச்செல்வநின்னருள்சேர்குவதென்றோ
வெங்களுள்ளுவந்தூறியவமுதேயின்பமேயிமையான்மகட்கரசே
திங்கடங்கியசடையுடைமருந்தேதிகழுமொற்றியூர்ச்சிவபெருமானே. (க)

கண்ணனோடயன்காண்பருஞ்சுடரேகந்தனென்னுமோர்கனிதருந்தருவே
யெண்ணமேதகுமன்பர்தந்துணையேயிலங்குந்திவ்வியவெண்குணப்பொருப்பே
யண்ணலேதிருவாலங்காட்டுறையுமம்மையப்பனேயடியனேன்றனைத்
திண்ணமேயடித்தொழும்பனுய்ச்செய்வாய்த்திகழுமொற்றியூர்ச்சிவபெருமானே. (உ)

விடங்கலந்தருண்மிடறுடையவனேவேதன்மால்புகழ்விடையுடையவனே
கடங்கலந்தமாவுரியுடையவனேகந்தனைத்தருங்கனிவுடையவனே
யிடங்கலந்தபெண்கூறுடையவனேயெழில்கொள்சாமத்தினிசையுடையவனே
திடங்கலந்தகூர்மழுவுடையவனேதிகழுமொற்றியூர்ச்சிவபெருமானே. (ங)

கஞ்சனோர்தலைநகத்தடர்த்தவனேகாமன்வெந்திடக்கண்விழித்தவனே
தஞ்சமானவர்க்கருள்செயும்பரனேசாமிக்கோர்திருத்தந்தையானவனே
நஞ்சமார்மணிகண்டனேயெவைக்குநாதனேசிவஞானிகட்கரசே
செஞ்சொன்மாமறையேத்துறும்பதனேதிகழுமொற்றியூர்ச்சிவபெருமானே. (ச)

வஞ்சமிலார்நெஞ்சகத்தேமருவுமுக்கண்மாமணியேயுனைநினையேன்வாளாநாளைக், கஞ்சமலர்முகத்தியர்க்கும்வாதிற்றேன் றங்களிப்பினுக்குங்கழிக்கின்றேன்கடையனேனை, நஞ்சமுணக்கொடுத்துமடித் திடினும்வாளானசிப்புறவேதுணித்திடினுநலியத்தியா, லெஞ்சலுறச்சுடினுமன்றியந்தோவின்னுமென்செயினும்போதாதேயெந்தாயெந்தாய். (ரு)

அருள்பழுக்குங்கற்பகமேயரசேமுக்கணாரமுதேநினைப்புகழேனந்தோவஞ்சமருள்பழுக்குநெஞ்சகத்தேன்வாளாநாளைவாதமிட்டுக்கழிக்கின்றேன்மதியிலேனை வெருள்பழுக்குங்கடுங்காட்டில்விடினுமாற்றுவெள்ளத்திலடித்தேகவிடினும்பொல்லா விருள்பழுக்கும்பிலஞ்சேரவிடினுமன்றியென்செயினும்போதாதேயெந்தாயெந்தாய்.

பெருங்கருணைக்கடலேயென்குருவேமுக்கட்பெருமானேநினைப்புகழேன்பேயேனந்தோ, கருங்கன்மனக்குரங்காட்டிவாளாநாளைக்கழிக்கின்றேன்பயனறியாக்கடையனேனை, யொருங்குருளவுடல்பதைப்பவுறுங்குன்றேற்றியுருட்டுகினுமுயிர்நடுங்கவுள்ளமேங்க, விருங்கழுவிலேற்றுகினுமன்றியின்னுமென்செயினும்போதாதேயெந்தாயெந்தாய். (௬)

தொழுகின்றோருளத்தமர்ந்தசுடரோமுக்கட்சுடர்க்கொழுந்தேநின்பதத்தைத்துதியேன்வாதில், விழுகின்றேனல்லோர்கள்வெறுப்பப்பேசிவெறித்துழலுநாயனையேன்விழலனேனை, யுழுகின்றநுகப்படைகொண்டுலையத்தள்ளியுழக்கினுநெட்டுடனடுங்கவுறுக்கிமேன்மே, லெழுகின்றகடலிடைவீழ்த்திடினுமன்றியென்செயினும்போதாதேயெந்தாயெந்தாய். (௭)

விருப்பாகுமதிச்சடையாய்விடையாயென்றேமெய்யன்போடுனைத்துதியேன்வினாந்துவஞ்சக், கருப்பாயும்விலங்கெனவே வளர்ந்தேநாளைக் கழிக்கின்றேன்கருநெஞ்சக்கள்வனேனைப், பொருப்பாயயானையின் காலிடினும்பொல்லாப்புழுத்தலையிற்சொரிபுறம்பொழியநீண்ட, விருப்பாணியேற்றுகினு மன்றியின்னு மென்செயினும்போதாதேயெந்தாயெந்தாய். (எ)

அக்கநுதற்பிறைச்சடையாய் நின்றாளேத்தேனுண்பனைபோன்மிகநீண்டேனறிவொன்றில்லேன், மிக்கவொதிபோற்பருத்தேன்கருங்கடாப்போல்வீண்கருமத்துழல்கின்றேன்விழலனேனைச், செக்கிடைவைத்துடல்குழம்பச் சிதையவந்தோதிருப்பிடினுமிருப்பறைமுட்சேரச்சேர்த்து, வெக்கரிடையுருட்டுகினுமன்றியின்னுமென்செயினும்போதாதேயெந்தாயெந்தாய். (அ)

அன்புடனின்பதம்புகழாப்பாவிநாவையறத்துணியேனின்னழகையமர்ந்துகாணுத், துன்புறுகண்ணிரண்டினையுஞ்சூன்றேனின்னைத்தொழாக்கையைவாளதனுற்றுண்டமாக்கேன், வன்பறநின்றனைவணங்காத் தலையையந்தோ மடித்திலேனேறேபோல்வளர்ந்தேனென்னை, யின்பறவல்லெரியிடைவீழ்த்திடினுமன்றியென்செயினும்போதாதேயெந்தாயெந்தாய். (௯)

தேவேநின்னடிநினையாவஞ்சநெஞ்சைத் தீமூட்டிச்சிதைக்கறியேன்செருக்குகில்லேன், கோவேநின்னடியர்தமைக்கூடாப்பொய்மைக்குடிகொண்டேன்புலைகொண்டகொடியேனந்தோ, நாவேறநினைத்துதியேனலமொன்றில்லேனுய்க்கடைக்குங்கடைப்பட்டேனண்ணுகின்றோர்க், கீவேதுமறியே னிங்கென்னையந்தோ வென்செயினும்போதாதேயெந்தாயெந்தாய். (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# தியாகவண்ணப்பதிகம்.

திருவொற்றியூர்.
கலிநிலைத்துறை.
திருச்சிற்றம்பலம்.

காரார்குழலாளுமையோடயில்வேற்காளையொடுந்தானமர்கின்ற
வேரார்கோலங்கண்டுகளிப்பானெண்ணுமெமக்கொன் றருளானே
னீரார்சடைமேற்பிறையொன் றுடையானிதிக்கோன்றோழனெனநின்றான்
பேராரொற்றியூரான்றியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (க)

தண்ணார்நீபத்தாராளுடுமெந்தாயோடுந்தானமர்கின்ற
கண்ணார்கோலங்கண்டுகளிப்பான்கருதுமெமக்கொன் றருளானேற்
பண்ணாரின்சொற்பதிகங்கொண்டுபடிக்காசளித்தபரமனோர்
பெண்ணார்பாகனொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (உ)

பத்தர்க்கருளும்பாவையொடும்வேற்பாலனொடுந்தானமர்கின்ற
நித்தக்கோலங்கண்டுகளிப்பானினைக்குமெமக்கொன் றருளானேற்
சித்தப்பெருமான்றில்லைப்பெருமான்றெய்வப்பெருமான்சிவபெருமான்
பித்தப்பெருமானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (ங)

மன்னுங்கதிர்வேன் மகனோடும்மலையாளொடுந்தான்வதிகின்ற
துன்னுங்கோலங்கண்டுகளிப்பான் றுதிக்குமெமக்கொன் றருளானேன்
மின்னுஞ்சூலப்படையான்விடையான்வெள்ளிமலையொன்றதுவுடையான்
பின்னுஞ்சடையானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (ச)

அணிவேற்படைகொண்மகனொடுமெம்மம்மையொடுந்தானமர்கின்ற
தணியாக்கோலங்கண்டுகளிக்கத்தகையாதெமக்கொன் றருளானேன்
மணிசேர்கண்டனெண்டோளுடையான்வடபாற்கனகமலைவில்லான்
பிணிபோக்கிடுவானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (ரு)

சூதமெறிவேற்றோன் றலொடுந்தன் றுணைவியொடுந்தானமர்கின்ற
காதற்கோலங்கண்டுகளிப்பான்கருதுமெமக்கொன் றருளானே
லீதல்வல்லானெல்லாமுடையானிமையோரயன்மாற்கிறையானன்
பேதமில்லானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (சு)

வெற்றிப்படைவேற்பிள்ளையோடும்வெற்பாளொடுந்தானமர்கின்ற
மற்றிக்கோலங்கண்டுகளிப்பான்வருந்துமெமக்கொன் றருளானேற்
கற்றைச்சடையான்கண்மூன் றுடையான்கரியோனயனுங்காணுதான்
பெற்றத்திவர்வானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (எ)

வரமன்றலினார்குழலாளொடும்வேன்மகனொடுந்தானமர்கின்ற
திரமன்றவுநின்றெழில்கண்டிடுவான்சிறக்கவெமக்கொன் றருளானேற்
பரமன்றனிமால்விடையொன் றுடையான்பணியேபணியாப்பரிவுற்றான்
பிரமன்றலையானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (அ)

அறங்கொள்ளுமையோடயிலேந்தியவெம்மையனொடுந்தானமர்கின்ற
திறங்கொள்கோலங்கண்டுகளிப்பான்சிறக்கவெமக்கொன்றருளானேன்
மறங்கொள்ளெயின்மூன்றெறித்தான்கனகமலையானடியார்மயறீப்பான்
பிறங்குஞ்சடையானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (கூ)

தேசாரயில்வேன்மகனொடுந்தன்றேவியொடுந்தானமர்கோல
மீசாவெனநின்றேத்திக்காணவெண்ணுமெமக்கொன்றருளானேற்
காசாரரவக்கச்சேரிடையான்கண்ணார்நுதலான்கனிவுற்றுப்
பேசார்க்கருளானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (க0)

திருச்சிற்றம்பலம்.

# ஆடல்முதப்பத்து.

திருவொற்றியூர்—திருத்தில்லை.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

சிந்தைநொந்துநொந்தயர்கின்றேன்சிவனேசெய்வதோர்ந்திலேன்றீக்குணமுடையேன்
வந்துநின்னடிக்காட்செயவென்றால்வஞ்சநெஞ்சமென்வசநின்றதிலையே
யெந்தைநின்னருளுண்டெனிலுய்வேனில்லையென்னினுனில்லையுய்ந்திடலே
யந்திவானிறத்தொற்றியூரரசேயம்பலத்தினின்றாடல்செய்யமுதே. (க)

மாயநெஞ்சமோநின்னடிவழுத்தாவண்ணமென்றனைவலிக்கின்றதனாற்
றீயனாயினேனென்செய்வேன்சிவனேதிருவருட்குநான்சேயனுமானேன்
காயவாழ்க்கையிற்காமமுண்டுள்ளங்கலங்குகின்றனன்களைகண்மற்றறியே
னாயவொற்றியூரண்ணலேதில்லையம்பலத்தினின்றாடல்செய்யமுதே. (உ)

உன்னையுன்னிநெக்குருகிநின்றேத்தவுள்ளமென்வசமுற்றதின்றேனு
மென்னையாளுதலுன்கடனன்றேலிரக்கமென்பதுன்னிடத்திலையன்றே
முன்னைவல்வினைமுடித்திடிற்சிவனேமூடனேனுக்குமுன்னிற்பதெவனோ
வன்னையப்பனேயொற்றியூரரசேயம்பலத்தினின்றாடல்செய்யமுதே. (ங)

என்னநான்சொலிநிறுத்தினுநில்லாதேகுகின்றதிவ்வேழையேன்மனந்தா
னுன்னதின்னருளொருசிறிதுண்டேலொடிக்கிநிற்பனாலுண்மைமற்றின்றே
லின்னதென்றறியாமலவிருளிலிடர்கொள்வேனன்றியென்செய்வேன்சிவனே
யன்னதுன்செயலொற்றியூரரசேயம்பலத்தினின்றாடல்செய்யமுதே. (ச)

பாவிநெஞ்சமென்பாலிராதோடிப்பாவையார்மயற்படிந்துழைப்பதனாற்
சேவியாதவென்பிழைபொறுத்தாலுஞ்செய்கைநின்னதேசெப்பலென்சிவனே
காவிநேர்விழிமலைமகள்காணக்கடலினஞ்சுண்டுகண்ணனாதியர்க
ளாவிநீந்தருளொற்றியெம்மிறையேயம்பலத்தினின்றாடல்செய்யமுதே. (ரு)

மூடநெஞ்சமென்மொழிவழிநில்லாமோகவாரியின்முழுகுகின்றதுகாண்
டேடவென்வசமன்றதுசிவனேதிருவருட்கடற்றிவலையொன்றுறுமே
னாடநாடியநலம்பெறுமதனானுமுய்குவேனல்கிடல்வேண்டு
மாடலொற்றியாய்பெரும்பற்றப்புலியூரம்பலத்தினின்றாடல்செய்யமுதே. (சூ)

# தியாகவண்ணப்பதிகம்.

திருவொற்றியூர்.
கலிநிலைத்துறை.
**திருச்சிற்றம்பலம்.**

காரார்குழலாளுமையோடயில்வேற்காளையொடுந்தானமர்கின்ற
வேரார்கோலங்கண்டுகளிப்பானெண்ணுமெமக்கொன்றருளானே
னீரார்சடைமேற்பிறையொன்றுடையானிதிக்கோன்றோழனெனநின்றோன்
பேராரொற்றியூரான்றியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (க)

தண்ணார்நீபத்தாரானோடுமெந்தாயோடுந்தானமர்கின்ற
கண்ணார்கோலங்கண்டுகளிப்பான்கருதுமெமக்கொன்றருளானேற்
பண்ணாரின்சொற்பதிகங்கொண்டுபடிக்காசளித்தபரமனோர்
பெண்ணார்பாகனொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (உ)

பத்தர்க்கருளும்பாவையொடும்வேற்பாலனொடுந்தானமர்கின்ற
நித்தக்கோலங்கண்டுகளிப்பாநினைக்குமெமக்கொன்றருளானேற்
சித்தப்பெருமான்றில்லைப்பெருமான்றெய்வப்பெருமான்சிவபெருமான்
பித்தப்பெருமானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (ங)

மன்னுங்கதிர்வேன்மகனோடும்மலையாளொடுந்தான்வதிகின்ற
துன்னுங்கோலங்கண்டுகளிப்பான்றுதிக்குமெமக்கொன்றருளானேன்
மின்னுஞ்சூலப்படையான்விடையான்வெள்ளிமலையொன்றதுவுடையான்
பின்னுஞ்சடையானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (ச)

அணிவேற்படைகொண்மகனொடுமெம்மம்மையொடுந்தானமர்கின்ற
தணியாக்கோலங்கண்டுகளிக்கத்தகையாதெமக்கொன்றருளானேன்
மணிசேர்கண்டனெண்டோளுடையான்வடபாற்கனகமலைவில்லான்
பிணிபோக்கிடுவானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (ரு)

சூதமெறிவேற்றோன்றலொடுந்தன்றுணைவியொடுந்தானமர்கின்ற
காதற்கோலங்கண்டுகளிப்பான்கருதுமெமக்கொன்றருளானே
வீதல்வல்லானெல்லாமுடையானிமையோரயன்மாற்கிறையானோன்
பேதமில்லானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (சூ)

வெற்றிப்படைவேற்பிள்ளையோடும்வெற்பாளொடுந்தானமர்கின்ற
மற்றிக்கோலங்கண்டுகளிப்பான்வருந்துமெமக்கொன்றருளானேற்
கற்றைச்சடையான்கண்மூன்றுடையான்கரியோனயனுங்காணாதான்
பெற்றத்திவர்வானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (எ)

வரமன்றலினார்குழலாளொடும்வேன்மகனொடுந்தானமர்கின்ற
திரமன்றவுநின்றெழில்கண்டிடுவான்சிறக்கவெமக்கொன்றருளானேற்
பரமன்றனிமால்விடையொன்றுடையான்பணியேபணியாப்பரிவுற்றோன்
பிரமன்றலையானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (அ)

அறங்கொள்ளுமையோடயிலேந்தியவெம்மையனொடுந்தானமர்கின்ற
திறங்கொள்கோலங்கண்டுகளிப்பான்சிறக்கவெமக்கொன்றருளானேன்
மறங்கொள்ளெயின்மூன்றெறித்தான்கனகமலையானடியார்மயதீப்பான்
பிறங்குஞ்சடையானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (கூ)

தேசாரயில்வேன்மகனொடுந்தன்றேவியொடுந்தானமர்கோல
மீசாவெனநின்றேத்திக்காணவெண்ணுமெமக்கொன்றருளானேற்
காசாரரவக்கச்சேரிடையான்கண்ணார்நுதலான்கனிவுற்றுப்
பேசார்க்கருளானொற்றித்தியாகப்பெருமான்பிச்சைப்பெருமானே. (க0)

திருச்சிற்றம்பலம்.

# ஆடல்முதப்பத்து.

திருவொற்றியூர்—திருத்தில்லை.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

சிந்தைநொந்துநொந்தய்ர்கின்றேன்சிவனேசெய்வதோர்ந்திலேன்றீக்குணமுடையேன்
வந்துநின்னடிக்காட்செயவென்றால்வஞ்சநெஞ்சமென்வசநின்றதிலையே
யெந்தைநின்னருளுண்டெனிலுய்வேனில்லையென்னினுனில்லையுய்ந்திடலே
யந்திவானிறத்தொற்றியூரரசேயம்பலத்தினின்றாடல்செய்யமுதே. (க)

மாயநெஞ்சமோநின்னடிவழுத்தாவண்ணமென்றனைவலிக்கின்றததனாற்
றீயனாயினேனென்செய்வேன்சிவனேதிருவருட்குநான்சேயனுமானேன்
காயவாழ்க்கையிற்காமமுண்டுள்ளங்கலங்குகின்றனன்களைகண்மற்றறியே
னாயவொற்றியூரண்ணலேதில்லையம்பலத்தினின்றாடல்செய்யமுதே. (உ)

உன்னையுன்னிநெக்குருகிநின்றேத்தவுள்ளமென்வசமுற்றதின்றேனு
மென்னையாளுதலுன்கடனன்றேலிரக்கமென்பதுன்னிடத்திலையன்றே
முன்னைவல்வினைமுடித்திடிற்சிவனேமூடனேனுக்குமுன்னிற்பதெவனோ
வன்னையப்பனேயொற்றியூரரசேயம்பலத்தினின்றாடல்செய்யமுதே. (ங)

என்னநான்சொலிநிறுத்தினுநில்லாதேகுகின்றதிவ்வேழையேன்மனந்தா
னுன்னதின்னருளொருசிறிதுண்டேலொடிக்கிநிற்பனாலுண்மைமற்றின்றே
லின்னதென்றறியாமலவிருளிவிடர்கொள்வேனன்றியென்செய்வேன்சிவனே
யன்னதுன்செயலொற்றியூரரசேயம்பலத்தினின்றாடல்செய்யமுதே. (ச)

பாவிநெஞ்சமென்பாலிராதோடிப்பாவையார்மயற்படிந்துழைப்பதனாற்
சேவியாதவென்பிழைபொறுத்தாலுஞ்செய்கைநின்னதேசெப்பலென்சிவனே
காவிநேர்விழிமலைமகள்காணக்கடலினஞ்சுண்டுகண்ணனாதியர்க
ளாவியீந்தருளொற்றியெம்மிறையேயம்பலத்தினின்றாடல்செய்யமுதே. (ரு)

மூடநெஞ்சமென்மொழிவழிநில்லாமோகவாரியின்முழுகுகின்றதுகாண்
டேடவென்வசமன்றதுசிவனேதிருவருட்கடற்றிவலையொன்றுறுமே
னாடநாடியநலம்பெறுமதனானுமுய்குவேனல்கிடல்வேண்டு
மாடலொற்றியாய்பெரும்பற்றப்புலியூரம்பலத்தினின்றாடல்செய்யமுதே. (சு)

கலங்குகின்றவென் கண்ணுனதருளோர்கடுகெனெல்லதான்கலந்திடுமோனல்
விலங்குகின்றவென்னெஞ்சநின்றிடுமால்வேறுநான்பெறும்வேட்கையுமின்றுன்
மலங்குகின்றதைமாற்றுவனுனதுமலர்ப்பொற்றுளலான்மற்றிலன்சிவனே
யலங்குகின்றசீரொற்றியூரிறையேயம்பலத்திினின்றுடல்செய்யமுதே. (எ)

மறைவதென்னையுமறைப்பதுபொல்லாவஞ்சநெஞ்சமென்வசப்படவிலைகா
ணிறைவநின்னருட்கென்செய்வோமெனவேயெண்ணியெண்ணிநானேங்குகின்றனனு
லுறைவதுன்னடிமலரன்றிமற்றென்றுணர்ந்திலேனிஃதுண்மைநீயறிதி
யறைவதென்னநானொற்றியூரரசேயம்பலத்திினின்றுடல்செய்யமுதே. (அ)

ஒருகணப்பொழுதேனுநின்னடியையுள்கிடாதுளமோடுகின்றதனுற்
றிருகணப்பெறுந்தீயனேன்செய்யுந்திறமறிந்திலேன்செப்பலென்சிவனே
வருகணத்துடனிற்குமோவிழுமோமாயுமோவெனமயங்குவேன்றன்னை
யருகணைத்தருளொற்றியூரிறையேயம்பலத்திினின்றுடல்செய்யமுதே. (கூ)

யாதுநின்கருத்தறிந்திலேன்மனமோவென்வசப்படாதிருத்தலையுழைத்தேன்
றீதுசெய்யினும்பொறுத்தெனைச்சிவனேதீயவல்வினைச்சேர்ந்திடாவண்ணம்
பாதுகாப்பதுன்பரமின்றேற்பலவாய்ப்பகர்தலென்னகாண்பழிவருமுனக்கே
யாதுகாண்டியெம்மொற்றியூரரசேயம்பலத்திினின்றுடல்செய்யமுதே. (கo)

திருச்சிற்றம்பலம்.

# திருவடிச்சரண்புகல்.

திருவொற்றியூர்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

**திருச்சிற்றம்பலம்.**

ஓடலெங்கணுநமக்கென்னகுறைகாணுற்றநற்றுணையொன்றுமில்லார்போல்
வாடனெஞ்சமேவருதியென்னுடனேமகிழ்ந்துநாமிருவருஞ்சென்றுமகிழ்வாய்
கூடனேர்திருவொற்றியூரகத்துக்கோயின்மேவிநங்குடிமுழுதாளத்
தாடலந்தருநமதருட்செல்வத்தந்தையாரடிச்சரண்புகலாமே. (க)

எங்கிநோகின்றதெற்றினுக்கோநீயெண்ணிவேண்டியதியாவையுமுனக்கு
வாங்கியீகுவனென்றுக்குமஞ்சேன்மகிழ்ந்துநெஞ்சமேவருதியென்னுடனே
யோங்கிவாழொற்றியூரிடையரவுமொளிகொடிங்களுங்கங்கையுஞ்சடைமேற்
றூங்கிவாழுநந்தாணுவாஞ்செல்வத்தந்தையாரடிச்சரண்புகலாமே. (உ)

கயவரில்லிடைக்கலங்கலைநெஞ்சேகாமவைம்புலக்கள்வனைவீட்டி
வயமளிக்குவன்காண்டியென்மொழியைமறுத்திடேலின்றுவருதியென்னுடனே
யுயவளிக்குநல்லொற்றியூரமர்ந்தங்குற்றுவாழ்த்திநின்றுன்னுகின்றவர்க்குத்
தயவளிக்குநந்தனிமுதற்செல்வத்தந்தையாரடிச்சரண்புகலாமே. (ஈ)

சண்டவெம்பவப்பிணியினுற்றந்தைதாயிலானெனத்தயங்குகின்றுயே
மண்டலத்துழனெஞ்சமேசுகமாவாழவேண்டிடில்வருதியென்னுடனே
யொண்டலத்திருவொற்றியூரிடத்துமுன்னுகின்றவருள்ளகமெனுமோர்
தண்டலத்தினுஞ்சார்ந்தநஞ்செல்வத்தந்தையாரடிச்சரண்புகலாமே. (ச)

விடங்கொள்கண்ணினாரடிவிழுந்தையோவெட்கினாயிந்தவிதியுனக்கேனோ
மடங்கொணெஞ்சமேநினக்கின்றுநல்லவாழ்வுவந்ததுவருதியென்னுடனே
யிடங்கொள்பாரிடைநமக்கினியொப்பாரியார்கண்டாயொன்றுமெண்ணலைகமலத்
தடங்கொளொற்றியூரமர்ந்தநஞ்செல்வத்தந்தையாரடிச்சரண்புகலாமே. (ரு)

பொருந்தியீனருட்புகுந்துவீண்காலம்போக்கினின்றனைபோனதுபோக
வருந்தியின்னுமிங்குழன்றிடேனெஞ்சேவாழ்கவாழ்கநீவருதியென்னுடனே
திருந்தினின்றநம்மூவர்தம்பதிகச்செய்யதீந்தமிழ்த்தேறலுண்டருளைத்
தருந்தென்னொற்றியூர்வாழுநஞ்செல்வத்தந்தையாரடிச்சரண்புகலாமே. (சு)

நாட்டமுற்றெனையெழுமையும்பிரியாநல்லநெஞ்சமேநங்கையர்மயலால்
வாட்டமுற்றிவண்மயங்கினையையோவாழவேண்டிடில்வருதியென்னுடனே
கோட்டமற்றிருமலர்க்கரங்கூப்பிக்கும்பிடும்பெருங்குணத்தவர்தமக்குத்
தாட்டலந்தருமொற்றியூர்ச்செல்வத்தந்தையாரடிச்சரண்புகலாமே. (எ)

உடுக்கவேண்டிமுன்னுடையிழந்தார்போலுள்ளவாகுமென்றுன்னிடாதின்ப
மடுக்கவேண்டிமுன்வாழ்விழந்தாயேவாழவேண்டிடில்வருதியென்னுடனே
யடுக்கவேண்டிநின்றழுதழுதேத்தியருந்தவத்தினரழிவுறுப்பவத்தைத்
தடுக்கவேண்டுநல்லொற்றியூர்ச்செல்வத்தந்தையாரடிச்சரண்புகலாமே. (அ)

மோகமாதியால்வெல்லுமைம்புலனாமூடவேடரைமுதலறவெறிந்து
வாகையீகுவன்வருதியென்னுடனேவஞ்சவாழ்க்கையின்மயங்குமென்னெஞ்சை
போகநீக்கிநற்புண்ணியம்புரிந்துபோற்றிநாடொறும்புகழ்ந்திடுமெவர்க்குஞ்
சாகைநீத்தருளொற்றியூர்ச்செல்வத்தந்தையாரடிச்சரண்புகலாமே. (கூ)

பசியெடுக்குமுன்னமுதுசேகரிப்பார்பாரினோர்களப்பண்பறிந்திலையோ
வசியெடுக்குமுன்பிறப்பதைமாற்றுமதியினெஞ்சமேவருதியென்னுடனே
நிசியெடுக்குநற்சங்கவையீன்றநித்திலக்குவைநெறிப்படவோங்கிச்
சசியெடுக்குநல்லொற்றியூர்ச்செல்வத்தந்தையாரடிச்சரண்புகலாமே. (கo)

திருச்சிற்றம்பலம்.

## சிவாநந்தப்பத்து.

திருவொற்றியூர்—திருத்தில்லை.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

இச்சையுண்டெனக்குன்றிருமலர்த்தாளெய்தும்வண்ணமிங்கென்செயவல்லேன்
கொச்சைநெஞ்சமென்குறிப்பினில்லாதுகுதிப்பினின்றதுமதிப்பினிவ்வுலகிற்
பிச்சையுண்டெனிற்பிச்சரிற்சிறும்பேயருண்மனாயெனவுழைத்தேன்
செச்சைமேனியெந்திருவொற்றியரசேதில்லையோங்கியசிவாநந்தத்தேனே. (க)

ஐயநின்னுடையன்பர்களெல்லாமழிவிலின்பமுற்றருகிருக்கின்றார்
வெய்யநெஞ்சகப்பாவியேன்கொடியவீணனேனிங்குவீழ்கதிக்கிடமாய்
வையவாழ்க்கையின்மயங்குகின்றனன்மேல்வருவதோர்ந்திலன்வாழ்வடைவேனோ
செய்யவண்ணனேயொற்றியம்பொருளேதில்லையோங்கியசிவாநந்தத்தேனே. (உ)

மடிகொணெஞ்சினல்வள்ளலுன்மலர்த்தாண்மறந்துவஞ்சகவாழ்க்கையைமதித்தென்
றுடிகொணேரிடைமடவியர்க்குருகிச்சுழல்கின்றேனருட்சுகம்பெறுவேனே
வடிகொள்வேற்கரத்தண்ணலையீன்றவள்ளலேயெனவாழ்த்துகின்றவர்தஞ்
செடிகணீக்கியவொற்றியம்பரனே தில்லையோங்கியசிவாநந்தத்தேனே. (௩)

இருக்கவாவுறவுலகெலாமுய்யவெடுத்தசேவடிக்கெள்ளளவேனு
முருக்கமொன்றிலேனெறியினிற்பெரியேனெண்மையெய்துதல்வெண்மைமற்றன்றே
தருக்கநின்றவென்றன்மையைநினைக்கிற்றமியனேனுக்கேதலைநடுக்குறுங்காண்
டிருக்கண்மூன்றுடையொற்றியம்பொருளே தில்லையோங்கியசிவாநந்தத்தேனே. (௪)

எண்பெறுவினைக்கேதுசெய்யுடலையெடுத்தநாண்முதலிந்தநாள்வரைக்கு
நண்புறுப்பவமியற்றினனல்லானன்மையென்பதோர்நாளினுமறியேன்
வண்பெறுவெனக்குன்றிருவருளாம்வாழ்வுநேர்ந்திடும்வகையெந்தவகையோ
திண்பெறுநிற்கமருளொற்றியமுதே தில்லையோங்கியசிவாநந்தத்தேனே. (௫)

பேதைநெஞ்சினேன்செய்பிழையெல்லாம்பேசினுற்பெரும்பிணக்கினுக்கிடமாந்
தாதைநீயவையெண்ணலையெளியேன்றனக்குநின்றிருத்தண்ணளிபுரிவாய்
கோதைநீக்கியமுனிவர்கள்காணக்கூத்துகந்தருள்குணப்பெருங்குன்றே
தீதைநீக்கியவொற்றியம்பெருமான்றில்லையோங்கியசிவானந்தத்தேனே. (௬)

வஞ்சநெஞ்சர்தஞ்சேர்க்கையைத்துறந்துவள்ளலுன்றிருமலரடியேத்தி
விஞ்சுநெஞ்சர்தம்மடித்துணைக்கேவல்விரும்பிநிற்குமப்பெரும்பயன்பெறவே
தஞ்சமென்றருணின்றிருக்கோயில்சார்ந்துநின்றனன்றருதன்மற்றின்றே
செஞ்சொலோங்கியவொற்றியெம்பெருமான்றில்லையோங்கியசிவாநந்தத்தேனே. (௭)

புல்லனேன்புவிநடையிடையலையும்புலையநெஞ்சினுற்பொருந்திடுங்கொடிய
வல்லலென்பதற்கெல்லையொன்றறியேன்வருந்துகின்றனன்விருந்தினனாகி
யொல்லையுன்றிருக்கோயின்முன்னடுத்தேனுத்தமாவுன்றனுள்ளமிங்கறியேன்
செல்லனீக்கியவொற்றியம்பொருளே தில்லையோங்கியசிவாநந்தத்தேனே. (௮)

எளியனேன்பிழையியற்றியவெல்லாமெண்ணினுட்படாவேனுமற்றவையை
யளியநல்லருளீந்திடும்பொருட்டாலாய்தனன்றலவாதலினீண்டே
களியநெஞ்சமாங்கருங்கலைக்களைத்துக்கருணையீகுதல்கடனுனக்கையா
தெளியவோங்கியவொற்றியென்னமுதே தில்லையோங்கியசிவாநந்தத்தேனே. (௯)

வெறிபிடிக்கினுமகன்றனைப்பெற்றோர்விடுத்திடாரந்தவெறியதுதிரு
நெறிபிடித்துநின்றுய்வதொன்னரசேநீயுமப்படிநீசனேன்றனக்குப்
பொறிபிடித்தநற்போதகமருளிப்புன்மையாவையும்போக்கிடல்வேண்டுஞ்
செறிபிடித்தவான்பொழிலொற்றியமுதே தில்லையோங்கியசிவாநந்தத்தேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# சந்நிதிமுறையீடு.

திருவொற்றியூர்.

வஞ்சிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஒற்றிமேவியவுத்தமனேமணித்
தெற்றிமேவியதில்லையப்பாவிழி
நெற்றிமேவியநின்மலனேயுனைப்
பற்றிமேவியநெஞ்சமுன்பாலதே. (க)

பாலினீற்றுப்பரஞ்சுடரோமலர்க்
காலினீற்றுக்கதிபெறவேழையேன்
மாலினீற்றுமயக்கறலென்றுகல்
லாலினீற்றுப்பொருளருளாதியே. (உ)

ஆதியேதில்லையம்பலத்தாடல்செய்
சோதியேதிருத்தோணிபுரத்தனே
வோதியேதருமொற்றியப்பாவிது
நீதியேயெனைநீமருவாததே. (ங)

வாதமோதியவஞ்சரைக்காணிலோர்
காதமோடுங்கடியனையாள்வது
நீதமோவன்றிநேருமநீதமோ
வோதமோதொலியொற்றித்தலத்தனே. (ச)

தலத்தனேதில்லைச்சங்கரனேதலைக்
கலத்தனேநெற்றிக்கண்ணுடையாளனே
நலத்தனேயொற்றிநாயகனேயிந்த
மலத்தனேனையும்வாழ்வித்தன்மாண்பதே. (ரு)

மாண்கொளம்பலமாணிக்கமேவிட
மூண்கொள்கண்டத்தெம்மொற்றியப்பாவுன்ற
னேண்கொள்சேவடியின்புகழேத்திடாக்
கோண்கொணெஞ்சக்கொடியனுமுய்வனே. (சு)

உய்யும்வண்ணமிங்குன்னருளெய்தநான்
செய்யும்வண்ணந்தெரிந்திலன்செல்வமே
பெய்யும்வண்ணப்பெருமுகிலேபுர
மெய்யும்வண்ணமெரித்தருளெந்தையே. (எ)

எந்தையேதில்லையெம்மிறையேருகன்
றந்தையேயொற்றித்தண்ணமுதேயென்றன்
முந்தையேழ்பவமூடமயக்கறச்
சிந்தையேதந்திருந்தவருள்வையே. (அ)

திருந்தநான் மறைத்தில்லைச்சிற்றம்பலத்
திருந்தஞானவியலொளியேயொற்றிப்
பொருந்தநின் றருள்புண்ணியமேயிங்கு
வருந்தவென் றனைவைத்ததழகதோ. (கூ)

வைத்தநின்னருள்வாழியவாழிய
மெய்த்ததில்லையின்மேவியவின்பமே
யுய்த்தநல்லருளொற்றியப்பாவெனைப்
பொய்த்தசிந்தைவிட்டுன் றனைப்போற்றவே. (கo)

போற்றவைத்தனைபுண்ணியனேயெனைச்
சாற்றவைத்தனைநின்புகழ்த்தன்மையைத்
தேற்றவைத்தனைநெஞ்சைத்தெளிந்தன்பை
யூற்றவைத்தனையுன்னொற்றிமேவியே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

# தவத்திறம்போற்றல்.

திருவொற்றியூர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

வில்வத்தொடும்பொற்கொன்றையணிவேணிப்பெருமானொற்றிநகர்
செல்வப்பெருமான்சிவபெருமான்றியாகப்பெருமான்றிருவழகைக்
கல்வைப்புடையமனங்களிக்கக்கண்கள்களிக்கக்கண்டுநின்றே
னில்வைப்புடையேனம்மாநானென்னதவந்தான்செய்தேனே. (க)

கூடும்படிமுன் றிருமாலுங்கோலமாகிப்புவியிடந்து
தேடுந்திருத்தாட்சிவபெருமான்றியாகப்பெருமான்றிருப்பவனி
நாடும்புகழ்சேரொற்றிநகர்நாடிப்புகுந்துகண்டேனு
வீடுமெகன்றேனம்மாநானென்னதவந்தான்செய்தேனே. (உ)

ஆர்க்குங்கடற்கணன்றெழுந்தவாலகாலமத்தனையுஞ்
சேர்க்குங்களத்தான்சிவபெருமான்றியாகப்பெருமான்றிருநடத்தைக்
கார்க்கண்பொழில்சூழொற்றியிற்போய்க்கண்டேன்பிறவிகண்டிலனே
யார்க்கென்றுரைப்பேனம்மாநானென்னதவந்தான்செய்தேனே. (ங)

உள்ளும்புறமுநிறைந்தடியாருள்ளமதுரித்தூறுகின்ற
தெள்ளுமமுதாஞ்சிவபெருமான்றியாகப்பெருமான்றிருமுகத்தைக்
கள்ளந்தவிர்க்குமொற்றியிற்போய்க்கண்டேன்பசியைக்கண்டிலனே
யெள்ளலிகந்தேனம்மாநானென்னதவந்தான்செய்தேனே. (ச)

ஆவலுடையாருள்ளுடையாரயன்மான்மகவானுதியராந்
தேவர்பெருமான்சிவபெருமான்றியாகப்பெருமான்றிருவடிவைக்
காவம்பொழில்சூழொற்றியிற்போய்க்கண்டேன்கண்டகாட்சிதனை
யாவர்பெறுவாரம்மாநானென்னதவந்தான்செய்தேனே. (ரு)

மறப்பையகன்றமனத்தரவோர்வாழ்த்தவவர்க்குவான்கதியின்
சிறப்பையளிக்குஞ்சிவபெருமான்றியாகப்பெருமான்றிருநடத்தைப்
பிறப்பையகற்றுமொற்றியிற்போய்ப்பேரானந்தம்பெறக்கண்டே
னிறப்பைத்தவிர்த்தேனம்மாநானென்னதவந்தான்செய்தேனே. (௬)

வில்லாம்படிப்பொன்மேருவினைவினையவாங்கும்வெற்றியினான்
செல்லாங்கருணைச்சிவபெருமான்றியாகப்பெருமான்றிருக்கூத்தைக்
கல்லாங்கொடியமனங்கரையக்கண்டேன்பண்டுகொளாத
வெல்லாங்கண்டேனம்மாநானென்னதவந்தான்செய்தேனே. (௭)

ஒல்லையெயின்மூன்றெரிகொளுவவுற்றுநகைத்தோனொற்றியுளான்
றில்லைநகரான்சிவபெருமான்றியாகப்பெருமான்றிருப்பவனி
கல்லையளியுங்கனியாக்கக்கண்டேன்கொண்டகளிப்பினுக்கோ
ரெல்லையறியேனம்மாநானென்னதவந்தான்செய்தேனே. (௮)

துன்னுஞ்சோமசுந்தரனார்தூயமதுரைநகரளித்த
தென்னர்பெருமான்சிவபெருமான்றியாகப்பெருமான்றிருவழகைப்
பன்னுமொற்றிநகர்தன்னிற்பார்த்தேன்வினைபோம்வழிபார்த்த
வென்னைமறந்தேனம்மாநானென்னதவந்தான்செய்தேனே. (௯)

முன்னங்காழிவள்ளலுக்குமுத்துச்சிவிகைகுடையொடுபொற்
சின்னமளித்தோன்சிவபெருமான்றியாகப்பெருமான்றிருவடிவைக்
கன்னின்றுருகாநெஞ்சுருகக்கண்டேன்கண்டகாட்சிதனை
யென்னென்றுரைப்பேனம்மாநானென்னதவந்தான்செய்தேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

# நெஞ்சுறுத்ததிருநேரிசை.

திருவொற்றியூர்.

நேரிசைவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

பொன்னார்விடைக்கொடியெம்புண்ணியனைப்புங்கவனை
யொன்னார்புரமெரித்தவுத்தமனை - மன்னுய
வத்தனைநம்மொற்றியூரப்பனையெல்லாம்வல்ல
சித்தனைநீவாழ்த்துதிநெஞ்சே. (௧)

நெஞ்சேவுலகநெறிநின்றுநீமயலா
லஞ்சேலென்பின்வந்தருள்கண்டா - யெஞ்சாத்
தவக்கொழுந்தாஞ்சற்குணவர்தாழ்ந்தேத்துமொற்றிச்
சிவக்கொழுந்தைவாழ்த்துதுநாஞ்சென்று. (௨)

சென்றுசென்றுநல்காதசெல்வர்தலைவாயிலிலே
நின்றுநின்றுவாடுகின்றநெஞ்சமே - யின்றுதிரு
வொற்றியப்பன்றாண்மலரையுன்னுதியேற்காதலித்து
மற்றிசைப்பதெல்லாம்வரும். (௩)

வருநாளுயிர்வாழுமாண்பறியோநெஞ்சே
யொருநாளுநீவேறுன்றுன்னே - திருநாளைப்
போவான்றெழுமன்றிற்புண்ணியனையொற்றியிற்ரு
யாவான்றிருவடியல்லால். (சு)

அல்லாலமுண்டமிடற்றாரமுதையற்புதத்தைக்
கல்லாலநீழலமர்கற்பகத்தைச் - சொல்லார்ந்த
விண்மணியையென்னுயிரைமெய்ப்பொருளையொற்றியிலென்
கண்மணியைநெஞ்சேகருது. (ரு)

கருதாயோநெஞ்சேகதிகிடைக்கவெங்கண்
மருதாவெழிற்றில்லைமன்னு - வெருதேறு
மென்னருமைத்தெய்வதமேயென்னருமைச்சற்குருவே
யென்னருமையப்பாவேயென்று. (சூ)

என்றுமுனக்காளாவேனென்னெஞ்சேவன்னெஞ்ச
ரொன்றுமிடஞ்சென்றங்குழலாதே - நன்றுதரு
மொற்றியப்பன்பொன்னடியையுன்னுகின்றோர்தம்பதத்தைப்
பற்றிநிற்பையாகிற்பரிந்து. (எ)

பரிந்துனக்குச்சொல்கின்றேன்பாவங்களெல்லா
மெரிந்துவிழநாங்கதியிலேறத் - தெரிந்து
விடையானையொற்றியூர்வித்தகனைமாதோர்
புடையானைநெஞ்சமேபோற்று. (அ)

போற்றுதியென்னெஞ்சேபுரநகையாற்சுட்டவனை
யேற்றுகந்தபெம்மானையெம்மவனை - நீற்றொளிசே
ரவ்வண்ணத்தானையணிபொழில்சூழொற்றியூர்ச்
செவ்வண்ணத்தானைத்தெரிந்து. (கூ)

தெரிந்துநினக்கனந்தந்தெண்டனிடுகின்றேன்
விரிந்தநெஞ்சேயொற்றியிடைமேவும் - பரிந்தநெற்றிக்
கண்ணனைமாலயனுங்காணப்படாதானை
யெண்ணாயெண்ணுதேயென்று. (க0)

என்றென்றழுதாயிலையேயென்னெஞ்சமே
யொன்றென்றுநின்றவுயர்வுடையா - னன்றென்ற
செம்மைத்தொழும்பர்தொழுஞ்சீரொற்றியூரண்ண
னம்மைத்தொழும்புகொள்ளுநாள். (கக)

நாளாகுமுன்னெனது நன்னெஞ்சேயொற்றியப்பன்
றாளாகுந்தாமரைப்பொற்றண்மலர்க்கே - யாளாகுந்
தீர்த்தர்தமக்கடிமைசெய்தவர்தஞ்சீர்ச்சமுகம்
பார்த்துமகிழ்வாயதுவேபாங்கு. (கஉ)

பாங்குடையார்மெய்யிற்பலித்ததிருநீறணியாத்
தீங்குடையார்தீமனையிற்செல்லாதே - யோங்குடையா
ளூற்றமர்ந்தபாகத்தெம்மொற்றியப்பன்பொன்னருளைப்
பெற்றமர்திநெஞ்சேபெரிது. (கங)

பெரியானைமாதர்ப்பிறைக்கண்ணியானை
யரியானையங்கணனையார்க்குங் - கரியானைத்
தோலானைச்சீரொற்றிச்சுண்ணவெண்ணீற்றானை
மேலானைநெஞ்சேவிரும்பு. (கச)

விரும்பித்திருமால்விலங்காய்நெடுநா
ளரும்பித்தளர்ந்துள்ளயர்ந்தே - திரும்பிவிழி
நீர்கொண்டுங்காணாதநித்தனொற்றியூரனடிச்
சீர்கொண்டுநெஞ்சேதிகழ். (கரு)

திகழ்கின்றஞானச்செழுஞ்சுடரைவானோர்
புகழ்கின்றதெய்வத்தைப்போதத் - நிகழ்கின்ற
வொற்றிக்கனியையுலகுடையநாயகத்தை
வெற்றித்துணையைநெஞ்சேவேண்டு. (கசு)

வேண்டாமைவேண்டுவதுமேவாத்தவமுடையோர்
தீண்டாமையாததுநீதீண்டாதே - யீண்டாமை
யொன்றுவபோனெஞ்சேநீயொன்றியொற்றியூரன்பாற்
சென்றுதொழுகண்டாய்தினம். (கஎ)

தினந்தோறுமுள்ளுருகிச்சீர்பாடுமன்பர்
மனந்தோறுமோங்குமணியை - யினந்தோறும்
வேதமலர்கின்றவியன்பொழில்சூழொற்றிநகர்ப்
போதமலனைநெஞ்சேபோற்று. (கஅ)

போற்றார்புரம்பொடித்தபுண்ணியனைவிண்ணவர்க
ளாற்றாதநஞ்சமுண்டவாண்டகையைக் - கூற்றுவி
கொள்ளுங்கழற்காற்குருமணியையொற்றியிடங்
கொள்ளும்பொருளைநெஞ்சேகூறு. (ககூ)

கூறுமையாட்கீந்தருளுங்கோமானைச்செஞ்சடையி
லாறுமலர்கொன்றையணிவோனைத் - தேறுமன
முள்ளவர்கட்குள்ளபடியுள்ளவனையொற்றியமர்
நள்ளவனைநெஞ்சமேநாடு. (உ0)

நாடுஞ்சிவாயநமவென்றுநாடுகின்றோர்
கூடுந்தவநெறியிற்கூடியே - நீடுமன்பர்
சித்தமனைத்தீபகமாஞ்சிற்பரனையொற்றியூ
ருத்தமனைநெஞ்சமேயோது. (உக)

ஓதுநெறியொன்றுளதென்னுள்ளமேயோர்தியது
தீதுநெறிசேராச்சிவநெறியிற் - போதுநெறி
யோதம்பிடிக்கும்வயலொற்றியப்பன்றெண்டர்திருப்
பாதம்பிடிக்கும்பயன். (உஉ)

பயனறியாய்நெஞ்சேபவஞ்சார்திமாலோ
டயனறியாச்சீருடையவம்மா - னயனறியா
ருள்ளத்தடையானுயரொற்றியூரவன்வா
ழுள்ளத்தவனையுறும். (உங)

தவராயினுந்தேவர்தாமாயினுமற்
றெவராயினுநமக்கிங்கென்னுங் - கவராத
நிந்தையகன்றிடவென்னெஞ்சமேயொற்றியில்வா
ழெந்தையடிவணங்காரேல். (உச)

ஏலக்குழலாரிடைக்கீழ்ப்படுங்கொடிய
ஞாலக்கிடங்கரினைநம்பாதே - நீல
மணிகண்டாவென்றுவந்துவாழ்த்திநெஞ்சேநாளும்
பணிகண்டாயன்னேன்பதம். (உரு)

பதந்தருவான்செல்வப்பயன்றருவான்மன்னுஞ்
சதந்தருவான்யாவுந்தருவா - னிதந்தருமென்
னெஞ்சமென்கொல்வாடுகின்றாய்நின்மலாநின்னடியே
தஞ்சமென்றுலொற்றியப்பன்றான். (உசா)

திருச்சிற்றம்பலம்.

# சி கா ம ணி ம ா லை.

புள்ளிருக்கும் வேளூர்.

கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

வல்வினையேனையிவ்வாழ்க்கைக்கடனின்றும்வள்ளலுன்ற
னல்வினைவாழ்க்கைக்கரையேற்றிமெய்யருணல்குகண்டாய்
கொல்வினையானையுரித்தோய்வயித்தியநாதகுன்றாச்
செல்வினைமேலவர்வாழ்வேயமரர்சிகாமணியே. (க)

பொய்யேபுலம்பிப்புழுத்தலைநாயிற்புரத்திலுற்றேன்
மெய்யேயுரைக்குநின்னன்பர்தஞ்சார்பைவிரும்புகிலேன்
பையேலரவனையேன்பிழைநோக்கிப்பராமுகநீ
செய்யேல்வயித்தியநாதாவமரர்சிகாமணியே. (உ)

கல்லேன்மனக்கருங்கல்லேன்சிறிதுங்கருத்தறியாப்
பொல்லேன்பொய்வாஞ்சித்தபுல்லேனிரக்கம்பொறுமைசிறி
தில்லேனெனினுநின்பாலன்றிமற்றையிடத்திற்சற்றுஞ்
செல்லேன்வயித்தியநாதாவமரர்சிகாமணியே. (ங)

ஆர்ப்பார்கடனஞ்சமுதுசெய்தாய்நின்னடிக்கன்பின்றி
வேர்ப்பார்தமக்கும்விருந்தளித்தாய்வெள்ளிவெற்பெடுத்த
கார்ப்பாளனுக்குங்கருணைசெய்தாய்கடையேன்றுயருந்
தீர்ப்பாய்வயித்தியநாதாவமரர்சிகாமணியே. (ச)

நானேநினக்குப்பணிசெயல்வேண்டுநின்னுண்மலர்த்தா
டானேயெனக்குத்துணைசெயல்வேண்டுந்தயாநிதியே
கோனேகரும்பின்சுவையேசெம்பாலொடுகூட்டுதேறுந்
தேனேவயித்தியநாதாவமரர்சிகாமணியே. (ரு)

மருவார்குழலியர்மையற்கடல்விழும்வஞ்சநெஞ்சால்
வெருவாவுயங்குமடியேன்பிணியைவிலக்குகண்டா
யுருவாயருவுமொளியும்வெளியுமென்றோதநின்ற
திருவார்வயித்தியநாதாவமரர்சிகாமணியே. (சு)

தவநேயமாகுநின்றாணேயமின்றித்தடமுலையா
ரவநேயமேற்கொண்டலைகின்றபேதைக்கருள்புரிவாய்
நவநேயமாகிமனவாக்கிறந்தநடுவொளியாஞ்
சிவனேவயித்தியநாதாவமரர்சிகாமணியே. (எ)

ஐவாயரவிற்றுயில்கின்றமாலுமயனுந்தங்கள்
கைவாய்புதைத்துப்பணிகேட்கமேவுமுக்கண்ணரசே
பொய்வாய்விடாவிப்புலையேன்பிழையைப்பொறுத்தருணீ
செய்வாய்வயித்தியநாதாவமரர்சிகாமணியே. (அ)

புல்வாயின்முன்னர்ப்புலிப்போத்தெனவென்முன்போந்துநின்ற
கல்வாய்மனத்தரைக்கண்டஞ்சினேனைக்கடைக்கணிப்பா
யல்வாய்மணிமிடற்றாரமுதேயருளான்றபெருஞ்
செல்வாவயித்தியநாதாவமரர்சிகாமணியே. (கூ)

ஆர்த்தார்கடனஞ்சமுதுசெய்தாயென்னையன்பர்கள்பாற்
சேர்த்தாயென்றுன்பமனைத்தையுந்தீர்த்துத்திருவருட்கண்
பார்த்தாய்பரமகுருவாகியென்னுட்பரிந்தமர்ந்த
தீர்த்தாவயித்தியநாதாவமரர்சிகாமணியே. (க0)

அறத்தாயையோர்புடைகொண்டோர்புடைமண்ணளந்தமுகி
னிறத்தாயைவைத்துலகெல்லாநடத்துநிருத்தவண்டப்
புறத்தாயென்றுன்பந்தொடைத்தாண்டுமெய்யருட்போதந்தந்த
திறத்தாய்வயித்தியநாதாவமரர்சிகாமணியே. (கக)

அலையோய்கடலிற்சிவயோகமேவியவந்தணர்தந்
நிலையோர்சிறிதுமறியேனெனக்குன்னிமலவருண்
மலையோங்குவாழ்க்கையும்வாய்க்குங்கொலோபொன்மலையென்கின்ற
சிலையோய்வயித்தியநாதாவமரர்சிகாமணியே. (கஉ)

ஊன்கொண்டதேகத்துமுள்ளத்துமேவியுறும்பிணியா
னான்கொண்டதுன்பந்தவிர்ப்பாய்வயித்தியநாதவென்றே
வான்கொண்டநின்னருட்சீரோத்துகின்றவகையறியேன்
றேன்கொண்டகொன்றைச்சடையாயமரர்சிகாமணியே. (௧௩)

களிவேதனுமந்தக்காலனுமென்னைக்கருதவொட்டா
வொளிவேதநாத்திருவுள்ளஞ்செய்வாயன்பருள்ளமென்னுந்
தளிவேதனத்துறுந்தற்பரமேயருட்டண்ணமுதத்
தெளிவேவயித்தியநாதாவமரர்சிகாமணியே. (௧௪)

மால்விடைமேற்கொண்டுவந்தெளியேனுடைவல்வினைக்கு
மேல்விடையீந்திடவேண்டுங்கண்டாயிதுவேசமயம்
நீல்விடமுண்டமிடற்றாய்வயித்தியநாதநின்பாற்
சேல்விடுவாட்கண்ணுமையொடுந்தேவர்சிகாமணியே. (௧௫)

திருச்சிற்றம்பலம்.

# க லி மு றை யீ டு.

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

யொய்விடுகின்றிலனென்றெம்புண்ணியா
கைவிடுகின்றியோகடையனேன்றனைப்
பைவிடமுடையவெம்பாம்புமேற்றநீ
பெய்விடமனையவென்பிழைபொறுக்கவே. (௧)

பொறுக்கினுமன்றியென்பொய்மைநோக்கியே
வெறுக்கினுநின்னலால்வேறுகாண்கிலேன்
மறுக்கினுந்தொண்டனாவலியவாண்டுபின்
சிறுக்கினும்பெருக்கமேசெய்யுஞ்செல்வமே. (௨)

செல்லுஞ்சிறுமையுஞ்சினமும்புல்லனாப்
புல்லலுங்கொண்டவென்பொய்மைகண்டுநீ
கொல்லலுந்தகுமெனைக்கொன்றிடாதருண்
மல்லலுந்தகுஞ்சடாமகுடவள்ளலே. (௩)

வள்ளலேநின்னடிமலர்நண்ணிய
வுள்ளலேன்பொய்மையையுன்னியென்னையாட்
கொள்ளலேயின்றெனிற்கொடியவென்றனை
யெள்ளலேயன்றிமற்றென்செய்கிற்பனே. (௪)

செய்யநன்றறிகிலாச்சிறியனேன்றனைப்
பொய்யனென்றெண்ணிநீபுறம்பொழிப்பையேல்
வையநின்றையவோமயங்கலன்றியா
னுய்யநின்றுணர்குவதொன்றுமில்லையே. (௫)

வேறு.

இல்லையென்பதிலாவருள்வெள்ளமே
தில்லைமன்றிற்சிவபரஞ்சோதியே
வல்லையான்செயும்வஞ்சமெலாம்பொறுத்
தொல்லையின்ப்முதவுதல்வேண்டுமே. (௬)

இல்லையேயென்பதிங்கில்லையென்றரு
ணல்லையேநீயருணயந்துநல்கினுற்
கல்லையேயனையவென்கன்மநெஞ்சக
மொல்லையேவஞ்சம்விட்டுவக்குமுண்மையே. (௭)

வேறு.

உண்மையேயறிகிலாவொதியனேன்படு
மெண்மையேகண்டுமுள்ளிரக்கம்வைத்திலை
யண்மையேயம்பலத்தாடுமையநீ
வண்மையேயருட்பெருவாரில்லையோ. (௮)

அல்லலங்கடலிடையாழ்ந்தநாயினேன்
சொல்லலங்கடல்விடைத்தோன்றனின்னருண்
மல்லலங்கடலிடைமகிழ்ந்துமூழ்கினுற்
கல்லலங்கடன்மனங்கனிதல்மெய்மையே. (௯)

மெய்மையேயறிகிலாவீணனேனிவ
னுய்மையேபெறவுனையுன்னியேத்திடாக்
கைமையேயனையர்தங்கடையிற்செல்லவும்
பொய்மையேயுரைக்கவும்புணர்த்ததென்கொலோ. (௧0)

என்னுடைவஞ்சகவியற்கையாவையும்
பொன்னுடைவிடையினேய்பொறுத்துக்கொண்டுநின்
றன்னுடையன்பர்தஞ்சங்கஞ்சார்ந்துநா
னின்னுடைப்புகழ்தனைநிகழ்த்தச்செய்கவே. (௧௧)

நிகழுநின்றிருவருணிலையைக்கொண்டவர்
திகழுநற்றிருச்சபையதனுட்சேர்க்கமுன்
னகழுமாலேனமாயளவுஞ்செம்மலர்ப்
புகழுமாறருளுகபொறுக்கபொய்மையே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

---

# எதிர்கொட்பத்து.

எண்சீர்க்கழிநெடிலடிச்சந்தவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஆனந்தக்கூத்தனையம்பலத்தானையற்புதத்தேனையெம்மாதிபிரானைத்
தேனந்தக்கொன்றையஞ்செஞ்சடையானைச்செங்கண்விடையனையெங்கண்மணியை
மோனந்தத்தார்பெறுந்தானந்தத்தானைமுத்தனைமுத்தியின்வித்தனைமுத்தை
யீனந்தக்காதெனையேன்றுகொண்டானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே. (௧)

அடுத்தவர்க்கெல்லாமருள்புரிவானையம்பலக்கூத்தனையெம்பெருமானைத்
தடுத்தெமையாண்டுகொண்டன்பளித்தானைச்சங்கரன்றன்னையென்றந்தையைத்தாயைக்
கடுத்ததும்புமணிகண்டத்தினானைக்கண்ணுதலானையெங்கண்ணகலானை
யெடுத்தெனைத்துன்பம்விட்டேறவைத்தானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே.

மாலயன்றேடியுங்காணுமலையைவந்தனைசெய்பவர்கண்டமருந்தை
யாலமமுதினருந்தல்செய்தானையாதியையாதியோடந்தமிலானைக்
காலன்வருந்திவிழவுதைத்தானைக்கருணைக்கடலையென்கண்ணனையானை
யேலமணிகுழலாளிடத்தானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே. (௩)

சுந்தரர்க்காகமுன்றூதுசென்றானைத்தூயனையாவருஞ்சொல்லரியானைப்
பந்தமறுக்கும்பராபரன்றன்னைப்பத்தருளங்கொள்பரஞ்சுடரானை
மந்தரவெற்பின்மகிழ்ந்தமர்ந்தானைவானவரெல்லாம்வணங்கநின்றானை
யெந்தமையாண்டுநல்லின்பளித்தானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே. (௪)

அன்பர்கள்வேண்டுமவையளிப்பானையம்பலத்தேநடமாடுகின்றானை
வன்பர்கணெஞ்சின்மருவலில்லானைவானவர்கோனையெம்வாழ்முதலானைத்
துன்பந்தவிர்த்துச்சுகங்கொடுப்பானைச்சோதியைச்சோதியுட்சோதியைநாளு
மென்பணிகொண்டெனையேன்றுகொண்டானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே.

கண்ணுதலானையென்கண்ணமர்ந்தானைக்கருணைநிதியைக்கறைமிடற்றானை
யொண்ணுதலாளுமைவாழிடத்தானையொருவனையொப்பிலாவத்தமன்றன்னை
நண்ணுதல்யார்க்குமருமையினானைநாதனையெல்லார்க்குநல்லவன்றன்னை
யெண்ணுதல்செய்தெனக்கின்பளித்தானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே.

வெள்விடைமேல்வரும்வீறுடையானைவேதமுடிவினில்வீற்றிருந்தானைக்
கள்விரையார்மலர்க்கொன்றையினானைக்கற்பகந்தன்னைமுக்கண்கொள்கரும்பை
யுள்வினைநீக்கியென்னுள்ளமர்ந்தானையுலகுடையானையென்னுற்றதுணையை
யெள்வினையொன்றுமிலாதவன்றன்னையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே. (௭)

பெண்ணமர்பாகனைப்பேரருளோனைப்பெரியவர்க்கெல்லாம்பெரியவன்றன்னைக்
கண்ணமர்நெற்றிக்கடவுட்பிரானைக்கண்ணனையாண்டமுக்கண்ணனையெங்கள்
பண்ணமர்பாடற்பரிசளித்தானைப்பார்முதலண்டம்படைத்தளிப்பானை
யெண்ணமராதவெழிலுடையானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே. (௮)

வளங்கொளுந்தில்லைப்பொன்மன்றுடையானைவானவர்சென்னியின்மாணிக்கந்தன்
களங்கமிலாதகருத்துடையானைக்கற்பனைமுற்றுங்கடந்துநின்றானை [னைக்
யுளங்கொளுமென்றனுயிர்த்துணையானையுண்மையையெல்லாமுடையவன்றன்னை
யிளம்பிறைசூடியசெஞ்சடையானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே. (௯)

குற்றமெல்லாங்குணமாகக்கொள்வானைக்கூத்துடையானைப்பெண்கூறுடையானை
மற்றவர்யார்க்குமரியவன்றன்னைவந்திப்பவர்க்குமிகவெளியானைப்
பெற்றமதேறும்பெரியபிரானைப்பிறைமுடியோனைப்பெம்மானையெம்மானை
யெற்றியென்றுன்பமெலாமொழித்தானையின்றையிரவிலெதிர்ந்துகொள்வேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

# நெஞ்சொடுநேர்தல்

கோயில்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அணிகொள்கோவணக்கந்தையேநமக்கிங்கடுத்தவாடையென்றறிமடநெஞ்சே
கணிகொண்மாமணிக்கலன்கணங்கடவுட்கண்ணுண்மாமணிக்கண்டிகைகண்டாய்
பிணிகொள்வன்பவநீக்கும்வெண்ணீறேபெருமைச்சாந்தமாம்பிறங்கொளிமன்றிற்
றிணிகொள்சங்கரசிவசிவவென்றுசென்றுவாழ்த்தலேசெய்தொழிலாமே. (௧)

செய்தநன்றிமேற்றீங்கிழைப்பாரிற்றிருப்புமென்றனைத்திருப்புகின்றனைநீ
பெய்தபாலினைக்கமரிடைக்கவிழ்க்கும்பேதையாதலிற்பிறழ்ந்தனையுனைநான்
வைதபோதினும்வாழ்த்தெனநினைத்துமறுத்துநீக்கியவ்வழிநடக்கின்றாய்
கொய்தகோட்டினைநட்டனைவளர்ப்பாய்கொடியநெஞ்சமேமடியகிற்றிலையே. (௨)

இலையெனாதணுவளவுமொன்றீயவெண்ணுகின்றிலையென்பெறுவாயோ
கொலையினாதெனவறிந்திலைநெஞ்சேகொல்லுகின்றவக்கூற்றினுங்கொடியாய்
தலையின்மாலைதாழ்சடையுடைப்பெருமான்றாணினைந்திலையூணினைந்துலகிற்
புலையினார்கள்பாற்போதியோவீணிற்போகப்போகவிப்போக்கினிலழிந்தே. (௩)

அழிந்தவாழ்க்கையினவலமிங்கனைத்துமையமின்றிநீயறிந்தனைநெஞ்சே
கழிந்தவெச்சிலைவிழைந்திடுவார்போற்கலந்துமீட்டுநீகலங்குகின்றனையே
மொழிந்தமுன்னையோர்பெறுஞ்சிவகதிக்கேமுன்னுருவகையென்னுறுமுன்னா
விழிந்தநாயினுங்கடையனாய்நின்றேனென்செய்வேனுனையேனடுத்தேனே. (௪)

தேனெய்யாடியசெஞ்சடைக்கனியைத்தேனைமெய்யருட்டிருவினையடிய
ரூனைநெக்கிடவுருக்கியவொளியையுள்ளத்தோங்கியவுவப்பினைமூவர்
கோனையானந்தக்கொழுங்கடலமுதைக்கோமளத்தினைக்குன்றவில்லியையெம்
மானையம்பலவாணனைநினையாய்வஞ்சநெஞ்சமேமாய்ந்திலையினுமே. (௫)

இன்னுமெங்ஙனமேகுகின்றனையோவேழைநெஞ்சமேயிங்குமங்குந்தான்
முன்னைநாம்பிறந்துழன்றவத்துயரைமுன்னிலென்குலைமுறுக்குகின்றனகா
ணென்னைநீயெனக்குறுதுணையன்றோவென்சொலேற்றிலையெழில்கொளும்பொதுவின்
மன்னுநம்முடைவள்ளலைநினைத்தான்மற்றுநாம்பிறவாவகைவருமே. (௬)

பிறந்துமுன்னரிவ்வுலகினும்பெண்டுபிள்ளையாதியபெருந்தொடக்குழந்தே
யிறந்துவீழ்கதியிடைவிழுந்துழன்றேயிருந்தசேடத்தினித்தனையெல்லா
மறந்துவிட்டனைநெஞ்சமேநீதான்மதியிலாயதுமறந்திலனெளியேன்
றுறந்துநாம்பெறுஞ்சுகத்தினையடையச்சொல்லும்வண்ணநீதொடங்கிடினன்றே. (எ)

நன்றுசெய்வதற்குடன்படுவாயேனல்லநெஞ்சமேவல்லவிவ்வண்ண
மின்றுசெய் திநீநாளையென்பாயேலின்றிருந்தவர்நாளைநின்றிலரோ
வொன்றுகேண்மதிசுகர்முதன்முனிவோருக்கவக்கணஞ்சிக்கெனத்துறந்தா
ரன்றுமுன்னரோகடந்தனரன்றியதற்குமுன்னரோயகன்றனரன்றே. (அ)

அன்றினேர்கிலைநம்முடைப்பெருமானஞ்செழுத்தையுமடிக்கடிமறந்தா
யொன்றிமேற்கதியுறவகையந்தோவுணர்கிலாய்வயிற்றாண்பொருட்டயலோர்
முன்றில்காத்தனையவ்வளவேனுமுயன்றுகாத்திலைமுன்னவன்கோயிற்
றுன்றிநின்றநற்றொண்டர்தந்தொழும்புதொடங்குவானவர்தூயமுன்றிலையே. (கூ)

தூயநெஞ்சமேசுகம்பெறவேண்டிற்சொல்லுவாமதுசொல்லளவன்றாற்
காயமாயமாங்கான்செறிந்துலவுங்கள்வரைவரைக்கைவிடுத்ததன்மேற்
பாயவாணவப்பகைகெடமுறுக்கிப்பகலிராவிலாப்பாங்கரினின்றே
யாயவானந்தக்கூத்துடைப்பரமாகாயசோதிகண்டமருதலணியே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

# நெஞ்சறைகூவல்.

திருவொற்றியூர்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

கண்கண்மூன்றிளுர்க்கறைமணிமிடற்றார்கங்கைநாயகர்மங்கைபங்குடையார்
பண்கணீடியபாடலார்மன்றிற்பாதநீடியபங்கயப்பதத்தா
ரெர்ண்கண்மாதரார்நடம்பயிலொற்றியூரமர்ந்துவாழ்வுற்றவர்க்கேநம்
மண்கொண்மாலைபேர்ம்வண்ணநற்றமிழ்ப்பூமாலைசூட்டுதும்வருதியென்மனனே. (க)

கரியமாலன்றுகரியமாவாகிக்கலங்கநின்றபொற்கழல்புனைபதத்தார்
பெரியவண்டங்கள்யாவையும்படைத்தும்பித்தரொன்னுமப்பேர்தனையகலா
ருரியசீர்கொளுமொற்றியூரமர்ந்தாரும்பர்நாயகர்தம்புயம்புனைய
வரியகன்றநன்மலர்கொடுதெரிந்துமாலைசூட்டுதும்வருதியென்மனனே. (உ)

திருவிளுயகன்கைப்படைபெறுவான்றிருக்கண்சாத்தியதிருமலர்ப்பதத்தார்
கருவினின்றவெம்போல்பவர்தம்மைக்காத்தளிப்பதேகடனெனக்கொண்டா
ருருவினின்றவரருவெனநின்றேரொற்றியூரிடையுற்றனரவர்க்கு
மருவினின்றநன்மணங்கொளுமலர்ப்பூமாலைசூட்டுதும்வருதியென்மனனே. (ங)

கரும்பைந்நாகணைக்கடவுளுன்முகன்வான்கடவுளாதியர்கலக்கஞ்சடவிர்ப்பான்
றரும்பைநாட்டியோர்விஞ்சையன்போலத்தோன்றிநின்றவர்நுரிசறுத்திட்டோன்
றரும்பைம்பூம்பொழிலொற்றியூரிடத்துத்தலங்கொண்டாரவர்தமக்குநாமகிழ்ந்து
வரும்பைஞ்சீர்த்தமிழ்மாலையோடணிபூமாலைசூட்டுதும்வருதியென்மனனே. (ச)

வதனநான்குடைமலர்வன்சிரத்தைவாங்கியோர்கையில்வைத்தநம்பெருமா
னிதனநெஞ்சகர்க்கருடருங்கருணாநிதியமாகியநின்மலப்பெருமான்
சுதனமங்கையர்நடஞ்செயுமொற்றித்தூயனலவர்துணைத்திருத்தோட்கு
மதனவின்றமிழ்மாலையோடணிபூமாலைசூட்டிடுதும்வருதியென்மனனே. (ரு)

கஞ்சனைங்கொருவிஞ்சனமாகிக்காலிற்போந்துமுன்காணருமுடியா
ரஞ்சனங்கொளுநெடுங்கணுளெங்களம்மைகாணநின்றாடியபதத்தார்
செஞ்சொன்மாதவர்புகழ்திருவொற்றித்தேவர்காணவர்திருமுடிக்காட்ட
மஞ்சனங்கொடுவருதுமென்மொழியைமறுதுநீயுடன்வருதியென்மனனே. (சு)

சூழுமாலயன்பெண்ணுருவெடுத்துத்தொழும்புசெய்திடத்தோன்றிநின்றவனைப்
போழும்வண்ணமேவடுகனுக்கருளும்பூதநாதர்நற்பூரணனந்தர்
தாழுந்தன்மையோருயர்வுறச்செய்யுந்தகையரொற்றியூர்த்தலத்தினரவர்தாம்
வாழுங்கோயிற்குத்திருவலகிடுவோமகிழ்வுகொண்டுடன்வருதியென்மனனே. (எ)

விதியுமாலுமுன்வேறுருவெடுத்துமேலுங்கீழுமாய்விரும்புறநின்றோர்
நதியுங்கொன்றையுநாகமும்பிறையுநண்ணியோங்கியபுண்ணியச்சடையார்
பதியுநாமங்களனந்தமுற்றுடையார்பணிகொளொற்றியூர்ப்பரமர்காணவர்தாம்
வதியுங்கோயிற்குத்திருவிளக்கிடுவோம்வாழ்கநீயுடன்வருதியென்மனனே. (அ)

குளங்கொள்கண்ணினார்குற்றமேசெயினுங்குணமென்றேயதைக்கொண்டருள்புரிவோ
ருளங்கொளன்பர்தமுள்ளகத்திருப்போரொற்றியூரிடம்பற்றியபுனிதர்
களங்கொள்கண்டரொண்டோளர்கங்காளர்கல்லைவில்லெனக்கண்டவரவர்தம்
வளங்கொள்கோயிற்குத்திருமெழுக்கிடுவோம்வாழ்கநீயுடன்வருதியென்மனனே. (கூ)

பணிகொண்மார்பினர்பாகனமொழியாள்பாகர்காலனைப்பாற்றியபதத்தார்
திணிகொள்வன்மதமலையுரிபோர்த்தோர்தேவர்நாயகர்திங்களஞ்சடையா
ரணிகொளொற்றியூரமர்ந்திடுந்தியாகரழகரங்வரமைந்துவீற்றிருக்கு
மணிகொள்கோயிற்குத்திருப்பணிசெய்தும்வாழ்கநீயுடன்வருதியென்மனனே. (க௦)

திருச்சிற்றம்பலம்.

# நெஞ்சைத்தேற்றல்.

திருவொற்றியூர்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சென்றுவஞ்சர்தம்புறங்கடைநின்றுதிகைக்கவெண்ணுமென்றிறனிலாநெஞ்சே
யொன்றுமஞ்சலையென்னுடன்கூடியொற்றியூர்க்கின்றுவருதியேலங்கு
மன்றுண்மேவியவள்ளலார்மகிழ்ந்துவாழ்கின்றாரவர்மலரடிவணங்கி
நன்றுவேண்டியயாவையும்வாங்கிநல்குவேனெனைநம்புதிமிகவே. (க)

தீதுவேண்டியசிறியர்தம்மனையிற்சென்றுநின்றுநீதிசைத்திடனெஞ்சே
யாதுவேண்டுதிவருதியென்னுடனேயாணர்மேவியவொற்றியூரகத்து
மாதுவேண்டியநடனநாயகனார்வள்ளலாரங்குவாழ்கின்றார்கண்டா
யீதுவேண்டியதென்னுமுன்னளிப்பாரேற்றுவாங்கிநானீகுவனுனக்கே. (உ)

இரக்கின்றோர்களுக்கில்லையென்றார்பாலிரத்தலீதலாமெனலுணர்ந்திலையோ
கரக்கின்றோர்களைக்கனவினுநினையேல்கருதிவந்தவர்கடியவரெனினும்
புரக்கின்றோர்மலர்ப்புரிசடையுடையார்பூதநாயகர்பொன்மலைச்சிலையா
ருரக்குன்றோர்திருவொற்றியூர்க்கேகியுன்னியேற்குதுமுறுதியென்னெஞ்சே. (௩)

கல்விநெஞ்சர்பாற்கலங்கலென்னெஞ்சேகருதிவேண்டியதியாததுகேண்மோ
சொல்லினோங்கியசுந்தரப்பெருமான்சோலைசூழொற்றித்தொன்னகர்ப்பெருமா
னல்லினோங்கியகண்டத்தெம்பெருமானயனுமாலுநின்றறிவரும்பெருமான்
வல்லையீகுவானீகுவதெல்லாம்வாங்கியீகுவேன்வருதியென்னுடனே. (௪)

இலவுகாக்கின்றகிள்ளைபோலுழன்றாயென்னைநின்மதியேழைநீநெஞ்சே
பலவுவாழைமாக்கனிகனிந்திழியும்பணைகொளொற்றியூர்க்கென்னுடன்வருதி
நிலவுவெண்மதிச்சடையுடையழகர்நிறையமேனியினிகழ்ந்தநீற்றழகர்
குலவுகின்றனர்வேண்டியவெல்லாங்கொடுப்பர்வாங்கிநான்கொடுப்பனுன்றனக்கே.

மன்னுருத்திரர்வாழ்வைவேண்டினையோமாலவன்பெறும்வாழ்வுவேண்டினையோ
வன்னவூர்திபோலாகவேண்டினையோவமையுமிந்திரனாகவேண்டினையோ
வென்னவேண்டினுந்தடையிலைநெஞ்சேயின்றுவாங்கிநானீகுவனுனக்கே
வன்னியஞ்சடையெம்பிரானொற்றிவளங்கொளூரிடைவருதியென்னுடனே. (௬)

மறப்பிலாச்சிவயோகம்வேண்டுகினும்வழுத்தரும்பெருவாழ்வுவேண்டுகினு
மிறப்பிலாதின்னுமிருக்கவேண்டுகினும்யாதுவேண்டினுமீகுவனுனக்கே
பிறப்பிலானெங்கள்பரசிவபெருமான்பித்தனென்றுநீபெயர்ந்திடனெஞ்சே
வறப்பிலானருட்கடலவனமர்ந்துவாழுமொற்றியின்வருதியென்னுடனே. (௭)

காலஞ்செல்கின்றதறிந்திலைபோலுங்காலன்வந்திடிற்காரியமிலைகா
ணீலஞ்செல்கின்றமிடற்றினார்கரத்தினிமிர்ந்தவெண்ணெருப்பேந்தியநிமல
ரோலஞ்செல்கின்றகுழலியோர்புடையாரிருக்குமொற்றியூர்க்கென்னுடன்வருதி
ஞாலஞ்செல்கின்றதுயர்கெடவரங்கணல்குவாரவைநல்குவனுனக்கே. (௮)

சென்றுநீபுகும்வழியெலாமுன்னைத்தேடவென்வசமல்லவென்னெஞ்சே
யின்றனாக்கணமெங்குநேர்ந்தோடாதியல்கொளொற்றியூர்க்கென்னுடன்வருதி
யன்றுவானவருயிர்பெறநஞ்சமருந்திநின்றவெம்மண்ணலாரிடத்தே
நின்றுவேண்டியயாவையுமுனக்குநிகழவாங்கிநானீகுவனன்றே. (௯)

கெடுக்கும்வண்ணமேபலருனக்குறுதிகிளத்துவாரவர்கெடுமொழிகேளே
லடுக்கும்வண்ணமேசொல்கின்றேனெனைநீயம்மையிம்மையுமகன்றிடாமையினாற்
றடுக்கும்வண்ணமேசெய்திடேலொற்றித்தலத்தினுக்கின்றென்றன்னுடன்வருதி
மடுக்கும்வண்ணமேவேண்டியவெல்லாம்வாங்கியீகுவேன்வாழ்தியென்னெஞ்சே.

திருச்சிற்றம்பலம்.

# நெஞ்சறிவுறூஉ.

திருவொற்றியூர்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

என்னதன்றுகர்ண்வாழ்க்கையுட்சார்ந்தவின்பதுன்பங்களிருவினைப்பயனன்
ம்மன்னுமும்மலமடஞ்செறிமனனேவாழ்தியோவிங்குவல்வினைக்கிடமா
யுன்னநல்லமுதாஞ்சிவபெருமானுற்றுவாழ்ந்திடுமொற்றியூர்க்கின்றே
யின்னலற்றிடச்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (க)

துன்பவாழ்வினைச்சுகமெனமனனேசூழ்ந்துமாயையுளாழ்ந்துநிற்கின்றாய்
வன்பதாகியநீயுமென்னுடனேவருதியோவன்றிநிற்றியோவறியே
னென்பதாகியவுருவுடைப்பெருமானொருவன்வாழ்கின்றவொற்றியூர்க்கின்றே
யின்பவாழ்வுறச்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (உ)

ஆட்டுகின்றதற்காகவம்பலத்துளாடுகின்றசேவடிமலர்நினையாய்
வாட்டுகின்றனைவல்வினைமனனேவாழ்ந்துநீசுகமாயினுகண்டாய்
கூட்டுகின்றநம்பரசிவன்மகிழ்விற்குலவுமொற்றியூர்க்கோயில்சூழ்ந்தின்ப
மீட்டுகின்றதற்கேகின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (ங)

வஞ்சவாழ்க்கையைவிடுத்தனனீயேவாரிக்கொண்டிங்குவாழ்ந்திருமனனே
நஞ்சமாயினுமுண்குவைநீதானுனுமங்கதைநயப்பதுநன்றே
தஞ்சமென்றவர்க்கருடரும்பெருமான்றங்குமொற்றியூர்த்தலத்தினுக்கின்றே
யெஞ்சலின்றிநான்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (ச)

உண்மையோதினுமோர்ந்திலைமனனேயுப்பிலிக்குவந்துண்ணுகின்றவர்போல்
வெண்மைவாழ்க்கையினுகர்வினைவிரும்பிவெளுக்கின்றாயுனைவெறுப்பதிலென்னே
தண்மைமேவியசடையுடைப்பெருமான்சார்ந்தவொற்றியந்தலத்தினுக்கின்றே
யெண்மைநீங்கிடச்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (ரு)

நீடுமைம்பொறிநெறிநடந்துலகநெறியிற்கூடிநீநினைப்பொமெறப்பு
நாடுமாயையிற்கிடந்துழைக்கின்றாய்நன்றுநின்செயனின்றிடுமெனனே
யாடுமம்பலக்கூத்தனெம்பெருமானமர்ந்தவொற்றியூராலயத்தின்றே
யீடுநீங்கிடச்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (சு)

கூறுமோர்கணத்தென்னுறுநினைவுகோடிகோடியாய்க்கொண்டதைமறந்து
மாறுமாயையான்மயங்கியமனனேவருதியன்றெனினிற்றியிவ்வளவி
லாறுமேவியவேணியெம்பெருமானமர்ந்தவொற்றியூராலயமதன்பா
லீறினின்புறச்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (எ)

யாதுகண்டனையதனிடத்தெல்லாமணைகின்றாயவமாகநிற்கீந்த
போதுபோக்கினையேயினிமனனேபோதிபோதிநீபோம்வழியெல்லாங்
கோதுநீக்கிநல்லருட்டரும்பெருமான்குலவுமொற்றியூர்க்கோயிலுக்கின்றே
யேதமோடநான்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (அ)

விச்சைவேண்டினைவினையுடைமனனேமேலைநாட்பட்டவேதனையறியாய்
துச்சைநீபடுந்துயருனக்கல்லாற்சொல்லிறந்தநற்சுகம்பலித்திடுமோ
பிச்சையெம்பெருமானெனநினையேற்பிறங்குமொற்றியம்பெருந்தகையவன்பா
லிச்சைகொண்டுநான்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (கூ)

தூக்கமுற்றிடுஞ்சோம்புடைமனனேசொல்வதென்னையோர்சுகமிதுவென்றே
யாக்கமுற்றுநான்வாழநீநரகிலாழநேர்ந்திடுமென்றுகண்டறிகா
ணீக்கமுற்றிடாநின்மலனமர்ந்துநிசழுமொற்றியூர்நியமத்திற்கின்றே
யேக்கமற்றிடச்செல்கின்றேனுனக்குமியம்பினேன்பழியில்லையென்மீதே. (க0)

திருச்சிற்றம்பலம்.

# நெடுமொழிவஞ்சி.

திருவொற்றியூர்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**திருச்சிற்றம்பலம்.**

வார்க்கொண்மங்கையர்முலைமலைக்கேற்றிமறித்துமங்கவர்மடுவினிற்றள்ளப்
பார்க்கின்றாயெனைக்கெடுப்பதிலுனக்குப்பாவமேயலாற்பலன்சிறிதுள்தோ
வீர்க்கின்றாய்கடுங்காமமாம்புலையாவின்றுசென்றுநானேர்பெறுமொற்றி
யூர்க்குண்மேவியசிவனருள்வாளாலுன்னைவெட்டுவலுண்மையென்றுண்ரோ. (க)

கொடியமாதர்களிடையுறுநரகக்குழியிலென்றனைக்கொண்டுசென்றழுத்திக்
கடியவஞ்சனையாலெனைக்கலக்கங்கண்டபாவியேகாமவேட்டுவனே
யிடியநெஞ்சகமிடருழந்திருந்தேனின்னுமென்னைநீயேனிழுக்கின்றா
யொடிவிலொற்றியூர்ச்சிவனருள்வாளாலுன்னைவெட்டுவலுண்மையென்றுணரோ. (உ)

பேதைமாதர்தம்மருங்கிடையாழ்ந்தபிலத்திலென்றனைப்பிடித்தழவீழ்த்தி
வாதையுற்றிடவைத்தனையையோமதியில்காமமாம்வஞ்சகமுறியா
வேதநீத்தருளடியர்தஞ்சார்வாலெழுகின்றேனெனையின்னுநீயிழுக்கி
லோதுமொற்றியூர்ச்சிவனருள்வாளாலுன்னைவெட்டுவலுண்மையென்றுணரோ. (ந)

கோவமென்னுமோர்கொலைப்புலைத்தலைமைக்கொடியனேயெனைக்கூடிநீநின்ற
பாவவன்மையாற்பகையடுத்துயிர்மேற்பரிவிலாமலேபயனிழந்தனன்காண்
சாவநீயிலதேலெனைவிடுகசலஞ்செய்வாயெனிற்சதுர்மறைமுழக்க
மோவிலொற்றியூர்ச்சிவனருள்வாளாலுன்னைவெட்டுவலுண்மையென்றுணரோ. (ச)

சார்ந்தலோபமாந்தயையிலியேடாதாழ்ந்திரப்பவர்தமக்கணுவதனு
ளீர்ந்தவொன்றினையீயவுமொட்டாயிரக்கின்றோர்தரினதுகொளற்கிசைவாய்
சோர்ந்திடாதுநான்றுய்ப்பவுஞ்செய்யாய்சுகமிலாதநீதூரநில்லின்றே
லோர்ந்தவொற்றியூர்ச்சிவனருள்வாளலுன்னைவெட்டுவலுண்மையென்றுணரோ. (ரு)

மோகமென்னுமோர்மூடரிற்சிறந்தோய்முடிவிலாத்துயர்மூலவில்லொழுக்கிற்
போகமென்னுமோரளற்றிடைவிழவும்போற்றுமக்கள்பெண்டன்னைதந்தையராஞ்
சோகவாரியிலழுந்தவுமியற்றிச்சூழ்கின்றாயெனைத்தொடர்ந்திடேற்றேடரி
லோகையொற்றியூர்ச்சிவனருள்வாளாலுன்னைவெட்டுவலுண்மையென்றுணரோ. (சா)

மதமெனும்பெருமத்தனேயெனீவருத்தலோதிஞல்வாயினுக்கடங்கா
சிதமெனும்பரன்செயலினையறியாய்தீங்குசெய்தனர்நன்மையாஞ்செய்தோ
மிதமறிந்தனமெமக்கினியொப்பார்யாவரொன்றனையிழிச்சினையடியார்க்
குதவுமொற்றியூர்ச்சிவனருள்வாளாலுன்னைவெட்டுவலுண்மையென்றுணரே. (எ)

அமைவறிந்திடாவாணவப்பயலேயகிலகோடியுமாட்டுகின்றவன்கா
ணமைநடத்துவோனீதுணராமலின்றுநாம்பரனிணையடிதொழுதோங்
கமைவினைத்திறனுமடியருமானுேங்கனிகின்றேமெனக்கருதிடமயக்கே
லுமையனொற்றியூர்ச்சிவனருள்வாளாலுன்னைவெட்டுவலுண்மையென்றுணரே. (அ)

கருமையாமகங்காரமர்க்கடவாகடையனேயுனைக்கலந்ததனுலே
யருமையாகநாம்பாடினுேங்கல்வியறவறிந்தனமருளையுமடைந்தோ
மிருமையின்பமும்பெற்றனமென்றேயெனமதித்துநானிழிவடைந்தனன்கா
ணொருமையொற்றியூர்ச்சிவனருள்வாளாலுன்னைவெட்டுவலுண்மையென்றுணரே. (௯)

வெண்மைசேரகங்காரமாம்வீணுவிடுவிடென்றனைவித்தகமுணராய்
தண்மையின்றிதற்கிதுவெனத்துணிந்தென்றனையுஞ்சாய்ப்பதுதகவெனநினைத்தா
யண்மைநின்றிடேற்சேய்மைசென்றழிநீயன்றிநிற்றியேலரிமுதலேத்து
முண்மையொற்றியூர்ச்சிவனருள்வாளாலுன்னைவெட்டுவலுண்மையென்றுணரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

# பற்றின்றிறம்பகர்தல்.

திருவொற்றியூர்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வாணைவிடையூர்வரதனையொற்றிவாணனைமலிகடல்விடமா
மூணனையடியேமுளத்தனையெல்லாமுடையனையுள்கிநின்றேத்தா
வீணைமடமைவிழலைமரட்டவேடைமூடைநெஞ்சக்
கோணைமுருட்டுக்குறும்பைக்கண்டாற்கூசுவகூசுவவிழியே. (௧)

மூவரையளித்தமுதல்வனைமுக்கண்மூர்த்தியைத்தீர்த்தனைப்பெரிய
தேவரைக்காத்தசெல்வனையொற்றித்தியாகனைநினைந்துநின்றேத்தாப்
பாவரைவன்யாப்படிற்றரைவாதப்பதடரைச்சிதடரைப்பகைசேர்
கோவரைக்கொடியகுணத்தரைக்கண்டாற்கூசுவகூசுவவிழியே. (உ)

அண்டனையெண்டோளத்தனையொற்றியப்பனையையனைநீல
கண்டனையடியர்கருத்தனைப்பூதகணத்தனைக்கருதிநின்றேத்தா
மிண்டரைப்பின்றுவெளிற்றரைவலியவேற்றரைச்சீற்றரைப்பாபக்
குண்டரைவஞ்சக்குடியரைக்கண்டாற்கூசுவகூசுவவிழியே. (௩)

நாதனைப்பொதுவிநடத்தனையெவர்க்குநல்லனைவல்லனைச்சாம
கீதனையொற்றிக்கிறைவனையெங்கள்கேள்வனைக்கிளர்ந்துநின்றேத்தாத்
தீதரைநரகச்செக்கரைவஞ்சத்திருட்டரைமருட்டரைத்தொலையாக்
கோதரைக்கொலைசெய்கோட்டரைக்கண்டாற்கூசுவகூசுவவிழியே. (௪)

